# அய்யனார் கதைப்பாடல்





டாக்டர் ஆ. தசரதன்

# அய்யனார் கதைப்பாடல்

பதிப்பாசிரியர்

**டாக்டர் ஆ. தசரதன்** எம்.ஏ., பிஎச்டி. டிப்மொழியியல்



**தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்**

3/342 குப்பம் சாலை

கொட்டிவாக்கம், சென்னை - 600 041

Title : **Ayyaṉār Kataippāṭal**
**(A Palm-leaf ballad on Ayyanar)**

Editor : Dr. A. Thasarathan M.A., Ph.D., Dip. in Ling.



First Edition : July, 1994

Pages : vi + 154

Publication No. : 4

Price : Rs.40 US. $ 15

Typesetted by : **M/s Akshara**
303/3, III Floor, Commerce Centre
Teynampet
Madras
Ph: **45 99 13**

Printed at : Pavai Printers (P) Ltd.
142, J.J.Khan Road
Royapettah, Madras 600 014
Phone : **83 24 41**

Copies can be had from :

**Centre for Preservation of Tamil Palm-leaf Manuscripts**
3/342 Kuppam Salai
Kottivakkam, Madras - 600 041.

# பொருளடக்கம்

பக்.எண்

**பா. இராமசந்திர ஆதித்தன் பி.எஸ்சி.** இயக்குநர் : 'மாலைமுரசு'
**தலைவர், தமிழ் ஓலைச்சுவடிகள்** ஆசிரியர் : 'தேவி வார இதழ்'
**பாதுகாப்பு மையம்.** நிறுவனர் : 'கதிரவன்' நாளிதழ்'

## வாழ்த்துரை

'அய்யனார் தமிழர்களின் காவல் தெய்வம் ஆவார். மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழர்கள் அய்யனாரை ஊரின் எல்லைப்புறக் காவல் தெய்வமாக வழிபட்டுவருகின்றனர். மாசாத்தா, சாஸ்தா, ஐயன், ஐயனாரப்பன் எனும் பெயர்களில் தமிழ் கூறும் நல்லுலகங்களிலும் மலையாள நாட்டின் சில பகுதிகளிலும் அய்யனார் கோயில் கொண்டுள்ளார்.

எல்லைப் புறங்களிலுள்ள பல அய்யன் கோயில்கள் அழிந்து வருகின்றன. இருப்பினும் அதற்கு ஈடு செய்யும் வகையில் ஐயப்பன் கோவில்கள் நம் நாட்டின் பல பகுதிகளில் தோன்றி வருகின்றன. அய்யனார் வழிபாட்டிலிருந்து (Ayyanar cult) ஐயப்பசுவாமி வழிபாடு (Iyyappa Swamy cult) வளர்ச்சியுற்றது, என ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தற்காலத்தில் ஐயப்பப் பக்தர்கள் அதிக அளவில் இந்த வழிபாட்டை மேற்கொண்டு வருகின்றார்கள். பல அய்யன் கோவில்களும் புதுப்பிக்கப்பட்டு வருகின்றன. மக்களின் ஒழுக்க வாழ்க்கைக்கும் சமுதாய மேன்மைக்கும் இவ்வகை முயற்சிகள் பலனளிக்கும் என நம்பலாம்.

மூவேந்தர்கள் காலத்தில், மாசாத்தா என்ற அய்யனாரும், செண்டாயுதமேந்திய அய்யனாரும் இன்னும் பல அய்யனார் கோவில்களும் இருந்தன என்பதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் மூலம் அறிகின்றோம். 'ஐயன் நாடு' என்ற பெயரில் 'தனி நாடு' ஒன்று தமிழகத்தின் தென் கீழைக் கடலோரப் பகுதியிலிருந்த தாகச் செவிவழிச் செய்திகள் தெரிவிக்கின்றன. அய்யனார்க்கும் தமிழகத்தில் நாயக்கர்கள் காலத்து அரசியலுக்கும் தொடர்பு இருப்பதாகக் கூறப்படுகிறது. பாண்டிய மன்னர்கள் அவையில் அய்யனார் என்பவர் பணியாற்றியதாகவும் அறிய முடிகின்றது. இவ்வாறு பழங்கால முதல் அண்மைக் காலம் வரையில், பல சமயங்களைச் சார்ந்தும், புராண வரலாற்றுத் தொடர்பும் கொண்டு விளங்கும் அய்யனார் பற்றிய முழுமையான ஆய்வுகள் தமிழில் அதிகமாக வெளிவரவில்லை. சரித்திர,

சமய, சமூக ஆய்வுகள் பல மேற்கொள்ளும் நிலையில் அய்யனார் பற்றிய அரிய செய்திகள் உள்ளன.

அய்யன் கதையைப் பாமரக் கலைஞர்கள் பாட்டாகப் பாடி வைத்துப் பின் ஏட்டிலும் தீட்டியுள்ளனர். இக் கதைப் பாட்டுகள் கோயில் கொடை விழாக்களில் வில்லுப்பாட்டாகப் பாடப் பெறுகின்றன. அய்யன் பிறந்த வரலாறு, அவரது பராக்கிரமச் செயல்கள், அவரின் குதிரை ஏற்றம், யானை ஏற்றம், புலிப்பால் கொண்டு வந்து புரட்சிக்காரர்களை அடக்கிய செயல் போன்ற நிகழ்ச்சிகள் இக்கதைப் பாட்டில் சித்திரிக்கப் பெற்றுள்ளன. இவை இடம் பெற்ற ஓலைச் சுவடிகள் தற்காலத்தில் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று இங்கே நூலாகப் பதிப்புப் பெற்று வெளியிடப் பெற்றுள்ளது.

இந்த அரிய ஓலைச் சுவடியைத் தேடிக் கண்டுபிடித்துப் பதிப்பித்து அச்சேற்றியுள்ள டாக்டர் ஆ. தசரதனை வாழ்த்துகின்றேன். பல அய்யன் கதைப் பிரதிகளை ஆய்வு செய்தும், அய்யனார் - ஐயப்பன் வளர்ச்சி நிலைகளை ஆராய்ந்தும், அய்யனார் கதைப் பாட்டிலுள்ள அரும் பெரும் நயங்களைத் தொகுத்தும் இந்த நூலை அன்னார் பதிப்பித்துள்ளார். தமிழ் ஆய்வு வரலாற்றில் இதுவரை வெற்றிடமாக இருந்த அய்யனார் வழிபாட்டு ஆய்வு இந்த நூல் வெளியீட்டின் மூலம் நிறைவு செய்யப்பட்டுள்ளது என எண்ணுகிறேன்.

இப்படிக்கு
**பா. இராமச்சந்திர ஆதித்தன்.**

# முன்னுரை

## 1. சைவ–வைணவ இணக்கமும் அய்யனார் வழிபாடும்

'அய்யனார்' எனவும் 'சாஸ்தா' என்றும் 'ஐயப்பசுவாமி' எனவும் இன்னும் பல பெயர்களிலும் அழைக்கப்பெறும் அய்யனார் குறுகிய காலத்தில் மிகப்பெரிய வழிபாட்டுத் தெய்வமாகத் தமிழ் நாட்டிலும் மலையாள நாட்டிலும் இந்தியாவின் பிற பாகங்களிலும் போற்றப்பட்டு வருகின்றார்.

புராணங்களில், திருமால் மோகினி வடிவெடுத்த போது அம் மோகினியுடன் சிவபெருமான் சேர்ந்ததால் பிறந்தவரே அய்யனார் எனும் ஐயப்பன் எனக் கூறப்பட்டுள்ளது. நம் இந்தியத் திருநாட்டில் சைவ–வைணவக் கோட்பாடுகளின் இணக்கத்தின் காரணமாகவே அய்யனார் வழிபாடு ஏற்பட்டது எனக் கூறுவர். தமிழ் நாட்டில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் முறையே சைவத்தையும் வைணவத்தையும் வளர்த்தனர். அவர்களுக்குப்பின் ஆங்காங்கே சிறுசிறு பூசல்கள் சைவர்களுக்கும் வைணவர்களுக்குமிடையே ஏற்பட்டு, அதற்கு முடிவு கட்டும் நோக்கத்தில் சைவ–வைணவ ஒருங்கிணைப்பாளர்களால் வணங்கப் பெற்றவரே அய்யனார் என்பர். "அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு" என்னும் சொல்வழக்கு சைவ–வைணவ ஒருங்கிணைப்பாளர்களால் உருவாக்கப் பெற்ற தொடராக இருக்கலாம் எனக் கருதுவது தவறாகாது.

இந்தியத் திருநாட்டின் தென்பகுதியில் தோன்றிய அய்யனார் வழிபாடு இப்போது இந்தியா முழுவதும் பரவியுள்ளது. தமிழ்நாட்டில் அய்யனார் அல்லது சாஸ்தா எனும் காவல் தெய்வமாக அவர் வழிபடப்பட்டு வருகிறார். கேரளம் எனும் மலையாள நாட்டில் சபரி மலையில் ஐயப்ப சுவாமியாக வழிபடப்பெறுகிறார். தமிழ்நாட்டிலும், மலையாள நாட்டிலும் பல பல பெயர்களில் பல வடிவங்களில் வழிபடப்படுகிறார். இந்தியாவின் பிற மாநிலத்தவரும் சபரிமலை சென்று வழிபடும் ஒரு பரந்த வழிபாட்டையும் உருவாக்கி வருகின்றார்.

## 2. அய்யனாரும் ஐயப்பனும்: சிறுதெய்வ, பெருந்தெய்வ வழிபாடுகள்

தமிழ் நாட்டின் ஊர்ப்புறங்களில் காவல் தெய்வமாக அய்யனார் கோவில்களும் சாஸ்தா கோவில்களும் மிகுந்து காணப்படுகின்றன. இதிலிருந்து அய்யனார் என்னும் சாஸ்தா வழிபாட்டை நாட்டுப் புறத் தமிழர் மேற்கொண்டு வருகின்றனர் என அறியலாம். சில ஊர்ப்புறங்களில் அய்யனாரின் தோற்றத்திலும் அவரின் பரிவாரங்களின் தோற்றத்திலும் மாறுபாடு காணப்படுகின்றது. தமிழ்நாட்டின் தென்பகுதி ஊர்ப்புறங்களில் சிறிய சிறிய உருவ அமைப்புடனும், அதற்கு வடபால் பெரிய பெரிய மண் உருவங்களிலும் அய்யனார் வழிபடப்பெற்று வருகின்றார். இவ்வூர்களிலெல்லாம் அய்யனார், பூரணை-புட்கலை என்னும் தம் மனைவியரோடும், பரிவார தெய்வங்களோடும் உள்ளார். இவ்வாறு தமிழ்நாட்டில் அவர் சிறுதெய்வமாக வழிபடப்பெறுகிறார்.

மலையாள நாட்டின் நிலப்பரப்பைக் கடலினின்று ஏற்படுத்திய பரசுராமர் அந் நிலப்பரப்பைப் பாண்டிய நாட்டினின்றும் காக்கும் பொருட்டு மேற்கு மலைத் தொடரின் கீழோரங்களில் ஐயப்ப சுவாமியைக் காவல் தெய்வமாக அமைத்தார் என்பது ஒரு செய்தியாக அந் நாட்டில் வழங்கப்பட்டுவருகின்றது. கேரளம் எனும் மலையாள நாட்டின் கிழக்கு எல்லையிலுள்ள மலைத்தொடர்களில் குழத்துப்புழை, ஆரியங்காவு, அச்சன்கோவில், சபரிமலை, பொன்னம்பலமேடு என்னும் பெரிய காட்டுத் தலங்களில் ஐயப்பசுவாமியின் திருக்கோவில்கள் அமைந்திருப்பதிலிருந்து மேற்குறித்த பரசுராமர் செய்தி தெளிவுபடுகின்றது. தென்மலைக்குத் தெற்கே ஆற்றினிடையே உள்ள குழத்துப்புழையில் பாலகனாகவும், தென்மலைக்குக் கிழக்கே ஆரியங்காவில் இளைஞனாகவும், அதற்கு வடக்கேயுள்ள அச்சன் கோவிலில் பூரணை—புட்கலை எனும் இருமனைவியரோடும், அதற்கு வடபாலிலுள்ள சபரிமலையில் யோக நிலையிலும், அதற்கு அப்பாலிலுள்ள பொன்னம்பல மேட்டில் சோதி வடிவாகவும் ஐயப்பன் தோற்றமளித்து வருகின்றார். இவ்வாறு மலையாளநாட்டில் ஐயப்பன் பெருந்தெய்வமாக, விரதமகிமை மிக்குற்ற ஐயப்ப சாமிப் பக்தர்களாலும் மக்களாலும் வழிபடப்பெறுகிறார். இவ்வமைப்பைப் பார்க்கும் போது பாண்டிநாட்டின் தென்மேற்கிலிருந்து வடமேற்கு எல்லைகளில் குழந்தையிலிருந்து சோதி வடிவான அவரின் பரிணாம வளர்ச்சி உருவங்களைக் காண முடிகின்றது. இத் திருக்கோவில்களுள் சபரிமலையிலுள்ள யோக ஐயப்ப சுவாமியே பக்தர்களைப் பெருந்திரளாக ஈர்த்து ஐயப்ப வழிபாட்டின் மேன்மைக்குச்

சான்றாக அமைந்து வருகிறார் எனில் அது மிகையாகாது. பாண்டிய நாட்டின் ஒருபகுதியாக விளங்கிய பந்தள நாட்டின் எல்லைப்புறங்களில் அமைக்கப்பெற்றவை இத் திருக்கோவில்கள் எனச் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். அய்யனாரைப் பாண்டியனின் போர் வீரன் என்றும், பந்தள நாட்டு மன்னன் எடுத்து வளர்த்த பிள்ளை என்றும் கதைகள் கூறுகின்றன.

இவற்றிலிருந்து அய்யனார் எனும் சாஸ்தா வழிபாடும், ஐயப்பசுவாமி வழிபாடும் பாண்டி நாட்டில் பெரும்பான்மை கடைப்பிடிக்கப் பெற்று வந்திருந்தன என்பதும், தற்போது அவற்றுள் சபரிமலை ஐயப்ப சுவாமி கோவில் வழிபாடு மிக்கோங்கி இருக்கிறது என்பதும் தெரிகின்றன.

தென்பாண்டி நாட்டின் பொதிகைமலைப் பகுதியில் சொரி முத்தையன் கோவிலும், கீழைக் கடலோரப் பகுதியான திருச்செந்தூர் அருகேயுள்ள தேரிப் பகுதியில் அருஞ்சுனை காத்த அய்யனார், கற்குவேல் அய்யனார், போன்ற பத்துக்கும் மேற்பட்ட அய்யனார் கோவில்களும் உள்ளன. தேரியிலுள்ள கோவில்கள் ஈழத்திலிருந்து தென்பாண்டி நாட்டிற்குப் பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்கித் திரும்பிய பிற்காலச் சோழர்களின் வலங்கைப் படையினர் அமைத்து வழிபட்ட அய்யனார் கோவில்களாகும். இவை கி. பி. 14-ஆம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை வழிபடப்பட்டு வருகின்றன என்பது இப்போது மேற்கொண்டுள்ள ஆய்வுகள் மூலம் தெரியவருகின்றது. இப்பகுதியில் குடியேறியவர்கள், அங்கு ஏற்பட்ட வறட்சி, மண்மாரி என்பன காரணமாக விருதுநகர், சிவகாசி போன்ற பல ஊர்களுக்கு வியாபாரிகளாகவும், விவசாயிகளாகவும் குடியேறி இந்த அய்யனார்களில் சிலரை அவ்வப் பகுதிகளில் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருகின்றனர். இவ்வாறு அய்யனார் சிறு தெய்வமாக வழிபடப் பெறுகிறார்.

பொதுவாக, சிறு தெய்வங்களான மாரியம்மன், முத்தாரம்மன், காளியம்மன், இசக்கியம்மன் போன்ற அம்மன் தெய்வங்களும், சுடலை மாட சுவாமி, செங்கிடாய்க்கார சுவாமி, கருப்ப சுவாமி, பைரவர் போன்ற ஆண் தெய்வங்களும் முதலில் கைலாயத்தில் சிவபெருமானின் வேள்வியில் தோன்றி, அவரிடம் வரம் வாங்கி, பின் தெக்கணாபூமியான தென் தமிழ் நாட்டிற்கு வந்து இறங்கி, அதன் பின் ஒவ்வொரு ஊராகச் சென்று இறுதியில் தங்களுக்குரிய ஊர்களில் கோயில் கொண்டு பூசை, பலிகள்

பெற்று, கொடை விழாக்கள் பெற்று இருப்பதாகக் கதைப்பாடல் சுவடிகளிலிருந்து தெரிய வருகின்றன.

இந்த அடிப்படையிலேயே அய்யனார் கதைப்பாடல் சுவடிகளும் கைலாயத்தில் அய்யனார் வளர்ந்தது பற்றியும், சிவபெருமானால் தெற்கு நோக்கிஅனுப்பப்படுவது பற்றியும் முதலில் கூறுகின்றன. பின்பு அவை அய்யனார் தென்பகுதி மலைகளில் கோவில்கொண்டு பூசைகள் பெற்று வழிபடப் பெறுவதைப் பற்றியும் கூறுகின்றன.

இவ்வாறு தமிழ் வில்லுப்பாட்டுக் கதைப்பாடல்களிலும் இலக்கியங்களிலும் சிறு தெய்வங்களைப்பற்றிய ஆய்வுகள் புலவர்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அய்யனாரும் சிறு தெய்வமாகவே தமிழ் நாட்டில் ஊர்ப் புறங்களில் வழிபடப் படுகிறார்.

## 3. அய்யனார் தோற்றம் பற்றிய கதைகள்

அய்யனார் பிறப்பு பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன.

### அ. தாருகாவனத்தில் மோகினியும் சிவனும் சேர்ந்து பிறந்தவர் அய்யனார்

தாருகாவனத்து முனிவர்களின் கர்வத்தை அடக்குவதற்காகத் திருமால், மோகினி உருவம் எடுத்தார் என்றும் அம் மோகினியுடன் சிவன் சேர்ந்து அரிகர புத்திரனாகிய அய்யனார் பிறந்தார் என்றும் ஒரு கதை வழங்குகின்றது.

### ஆ. அமுதம் பங்கிட்ட மோகினியுடன் சிவன் சேர்ந்து பிறந்தவர் அய்யனார்

பாற்கடலைக் கடைந்தபோது வெளிவந்த அமுதத்திற்கு அமரர்களும், அசுரர்களும் உரிமை கொண்டாடினர். அவர்களிடையே போர் மூண்டது. இறுதியில் அசுரர்கள் அமுதத்தை எடுத்துச் சென்று விட்டனர். மனங்கலங்கிய அமரர்கள் திருமாலைச் சரணடைந்து தங்களுக்கு அமுதம் சேர வேண்டுமென்று வேண்டினர். திருமால் மோகினி வடிவம் தாங்கி அமுதினைப் பங்கிடத் தொடங்கிய அசுரர் முன் தோன்றினார்.

பேரெழில் கொண்ட அம் மோகினி வடிவினைக்கண்ட அசுரர்கள் அவள் மீது அளவில்லாத ஆசையுடையவராய் அமுதம் பகிர்ந்தளிக்கும் பொறுப்பினை அவளிடமே ஒப்படைத்தனர். அவளின் அறிவுரைப்படி

அசுரர்கள் கண்களை மூடிக்கொண்டிருக்கும் பொழுது அவள் அங்கிருந்து மறைந்து அமரர்கள் முன்தோன்றி அவர்களுக்கே அமுதத்தை அளித்தாள்.

அசுரர்களிடமிருந்து அமுதத்தை மோகினியாகிய திருமால் பெற்ற செய்தியைச் சிவபெருமான் அறிந்து அம் மோகினியின் பேரெழிலைக் காண விழைந்தார். அவ்வாறே மோகினி வடிவுடன் சிவபெருமான் முன் திருமால் தோன்றினார். மோகினியின் பேரெழிலில் மோகம் கொண்ட சிவன் அவளைக் கட்டித் தழுவிய போது அய்யனார் பிறந்தார் எனப் புராணக்கதை கூறுகின்றது.

**இ. மகிஷி வதத்திற்காக மணிகண்டன் அவதாரமெடுத்தல்**

அய்யனாரின் அவதாரத்திற்கு மற்றொரு காரணமும் புராணங்களில் கூறப்படுகின்றது. கரம்பன் என்னும் அசுரனின் மகளாக எருமைத் தலையுடன் மகிஷி என்பவள் பிறந்தாள். அவள் தன் ஒன்று விட்ட அண்ணனான மகிஷாசுரனைச் சண்டிகாதேவி கொன்றாள் என்பதால் வெகுண்டெழுந்து அச்செயலுக்குப் பரிகாரம் காண எண்ணினாள். அவள் விந்திய மலைக்குச் சென்று பிரமனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தாள். பிரமன் அவள் முன் தோன்றியபோது பின்வருமாறு வரம் கேட்டாள்:

"அரியும் அரனும் ஒன்றாக இணைந்து உண்டாகும் அரிஹரபுத்திரன் கையால்தான் தனக்கு மரணம் ஏற்படலாம்" என்றும், "அரிஹரபுத்திரன் பன்னிரண்டு ஆண்டுகள் மானிடனாக வாழ்ந்தால் மட்டுமே தன்னைக் கொல்லலாம்" என்றும் வரம் வேண்டினாள். பிரமனும் அவள் கேட்ட வண்ணம் வரமீய்ந்தார்.

மகிஷி இவ் வரம் பெற்றமையால் ஆற்றல் மிகுதி உடையவளாய், வீரியம் நிறைந்தவளாய், தேவருலகத்தையே தன் கீழடக்கினாள். மதமேறிய மகிஷியை எதிர்த்து நின்று வெல்லும் ஆற்றல் அமரர்களுக்கில்லை. தேவர்கள் பிரமனிடம் சென்று முறையிட்டனர். பிரமன் அவர்களுடன் சேர்ந்து சிவபெருமானிடம் முறையிட்டார். சிவன் அவர்களுடன் இயைந்து வைகுந்தம் சென்று திருமாலவனைக் கண்டார். அனைத்தையும் அறிந்த திருமால் மதம் பிடித்த மகிஷியை அடக்கவும், அவளைத் தேவருலகினின்றும் இந்தப் பூவுலகிற்குக் கூட்டிச் செல்லவும் திட்டமிட்டார். அதற்காக மும்மூர்த்திகளும் சேர்ந்த சுந்தர மகிஷத்தை உருவாக்கினார். மூவர் ஆற்றலில் தோன்றிய சுந்தர மகிஷத்தை மகிஷி கண்டாள். அவன்மீது

அளவற்ற காதல் பூண்டாள். அவனுக்கே அடிமையானாள். உடன் தானே சுந்தர மகிஷம் விரும்பிய வண்ணம் அவனுடன் மகிஷியும் பூவுலகம் வந்து தங்கலானாள். இந் நிலையில் அச்சம் அகன்ற அமரர்கள் அமரருலகத்தில் வாழத் தொடங்கினர்.

மகிஷி பூவுலகம் வந்தபோதிலும் அவள் தொல்லைகள் அடங்கவில்லை. அவளை அழித்தால்தான் உலகு நலம்பெறும் என நினைத்த திருமால் மகிஷியை அழிப்பதற்காக மோகினி வடிவம் எடுத்தார். அம் மோகினியுடன் சிவபெருமான் சேர்ந்ததால் அவர்களுக்கு அய்யனார் அவதரித்தார்.

அய்யனார் பிறந்தபின் கைலாயத்திலேயே வாழ்ந்தார். பின்னர் மகிஷியை அழிப்பதற்காகப் பனிரெண்டு ஆண்டு மானிடனாகப் பூவுலகில் வாழ்தற் பொருட்டு, அவரைப் பூவுலகிற்குச் சிவபெருமான் அனுப்பி வைத்தார்.

விண்ணினின்று மண்ணில் வந்த அய்யனார் குழந்தை வடிவில் பம்பை நதிக்கரையில் அழுதுகொண்டே கிடந்தார். பாண்டிய மரபில் தோன்றிய பந்தள நாட்டரசர் இராஜசேகரன் அந்நேரம் வேட்டையாடுவதற்காகக் கானகம் வந்திருந்தார். வேட்டையாடிய களைப்புத் தீர மன்னர் ஓய்வெடுப்பதற்குப் பம்பை நதிக்கரையில் சற்று நேரம் தங்கினார். அப்போது கொடிய காட்டில் குழந்தையின் அழுகை ஒலியைக் கேட்டு வியப்படைந்தார். தேடிப்பார்த்து அழுது கொண்டே கிடக்கும் குழந்தையைக் கண்டார். ஒளிமயமான முகப் பொலிவும், எழிலும் உடைய அக்குழந்தையைக் கண்ட மன்னர் சிந்தனையிலாழ்ந்தார். பெற்றோர், உற்றார் யாரையும் அங்குக் காணவில்லை. மன்னர் குழந்தைப் பேறின்றி வாழ்ந்ததால் அதை அரண்மனைக்குக் கொண்டு சென்று வளர்க்கத் தீர்மானித்தார்.

அந்நேரம், திருமால் 'வயது முதிர்ந்தவர் வடிவில்' அங்குத் தோன்றி "அரசே இக்குழந்தையை எடுத்துச் சென்று வளர்ப்பாயாக; கனகமணி கழுத்தில் திகழும் இப்பாலகனை 'மணிகண்டன்' என்று பெயர் சூட்டி வளர்ப்பாயாக" எனக்கூறி மறைந்தார். மன்னவனுடன் குழந்தை வருகையால் மகிழ்வெய்திய அரசி அக்குழந்தை கிடைத்த வரலாறு அறிந்து அளவிலா மகிழ்ச்சியுற்றாள்.

அரசகுமாரனாக அரண்மனையில் மணிகண்டன் வளரலாயினான். அவன் கல்வி, படைக்கலப்பயிற்சி, வேத சாஸ்திரப் பயிற்சி போன்றவற்றில் தேர்ந்து வளர்ந்து வரலானான். குருகுலவாசமும் புரிந்த மணிகண்டன் தன் குருவின் மகன் பிறவியிலேயே பேசாத் தன்மையுடனிருந்ததைத் தன் அருள்நோக்கினால் அகற்றிக் குருவின் நல்லாசியையும் பெற்றான்.

மணிகண்டன் வளர்ந்து வரும் வேளையில் மன்னருக்கு மகப்பேறு வாய்க்கப்பெற்றது. அதன் பின்னர், மன்னனின் தேவி அழகிய ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தாள். மன்னன் பின்பு மணிகண்டனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட நினைத்தான்.

மன்னனின் எண்ணத்தை அறிந்த அமைச்சரோ எவ்வகையிலும் மணிகண்டனுக்கு முடிசூட்டு விழா நடைபெறக் கூடாது என்று எண்ணி, மணிகண்டனை ஒழிக்கத் தீர்மானித்தார். வஞ்சனை நிறைந்த அமைச்சர் மந்திர சூழ்ச்சியால் மணிகண்டன் உடல் முழுவதும் புண் ஏற்படும் படிச் செய்து விட்டார்.

மணிகண்டனுக்கு ஏற்பட்ட நோய் சற்றும் அகலவில்லை. ஒருநாள் வயது முதிர்ந்த முனிவர் ஒருவர் அரண்மனைக்கு வருகை புரிந்து மணிகண்டனின் நோய் அகல மருந்தும் புரிந்து மறைந்தார். அந் நோய் தீர்த்த முனிவர் வேறு யாருமல்ல – மணிகண்டனின் தந்தையான மாலவனே ஆவார்.

வஞ்ச அமைச்சனோ மேலும் மணிகண்டனைக் கொன்றுவிட வேண்டுமெனக் கொடிய நஞ்சினை உணவுடன் கலந்து ஊட்டி விட்டான். மணிகண்டன் எவ்விதத் துன்பமும் அடையாதது கண்ட அமைச்சன் ஏமாற்றம் அடைந்தான். இறுதியில் அமைச்சன் அரசியின் மனத்தை வஞ்சனையில் மாற்றினான். "மணிகண்டனுக்கு மன்னர் முடிசூட்ட எண்ணியுள்ளார். அவ்வாறாயின் தங்கள் மகனுக்கு ஒருநாளும் பந்தள ஆட்சி கிடைக்காது" என்றான். அதனை நம்பிய அரசி சூழ்ச்சி வலையில் சிக்குண்டு, கொடிய தலைவலியால் துடிப்பதுபோல் நடித்தாள். தேவியின் துயர்கண்ட மன்னனும் மற்றோரும் வேதனையுற்றனர். தேவியின் நோய் தீர்க்க அமைச்சன் சூழ்ச்சியால் மருத்துவர் ஒருவர் வரவழைக்கப்பட்டார். தேவியின் தீராத தலைவலி முற்றும் தீரவேண்டுமாயின் புலிப்பால் வேண்டுமென்றார்.

புலிப்பால் கொண்டு வர மணிகண்டன் தானே காட்டிற்குச் செல்ல சித்தமானான். மன்னன் அதற்கு மனம் ஒருப்படவில்லை. ஆயினும் மணிகண்டன் உறுதி தளரவில்லை. இறுதியில் அவன் மன்னரிடமும் விடைபெற்றுக்கொண்டு, புலிப்பால் கொண்டுவர வனம் நோக்கிப் புறப்பட்டான்.

வனத்தில் குடிகொண்டிருந்த பூதகணங்கள் மணிகண்டனை வரவேற்றன. அவர்களுடன் பம்பை ஆற்றை அடைந்த மணிகண்டனை அங்குள்ள மாமுனிவர்கள் நல்வரவு கூறினர். பக்கத்தில் உள்ள மலைச்சிகரத்தில் தங்கள் தவவலிமையால் பொன்னம்பலம் ஒன்று அமைத்து அதன்மீது இரத்தின சிம்மாசனம் உருவாக்கி மணிகண்டனை அதில் வீற்றிருக்க வைத்து விதிமுறை பூசை புரிந்து போற்றினர்.

பொன்னம்பல மேட்டில் வீற்றிருந்த மணிகண்டனிடம் மகிஷியின் தொல்லைகளையும், துன்புறுத்தல்களையும் தேவர்கள் கூறி முறையிட்டனர். தேவர்களின் குறைதீர்க்க எண்ணிய அரிஹர சுதன் தேவருலகம் சென்று மகிஷியை எதிர்த்தார். மகிஷியோ பெருமலைகளைப் பெயர்த்து அவர் மீது எறிந்தாள். ஆனால், அனைத்து வலிமைகளும் ஒன்றி நின்ற அவர் அவளை மிகச் சுலபமாகத் தூக்கிப் பூமியில் எறிந்தார். பம்பையாற்றின் மேற்கில் வீழ்ந்த அவளுடைய மார்பின் மீது ஏறி மணிகண்டன் தாண்டவம் புரிந்தார். அவரின் பாத வலிமை தாங்காது மகிஷி மரணவேதனையுடன் துடித்தாள். தன் மார்பிலே மிதிப்பவன் அரிஹரசுதனே என்று எண்ணினாள்; பக்தியுடன் அவரை வணங்கினாள். அவர் ஆட்டத்தை நிறுத்தி, அவளது உடலைக் கரத்தால் தடவினார். அக்கணமே மகிஷியின் உடலிலிருந்து ஓர் அழகிய பெண்ணுருவம் எழுந்தது. அவள் தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவரிடம் வேண்டினாள். அவரோ, தாம் இப்பிறப்பில் பிரம்மச்சாரியாகவே வாழ முடிவு செய்திருப்பதனைக்கூறி, தாமிருக்கும் இடத்தில் இடப்பாகத்தில் சிறிது தூரத்தில் அவள் நிலை கொள்ளுமாறு அருள்புரிந்தார்.

### ஈ. ஐயப்பன் புலிப்பால் கொண்டுவருதல்

புலிப்பால் கொண்டுவர காட்டிற்கு வந்த மணிகண்டன் மகிஷி வதம் முடித்ததும் தம் கடமையை நினைத்தார். அப்போது இந்திரன் புலியுருக்கொண்டு அவரின் வாகனமாயினான். தேவமாதர்கள் பெண்புலிகளாக மாறினர். தேவகணங்கள் புலிக் கூட்டங்களாயினர்.

இவ் வண்ணம் புலிக்கூட்டத்துடன் அரிஹரபுத்திரன் பந்தள நாட்டுத் தலைநகர் நோக்கிப் புறப்பட்டார். ஊர்வலம்போல் புலிக்கூட்டங்கள் வந்த காட்சியைக் கண்ட பந்தள மக்கள் பயம் கொண்டார்கள். அங்கும் இங்கும் ஓடினர். அரண்மனை வாயிலில் அரசர் செய்வதறியாது நின்றார். அவரை மணிகண்டன் வணங்கினார். அவரிடம் "மன்னா! இதோ புலிக்கூட்டம்; தேவையான பாலைப் பெற்றுக் கொண்டு அரசியாரின் நோய் தீர்க்கவும்" என்றார்.

மன்னன் தேவியின் நோய் குணமடைந்துவிட்டது என்றும், புலிப்பால் தேவையில்லையாகையால் புலிக் கூட்டத்தை மீண்டும் காட்டிற்கு அனுப்பிவிடுதல் நல்லது என்றும் ஐயப்பனிடம் வேண்டிக் கொண்டார். அக்கணமே புலிக்கூட்டம் மறைந்தது. ஐயப்பனின் அருளை எண்ணி அரசர் தலைவணங்கினார்.

தன்னை வணங்கி நின்ற மன்னவனை நெஞ்சாரத் தழுவி "மன்னவா! இதுகாறும் தங்கள் அரண்மனையில் மகிஷி வதம் பொருட்டே வாழ்ந்து வந்தேன். அமைச்சரிடமோ, அரசிமேலோ கோபம் இல்லை. அவர்களால்தான் என் அவதாரபலன் பூர்த்தியாயிற்று. தங்களுக்கு என்ன வரம் வேண்டுமோ கேளுங்கள்" என்றார்.

பந்தள மன்னர் பிறப்பு இறப்பில்லாப்பெருவாழ்வை நாடினார். தம் குலத்தின் பாதுகாப்பின் பொருட்டு ஐயப்பன் காவல் தெய்வமாகத் தம் நாட்டில் வாழ்ந்தருள் புரியவேண்டும் என்றார். அவ்வாறே ஐயப்பன் அரசர்க்கு அருள்புரிந்தார்.

பந்தள மன்னரிடம் ஐயப்பன் பம்பை நதி அருகே நீலி மலையின் பள்ளத்தாக்கில் தாம் யோக நிலையில் அமரப் போவதாகவும், அங்கே, கோவில் ஒன்றை அமைக்குமாறும், கோவிலின் முன் வாயிலில் பதினெட்டுப் படிகள் அமைக்கவேண்டும் என்றும், கோவிலின் இடப்புறத்தில் சற்றுத் தொலைவில் மஞ்சளாம்பிகைக்குக் கோவில் ஒன்று உருவாக்க வேண்டும் என்றும், தனது தாசனான கடுவரனையும், பூதநாயகனான வாபரனையும் முறைப்படி நிலைநிறுத்த வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். அக் கோவில் அமையும் இடத்தைத் தீர்மானிக்க ஓர் அம்பை எய்தார். அது சென்று விழுந்த இடத்தில் கோவிலைக் கட்ட வேண்டும் என்றார்.

ஐயப்பன் வேண்டியவாறு சபரிமலையில் பந்தளமன்னர் கோவில் அமைத்தார். குறிப்பிட்ட நாளில் ஐயப்பனும் பிறரும் ஆங்குச்சென்றனர். ஐயப்பன் அங்கு யோக நிலையில் அமர்ந்தார்.

அந்த இடமே இன்று சபரிமலையாகும். இச் சபரிமலை வாசனாகிய ஐயப்பனையே பக்தர்கள் பெருந்திரளாகக் காணவருகின்றனர்.

**உ. கொள்ளையரை அடக்க வந்தவரே ஐயப்பன்**

அய்யனார் பற்றிய மற்றொரு வரலாறு கீழ்க்காணுமாறு உள்ளது.

கி. பி. 9–ஆம் நூற்றாண்டில் மலையாள நாட்டின் ஒரு பகுதி பாண்டியனின் ஆட்சியின் கீழ் இருந்து வந்தது. பாண்டி நாட்டிலுள்ள கொள்ளையர் மலையாள நாட்டின் எல்லையில் கொள்ளையடிப்பதும் அடிக்கடி தொல்லை கொடுப்பதுமாக இருந்தனர். அக்கலகத்தின் போது, உயிரைக் காத்தற் பொருட்டு அரசிளங்குமரி ஒருத்தி ஓடினாள். அவளை இயற்கையருளால் யோக வித்தையிலும், போர்த்திறத்திலும் வல்லவனாகிய ஓர் இளைஞன் காப்பாற்றினான். அதன் பின்னர் 16–ஆண்டுகள் அவளைப் பற்றிய செய்திகள் தெரியவரவில்லை. பந்தள அரச பரம்பரையைச் சேர்ந்த ஓர் இளைஞனால், கலகக்காரர்களால் அரச பரம்பரைக்கு ஏற்பட்ட தீங்கு அகற்றப்படும் என்றும், கொள்ளைக்கூட்டம் விரட்டியடிக்கப்படும் என்றும் சோதிடர்கள் கூறினர். அந்நம்பிக்கையில் அரச பரம்பரையினர் மன அமைதி பெற்றிருந்தனர்.

சபரிமலைப் பிரதேசத்தில் ஒரு யோகி தன் மனைவியுடன் வாழ்ந்து வந்தார். அவர் தான் எடுத்து வளர்த்த மகனுக்கு யோகவித்தை, போர்த்திறன் ஆகியவற்றைப் பயிற்றுவித்தார்.

இவ்வாறு பல்வேறு பயிற்சிகளால் திறன் பெற்ற அம் மகனின் கழுத்தில் நீலமணியுடன் அமைந்த ஒரு மாலையை உடல் நலத்தின் பொருட்டு அணிவித்தார். அன்றுமுதல் அம் மகன் மணிகண்டன் என்னும் பெயரால் அழைக்கப்பட்டான்.

பிறந்த நாட்டைப் பாண்டி நாட்டுக் கொள்ளைக்காரர்களிடமிருந்தும் எதிரிகளிடமிருந்தும் காப்பாற்ற வேண்டும் என்னும் நோக்கத்துடன் அந்த யோகி, தன் மகனை யுத்த வீரனாக வளர்த்து ஆளாக்கினார். அப்பையனுக்கு உரிய வயது நிரம்பியதும் யோகி அறிமுகக் கடிதத்துடன்

பந்தள மன்னரின் அரண்மனைக்கு அவனை அனுப்பி வைத்தார். அக்கடிதத்தில் பந்தள நாட்டுத் தலைநகரிலிருந்து உயிரைக் காக்க ஓடிச் சென்ற அரசிளங் குமாரியின் மகன்தான் அப் பையன் என்னும் இரகசியத்தையும் குறித்திருந்தார்.

கடித விபரங்களைப் பார்த்த மன்னர் அவ்வீரனை மார்போடணைத்து மகிழ்ச்சியின் எல்லை கடந்து 'ஐயப்பா' என்று அழைத்தார். அதுமுதல் அவ்வீரனுக்கு ஐயப்பன் எனும் பெயர் வழங்கிற்று. ஐயப்பனின் திறமையை நாட்டு மக்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டு ஆயுதவித்தைப் போட்டி நடைபெற்றது. ஐயப்பனுக்கும் பந்தள மன்னரின் போர் வீரர்களுக்கும் நிகழ்ந்த வாள் சண்டை போன்றவற்றில் அவன் காட்டிய ஆற்றலும் தீரமும் அனைவர் உள்ளங்களையும் வியப்படையச் செய்தன. பந்தளச் சேனையில் இருந்த கூருத்தை, மல்லன், வில்லன் என்னும் தலைவர்களாகிய போர் வீரர்கள் அவனை அவர்களது தலைவனாக அங்கீகரித்தனர். அன்று முதல் இறுதி வரை ஐயப்பனிடம் நம்பிக்கை உடையவர்களாயினர்.

துர்க்கித்தான் என்னும் நாட்டிலிருந்து வாவர் என்னும் முகமதியன் பந்தள நாட்டில் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் அரபிக் கடற்கரை வந்தடைந்தான். செய்தியறிந்த ஐயப்பன் படை வீரர்களுடன் விரைந்து கடல் தீரத்தை அடைந்து வாவர் வந்த கப்பலின் பாய்மரத்தை எய்து கிழித்தார். வாவர் குதிரை மீதேறி யானை மீது வந்த ஐயப்பனை எதிர்த்தான். இருவருக்குமிடையே வாக்குவாதம் நடந்தது. வாவரிடம் ஐயப்பன் சுங்கம் கேட்ட போது வாவர் தரமறுத்தான். வாவரின் குதிரையின் காலை அவர் கத்தியால் வெட்டியபோது அவருடைய யானையின் காலை வாவர் வெட்டிவிட்டான். இருவருக்குள் நடைபெற்ற தனிப்போரில் யாருமே வெற்றி பெறாததால் இறுதியில் ஐயப்பனும் வாவரும் தமக்குள் நட்புக் கொண்டனர். அன்று முதல் வாவர் ஐயப்பனின் துணைவனாக விளங்கினான்.

பந்தள சேனையும் வாவரின் சேனையும் தன் ஆதிக்கத்தின் கீழ் வந்ததும் ஐயப்பன் கொள்ளையர்களை விரட்டியடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். பல வீரர்களைத் தம் படையில் சேர்த்தார். ஆயினும் மலையாள நாட்டில் தண்ணீர் முக்கம் என்னும் பகுதியிலிருந்த சீரப்பன் சிறமுப்பன் படைகளைச் சேர்க்க முதலில் இணங்கவில்லை. அவன் மகள் சிறுகூத்தியின் வேண்டுதலுக்குப்பின் ஐயப்பனுக்கு இணங்கினான்.

அதற்காகத் தன்னிடமிருந்த வளையல் ஒன்றைச் சிறுகூத்திக்கு ஐயப்பன் பரிசாகக் கொடுத்தார். அவளிடம் விடைபெறும்போது 'மீண்டும் அவளைச் சந்திக்கிறேன்' என்று கூறிச்சென்றார். பிற இடங்களுக்கும் சென்று படைவீரர்கள் பலரைச் சேர்த்து, மீண்டும் தண்ணீர்முக்கம் சென்றார். தாம் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டுச் சிறுகூத்தியின் இருப்பிடம் அடைந்து வாயிலில் நின்ற வண்ணம் அவள் பெயர்கூறி அழைத்தார். உள்ளே வேலையாயிருந்த சிறுகூத்தி அதனை விட்டுவிட்டு வர இயலாமையால் "எனக்கு இப்போது வர நேரமில்லை" என்று உரக்கக் கூறினாள். இதைக் கேட்ட அவர் "இனி நமக்குள் எவ்வித உறவுமில்லை. மற்றொரு வளையையும் உனக்கே நல்குகின்றேன்" எனக் கூறிவிட்டுத் தம் மற்றொரு வளையை அவள் வீட்டுமுன் வைத்து விட்டு அங்கிருந்து அகன்றார்.

வேலை முடித்து வெளியே வந்த சிறுகூத்தி, வந்தது ஐயப்பன் என்று அறியாமல் தன் தவறால் தன் வாழ்வே வீணாகி விட்டதே என்று வருந்தி மனம் நொந்தாள் அங்கிருந்த வளையை எடுத்துக் கண்ணில் வைத்துப் பக்தியுடன் அதனை வணங்கி நின்றாள். நாள் `செல்லச் செல்ல அவள் ஐயப்பனை நினைத்து நினைத்து உருகி கன்னியாகவே வாழ்ந்தாள் என்று அவள்பற்றிய கதைகள் கூறுகின்றன. பின்னர் அவளைப் பற்றிய வரலாறுகள் எதுவும் சான்றாக வழங்கவில்லை. இன்று சபரிமலையில் அவள்தான் மாளிகைப்புறத்தம்மனாக உள்ளாள் எனக் கூறுவாரும் உளர்.

ஐயப்பன் தாம் திரட்டிய படைவீரர்கள் எல்லோரும் ஒரு குறிப்பிட்ட தினத்தில் பாண்டி நாட்டிற்கும் மலையாள நாட்டிற்கும் இடையே வாணிகப் போக்குவரத்து நிறைந்த வழித்தடத்திலுள்ள எரிமேலி வந்துசேர வேண்டுமென்று ஆணையிட்டார். பின் பாண்டிய மன்னனிடம் சென்று அம் மன்னனிடம் தம் ஏற்பாடுகளைக் கூறி அதற்கு ஆதரவும் பெற்றார். ஐயப்பனின் செல்வாக்கினால் பொறாமை கொண்ட அமைச்சரும் அரசியும் அவரை அழிக்கும் நோக்கில் ஈடுபட்டனர். அரசி நோய்வாய்ப் பட்டதாக அறிவித்துப் புலிப்பால் கொண்டு வருவதற்கு அவரை அனுப்புவிக்குமாறு அரசனிடம் கூறி அவ்வாறே செய்யவும் அமைச்சர் ஏற்பாடு செய்து வைத்தார். ஐயப்பனின் தொல்லை ஒழிந்தது என எண்ணியவர்கள் அதிசயிக்கும் வண்ணம் அவர் புலிக்கூட்டத்தையே ஊர்வலமாகக் கொண்டு வந்தார். அரண்மனைவாழ் மக்கள் இக்காட்சியைக் கண்டு அஞ்சியோடினர்.

அவர்களை அமைதிப்படுத்தி, பாண்டிய மன்னரின் ஆதரவு பெற்றுத் தம் படைவீரர்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார்.

தம் படைகள் அனைத்தையும் மூன்று பிரிவுகளாகப் பிரித்தார். வாவர், கறுப்பன் ஆகியோரின் தலைமையின்கீழ் முதற்பிரிவுப் படை செயல்பட்டது. கொள்ளைக் கூட்டத் தலைவனான உதயணனின் இருப்பிடமாக இஞ்சிப்பாறைக் கோட்டை இருந்தது. இரண்டாவது படைப்பிரிவையும், மூன்றாவது படைப்பிரிவையும் ஐயப்பன் முறையே வில்லன், மல்லன் என்போர் தலைமையில் அமைத்தார். இவ்விரண்டு படைப்பிரிவுகளும் மற்றொரு எதிரித் தளமான தலைப்பாறைக் கோட்டையைத் தகர்த்த பின்னர் முதற்படைப் பிரிவு நிற்கும் பம்பை ஆற்றங்கரைக்கு வந்து சேரவேண்டுமென்று ஆணையிட்டார்.

படைவீரர்கள் அனைவரும் விரதம் மேற்கொள்ள வேண்டுமென்றும், தங்கள் தேவைக்குரிய உணவு முதலிய பொருட்களை ஒவ்வொருவரும் தலைச்சுமையாகவே அவரவர்கள் கொண்டு செல்ல வேண்டுமென்றும் கட்டளையிட்டார். எரிமேலி என்ற இடத்தில் ஒன்றாக இணைந்த அனைத்துப் படைவீரர்களும் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் செண்டை கொட்டி, ஆடிப்பாடிக் காட்டிற்குள் நுழைந்தனர்.

காட்டினுள் நுழைந்த படைவீரர்கள், நதியில் நீராடும் போது, மூங்கி ஒரு கல்லைக் கையில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவர் ஆணையிட்டார். அதன்படி குளித்து வந்தோர் ஒரு கல்லை ஏந்தி வந்தனர். அங்கேயே உணவு உட்கொண்டனர். பின் உதயணனின் வாழ்விடமான இஞ்சிப்பாறைக் கோட்டையை முற்றுகையிட்டனர்.

தம் படைவீரர்களிடம் அவர்கள் கையில் வைத்திருக்கும் கற்களை அகழியில் இடுமாறு ஐயப்பன் ஆணையிட்டார். அவ்வாறு இட்டதால் அகழியில் பாதை ஏற்பட்டது. வீரர்கள் எளிதாகக் கோட்டைக்குள் புகுந்து போரிட்டனர். இப்போரில் உதயணன் கொல்லப்பட்டான். அவனது படை சிதறி ஓடியது. பின்னர் ஐயப்பனின் சேனை கரிமலையைக் கடந்து பம்பை ஆற்றை அடைந்தது. இரண்டாம் படைப்பிரிவும், மூன்றாம் படைப்பிரிவும் தலைப்பாறைக் கோட்டையைத் தகர்த்து வெற்றி கொண்டு, பம்பை நதிக்கரையில் வந்து தங்கி ஓய்வெடுத்தன. போர்களில் உயிர் நீத்த தம் சகவீரர்களுக்காக அங்கேயே தர்ப்பணம் செய்தனர். மேலும் கொள்ளையரை

வென்ற வெற்றிக் களிப்பைக் கொண்டாடும் வகையில் பெரியதொரு விருந்தும் நடந்தது.

பம்பை நதித் தீரத்திலிருந்து படை வீரர்கள் நீலிமலை ஏறி, சபரிமலைக்குப் புறப்பட்டனர். அங்குச் சென்றபோது ஐயப்பன், அந்த இடம் தர்ம சாஸ்தாவின் புனித இடமென்றும், அங்கு ஆயுதம் தரித்துச் செல்லலாகாது என்றும் அவர்களிடமுள்ள படைக்கருவிகளை அருகிலிருந்த ஆலமரத்தின் கீழ் விட்டுச் செல்ல வேண்டும் என்றும், பக்தியுடன் அப்பகுதியில் நடக்க வேண்டும் என்றும் ஆணையிட்டார்.

அவ்வாறு அவர்கள் சென்றபோது, பொன்னம்பல மேட்டில் புனிதமாக்கப்பட்டு வைக்கப் பெற்றிருந்த சாஸ்தாவின் திருவுருவை அவ்விடத்தில் பிரதிஷ்டை செய்யும் நிகழ்ச்சி நடந்தது. அந்நிகழ்ச்சியில் பந்தள மன்னரும் பாண்டிய மன்னரும் பங்குகொள்ள வந்திருந்தனர். மகர சங்கிரம தினத்தில் திவ்விய முகூர்த்தத்தில் தர்ம சாஸ்தாவின் திருவுருவம் விதிமுறைப்படி ஆங்கு ஐயப்பனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அவர் தம் இரு கைகளாலும் தர்ம சாஸ்தாவின் திருவுருவை ஏந்திப் பீடத்தில் வைத்த போது அதிசயம் ஒன்று நடந்தது. அவ்விடத்தில் ஓர் ஒளி அத் திருவுருவினின்றும் எழுந்தது. அவ்வொளி ஐயப்பனைச் சுற்றியிருந்தது. அவ்வொளியில் அவர் ஜொலித்தார். அந் நேரத்தில் அவர் தர்ம சாஸ்தா திருவுருவில் இரண்டறக் கலந்தார். கூடலாக நின்ற படையினர் அனைவரும் பக்தியுடன் அதைத் தரிசித்தனர். தங்கள் தலைவன் சோதியில் மறைந்தது கண்டு கண்ணீர் மல்கி நின்றனர்.

**ஊ. தூண்டுமாமுனி எனும் வல்லரக்கன் வதத்தில் அய்யனார் அவதரித்தல்**

தமிழ்நாட்டில் அய்யனார் பற்றி வழங்கக் கூடிய கதைப்பாட்டுகளில் தூண்டுமாமுனி என்னும் வல்லரக்கனை மோகினி கொன்ற போது அய்யனாரின் அவதாரம் ஏற்பட்டது என்னும் கதையே பெரும்பான்மையாக ஓலைச்சுவடிகளில் கிடைத்து வருகின்றது.

வில்லுப்பாட்டாளிகள் மோகினியினுடைய உருவத்தை வருணிக்கவும், வல்லரக்கனுடைய அழிவைக் காட்டவுமே இக்கதைப்பாட்டுப் பகுதியை மக்களிடையே அறிமுகப்படுத்தி அய்யனாரின் பிறப்பைக் கூறி, அதன் பின்னரே அக் கோயில் தெய்வங்களைப் பாடுவதை வழக்கமாகக்

கொண்டிருக்கின்றனர். வில்லுப்பாட்டுக்கு அய்யனார் கதையே காப்புக் கதையாக விளங்குகிறது.

தூண்டுமாமுனி என்னும் பஸ்மாசுரன் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். தவத்தின் இறுதியில் சிவபெருமான் அவன் முன் தோன்றினார். அவன் வேண்டும் வரம் யாது எனக்கேட்டார். அவனோ தன் பகைவர்களைக் கொல்லும் பொருட்டுத் தன் விரலை அவர்கள் முன் தூண்டி நின்றால் அவர்கள் தலை அற்று விழுமாறு வரம் நல்கவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டான். சிவபெருமான் அவ்வாறே வரம் அளித்தார்.

பெற்ற வரத்தைச் சோதித்துப் பார்க்க நினைத்தான் வல்லரக்கன். வரம் ஈந்த பெருமானை நோக்கி அவன் விரல்காட்டப் போனான். அதை அறிந்து கொண்ட அவர் அவ்விடமிட்டு மறைந்தார். இறைவனே அரக்கன் செயலுக்கு அஞ்சி ஓடியதைக் கண்டு உமையவளும், அமரர்களும், முனிவர்களும் பிறரும் ஓடினர். வல்லரக்கன் அவர்களை விரட்டிச் சென்றான்.

சிவபெருமான் திருமாலிடம் சென்று அரக்கன் விரட்டும் நிலையை எடுத்துரைத்தார். அந்நேரத்தில் இடையனைப் போல திருமால் வேடமிட்டு ஆடுமாடுகளை ஓட்டிச் சென்று கொண்டிருந்தார். அவர் வைத்திருந்த பொருள்களைச் சிவபெருமானிடம் கொடுத்துவிட்டு அங்கே ஒளிந்திருக்கும்படிக் கூறிச் சென்றார். பின் அழகே உருவான மோகினி வடிவு கொண்டு அரக்கன் முன்பாக நடந்து சென்றார்.

மோகினியின் வடிவழகைக் கண்ட வல்லரக்கன் அவளிடம் பேசலானான். அவளோ தன் கணவனிடம் சண்டையிட்டு வீட்டைவிட்டு வெளியேறிச் செல்வதாகக் கூறினாள். தன்னை அவள் மணந்துகொள்ள வேண்டுமென்று வல்லரக்கன் கேட்டுக் கொண்டான். இறுதியில் தூண்டுவிரலைக் கொண்டு கழுத்தைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடுத்தால் அவனை மணந்துகொள்வதாகக் கூறினாள். மோகினியின் அழகில் ஈடுபட்டு வல்லரக்கன் அவள் செய்யச் சொன்னதுபோலவே தன்விரலைத் தன் கழுத்தருகே கொண்டு செல்ல அவன்தலை உடலிலிருந்தும் அற்றுப்போனது.

வல்லரக்கன் அழிவுகண்டு எல்லோரும் மோகினியாகிய திருமாலை வாழ்த்தினர். திருமால் ஒளிந்துகொண்டிருக்கும் சிவபெருமானிடம் சென்று வல்லரக்கன் இறந்ததைக் கூறினார். அவரிடம் கொடுத்து வைத்திருந்த தம் பொருள்களையும் கேட்டுப் பெற்றுக் கொண்டார். வல்லரக்கனை எவ்வாறு திருமால் வெற்றி கொண்டார் எனச் சிவபெருமான் திருமாலிடம் வினவினார். தாம் மோகினி வடிவு எடுத்ததும், வல்லரக்கனிடம் வார்த்தையாடினதும், இறுதியில் அவனுடைய அழிவை அவனைக் கொண்டே செய்ய வைத்ததும் கூறினார். சிவனாரோ திருமாலின் மோகினி வடிவைக் காண விரும்பினார். மைத்துனரின் ஆசையை நிறைவேற்றும் பொருட்டு திருமால் அவர்முன் தன் மோகினி வடிவைக் காட்டினார். அம் மோகினியைக் கண்டு மோகித்த சிவபெருமான் அவளைக் கட்டித் தழுவினார். அப்போது அய்யனார் அவதாரமெடுத்தார். இவ்வாறு அய்யானரின் அவதாரச் செய்தி வல்லரக்கன் வதையுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளது.

*எ. பாண்டியனுக்குப் படைவீரனாக அய்யனார் பணிபுரிதல்*

மேலே சொல்லப்பெற்ற வல்லரக்கன் வதத்தில் அவதாரம் எடுத்த அய்யனார் பின் கயிலாயத்தில் சிவபெருமான், பார்வதி தேவியாரால் வளர்க்கப்பெற்று, அனைத்து வித்தைகளையும் அறிந்து, தக்க தருணத்திற்காகக் காத்திருந்தார். அதன்பின்னர் அவரைத் தெக்கணத்திற்குச் செல்லுமாறு சிவபெருமான் பணித்தார். அவ்வாறே அய்யனார் பாவநாசமலையில் சொரிமுத்து அய்யனாக விளங்கி வந்தார்.

மதுரையில் பாண்டியனுக்கு மகளாகப் பார்வதி தேவியார் மூன்றுதனங்களுடன் தடாதகை எனும் மீனாட்சியாகப் பிறந்தாள். அம் மீனாட்சியை மணம் முடிப்பதற்காகச் சிவபெருமான் சொக்கனார் என்ற பெயரில் வந்தார். அவரைக்கண்டதும் மூன்று தனங்களுடனிருந்த மீனாட்சி அழகே உருவான பெண்ணாக மாறினாள். அவர்கள் திருமணம் நடந்தது. மதுரையில் அவர்கள் அரசு செலுத்தியபோது சொரிமுத்து அய்யனாக இருந்த அய்யனார் சொக்கனாரைக் காண மதுரைக்கு வந்தார்.

அய்யனாரின் வரவைத் தூதுவர்கள் சொக்கனாரான பாண்டியனுக்கு அறிவித்தனர். அவர்கள் இருவரும் சந்தித்தனர். அய்யனாரின் திறமையைக் காண சொக்கனார் விரும்பினார். அய்யனாரும் குதிரையேற்றம், யானையேற்றம், வில், வாள் பயிற்சி எல்லாவற்றையும் செய்து காட்டினார்.

இவற்றைப் பார்த்த பெண்கள் அவர்மேல் மையல் கொண்டனர். வீரர்களோ அவர்மேல் பொறாமை கொண்டனர். அய்யனாரின் திறமையைப் பார்த்து அறிந்த பாண்டியன் அவரைத் தம் இடத்திற்கு அருகிலேயே இருத்திப் பாண்டிய நாட்டில் சேவகம் செய்துவரச் செய்தார்.

அய்யனாரின் சேவகத்தால் பாண்டிய நாடு செழித்தது. ஆனால் பொறாமைக்காரர்களோ அவரை அழிக்கத் திட்டமிட்டனர். இறுதியில் பாண்டியனின் தேவியிடம் அய்யனார் பற்றி முறையிட்டனர். அவளும் அவர்கள் விரித்த வஞ்சனைக்கு உடந்தையாகச் செயல்படத் தொடங்கினாள். வயிற்றுவலியால் தான் துடிப்பதாகவும், புலிப்பால் கொண்டு வந்தால் அந்நோய் தீருமென்றும் பாண்டியனிடம் மருத்துவர்கள் கூறும்படிச் செய்தாள்.

அய்யனார் புலிப்பால் கொண்டுவரும் பணியைத் தாமே மேற்கொள்வதாகப் பாண்டியனுக்குத் தெரிவித்தார். அதன்படி அவர் புலிப்பால் கொண்டுவர காட்டுக்குச் சென்றார். அவர் திரும்பி வரமாட்டார் என்று பொறாமைக்காரர்கள் மகிழ்ந்தனர். காட்டிற்குச் சென்ற அய்யனார் தம் மந்திரத்தால் புலிக்கூட்டங்களை ஊர்வலமாக நாட்டிற்குக் கூட்டிவந்தார். புலித்திரள்களைக் கண்ட மக்கள் அஞ்சி அங்கும், இங்கும் ஓடினர். பொறாமைக் காரர்கள் பயத்தால் நடுங்கினர். வயிற்று வலியென வஞ்சனை செய்த பாண்டியன் தேவி தன் வயிற்றுவலி தீர்ந்துவிட்டது என்று கூறினாள். அரசன் அய்யனாரிடம் புலிக்கூட்டங்களைத் திருப்பி அனுப்புமாறு கேட்டுக் கொண்டார். அவ்வாறே அய்யனாரும் செய்ய இசைந்தார். அதன் பின்னர் பாண்டியனுக்கும் மற்றவர்களுக்கும், நல்லவராகப் பணியாற்றி, மதுரையை விட்டு ஆரியங்காவில் சென்று கோவில் கொண்டிருந்தார்.

இவ்வாறு அய்யனார் கதைகள் பற்றிய ஓலைச்சுவடிகள் அய்யனார் வரலாற்றைக் கூறுகின்றன. இவ்வாறான ஓலைச்சுவடிக் கதைப்பிரதிகளில் சொரிமுத்தையனாக விளங்கிய அய்யனார், பின் ஆரியங்காவில் வீர இளைஞனாகவும் அமர்ந்து பாண்டி நாட்டின் மேற்கு எல்லையைக் காத்து நின்றார் எனத் தெரிகிறது.

## 4. சோழரும் அய்யனார் வழிபாடும்

வெகு காலத்துக்கு முன்பே மக்கள், அய்யனாரைச் சிறு தெய்வமாகக் கல்லில் வழிபட்டு வந்தாலும் சோழ நாட்டில்தான் முதன்முதலாகக் கோவில் அமைத்து அவரை வழிபட்டதாக ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் விசயாலய சோழன் சோழநாட்டில் பெண் தெய்வமான நிதம்ப சூதனிக்கு வழிபாட்டுக் கோவில் அமைத்தது போல, கி. பி. 10-ஆம் நூற்றாண்டில், முதலாம் இராசராச சோழனும் அய்யனார்க்குக் கோவில் அமைக்க உதவி செய்துள்ளான். இதனால் சோழ நாட்டில் பெண் தெய்வ வழிபாடும் அய்யனார் வழிபாடும் இணைந்து ஏற்பட்டுள்ளமை தெரிகின்றது.

இராசராச சோழன் குடியானவர்கள் அடங்கிய படைப் பிரிவுகளை (வலங்கை வேளைக்காரப் படைகள்) உருவாக்கித் தனக்காகப் போரிட நியமித்துள்ளான். அப் படைப் பிரிவினரும் அவர்களைச் சார்ந்த மக்களும் வழிபடுவதற்காகவே அய்யனார் தெய்வத்தையும் கோவில் கட்டி வழிபட அவன் மக்களை ஊக்கப்படுத்தியதாகத் தெரிகிறது. பிற்காலச் சோழர்களும் இம்முறையைப் பின்பற்றி மக்களிடம் அய்யனார் வழிபாட்டை வளர்த்துள்ளனர்.

சோழர்களின் படைகள் இலங்கை சென்று வெகுகாலம் போர் புரிந்து அங்குத் தங்கியுள்ளன. இதன் காரணமாகவே சோழ நாட்டிலிருந்த அய்யனார் வீரர்களால் இலங்கைக்குக் கொண்டு செல்லப்பட்டு அங்கு வழிபடப்பட்டுள்ளார். சோழ நாட்டின் தொண்டை மண்டலப் பகுதியிலிருந்து இலங்கைக்குக் குடியேறிய மக்கள் அய்யனார் வழிபாட்டை மேற்கொண்டிருக்கலாம் எனத் தெரிகிறது. இலங்கையில் மிகுதியாக அய்யனார் கோவில்கள் இருப்பதற்கு இதுவே காரணமாகும்.

சோழப் பேரரசு வீழ்ச்சி அடைந்த பின்பு அவ் வலங்கைப் படைகளின் ஒரு பிரிவினரும் அவர்களைச் சார்ந்தோரும் திருச்செந்தூர் வட்டத்தின் மையப் பகுதியில் பல்வேறிடங்களில் குடியமர்ந்துள்ளனர். அவர்களில் குறிப்பிட்ட சமுதாயத்தினர் மானவீர வளநாடு என வழங்கப்பெற்ற பகுதிகளில் குடியேறி உள்ளனர். இவ் வளநாடு தாமிரபரணிக்குத் தெற்காக அமைந்திருந்தது. அப் பகுதியில் அவர்களின் குடியேற்றத்தைத் தொடர்ந்து அய்யனார்க்கும் கோவில்கள் அமைக்கப் பெற்று அவர் வழிபடப்

பெற்றுள்ளார். மானவீர வளநாட்டின் பெரும்பகுதி மண்மாரியினால் அழிந்துபட்டபோது மக்கள் வேறிடங்களுக்குக் குடிபெயர்ந்தனர். ஆனால், அய்யனார் கோவில்கள் மட்டும் இன்னும் அவ்விடங்களிலேயே உள்ளன. தாமிருக்குமிடங்களிலிருந்து இங்கு வந்து தம் குல தெய்வமான அய்யனாரை அம் மக்கள் வழிபட்டுச் செல்கின்றனர். இவ் வழக்கம் இன்றைய நாள்களில் பெருகி வருகின்றதைப் பார்க்க முடிகிறது. மானவீர வளநாடு அதன் தலைநகரான மானாடு (மாநாடு) என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது.

அய்யன் கோவில்களும் சாத்தாகோவில்களும் பல இடங்களில் இருந்தாலும் மானவீர வளநாட்டிலுள்ள அய்யனார்களே முக்கியத்துவம் பெற்று உள்ளனர். இம் மானவீர வளநாட்டில் மட்டும் அய்யனார்க்குப் பல கோவில்கள் பல பெயர்களில் உள்ளன. இவர்களுள் சுனை அய்யனாரே முதலாவதாகக் கருதப் பெறுகிறார். அக்கோவில்களில் உள்ள அய்யனார் தெய்வங்களின் பெயர்கள் வருமாறு:

1. அருஞ்சுனை காத்த அய்யனார்
2. கருக்குவேலய்யனார்
3. இளம்பாளை அய்யனார்
4. வணங்காமுடி அய்யனார்
5. குன்னிமலை அய்யனார்
6. தூத்துவால் அய்யனார்
7. மானாடு அய்யனார் (கலியுகவரதர்)
8. தலையூனி அய்யனார்
9. பொன்வண்டு அய்யனார்
10. பலவேச முத்தைய்யனார்
11. மருதமலை அய்யனார்
12. அல்லியூத்து அய்யனார் அல்லது கல்வாழை அய்யனார்.

இவ் வளநாட்டில் வேறு பல அய்யனார் கோவில்களும் உள்ளன. மக்கள் மிகுதியாகச் சென்று வழிபடும் கோவில்களாக அருஞ்சுனை காத்த

அய்யனார் கோவிலும் கருக்குவேலய்யனார் கோவிலும் உள்ளன. அய்யனார், பல பெயர்களிலும் பல குடும்பத்தினராலும் வழிபடப் பெற்று வந்தமையையும் அக்குடும்பங்கள் வெளியேறிய காலங்களில் அவர் வழிபாடு பெறாமல் அவரது கோவில்கள் அழியும் நிலையிலிருந்தமையையும், பின்பு அம்மக்கள் பொருளாதாரத்தில் உயர்வடைந்த பின்பு கோவில்களைக் கட்டி எழுப்பி மீண்டும் வழிபட்டு வருவதையும் இன்று காண முடிகின்றது.

மானவீர வளநாட்டு அய்யனார்களைப் பற்றி முதன் முதலில் கி. பி. 1600-இல் வலங்கை மாலையிலும், கி. பி. 1606-இல் பாடப்பெற்ற வெங்கலராஜன் கதையிலும், கி. பி. 1623- இல் பாடப்பெற்ற பெருமாள் சுவாமிக் கதையிலும், கி.பி. 1678-இல் பாடப்பெற்ற குமாரசுவாமி நாடான் கதையிலும், இன்னும் பிற்காலத்திய வில்லுப்பாட்டு ஓலைச் சுவடிகளிலிருந்தும் அறியப்படுகின்றது. மேலும், அருஞ்சுனை காத்த அய்யனார் வில்லுப்பாட்டு, கருக்குவேலய்யனார் வில்லுப்பாட்டு போன்ற ஏட்டுச் சுவடிகளிலும் மானவீர வளநாட்டுச் செய்திகள் சுட்டப்பட்டுள்ளன.

## 5. பாண்டியனும் அய்யனார் வழிபாடும்

மானவீர வளநாட்டில் பாண்டியனின் அமைச்சர்களாக ஏழு பேர் இருந்தனர் என்றும், அவர்களில் அருஞ்சுனை காத்த அய்யனார் முதன்மையானவர் என்றும், அதற்கு அடுத்த நிலையில் கருக்குவேலய்யனார் போற்றப்பட்டார் என்றும் அவ்வட்டாரக் கதைப் பாடல்களிலிருந்து தெரிய வருகின்றது.

இவர்களில் அருஞ்சுனை காத்த அய்யனார் வில்லுப்பாட்டு முழுவதும் கிடைத்துள்ளது. கருக்குவேலய்யனார் கதை அவர் திருமாலான மோகினி–சிவபெருமானுக்குப் பிள்ளையாய்ப் பிறப்பது வரை பாட்டாக உள்ளது. அதன் பின்னர் அவர் தொடர்புடைய கதைகள் வசனமாகவே வழங்கப்படுகின்றன. பின்பு ஐவர் ராசாக்கள் கதைப்பாட்டு (வில்லுப்பாட்டு) படிக்கப்பெறுகின்றது. கருக்குவேலய்யனார் கோவில் திருவிழாவில் முக்கியமானதான 'கள்ளர் வெட்டு' நிகழ்ச்சிக்கும் 'கன்னித்' திருட்டைச் செய்து தண்டனையடைந்த கள்ளன் ஒருவன் கதைக்கும் தொடர்புள்ளது. மேலும் கருக்குவேலய்யனார் கி. பி. 1606-இல் பாடப்பெற்ற வெங்கலராஜன் கதைப்பாடல் வில்லுப்பாட்டிலும் குறிக்கப்படுகிறார்.

இவ்விரு அய்யனார்களின் கோவில்கள் சிறப்பாக இப்போது கட்டப்பெற்றுள்ளன. பிற அய்யனார்களை வணங்குவோர் அவ்வவ் அய்யனார் கோவில்களை எடுத்துக் கட்டிவருகின்றனர். விழாக்களும் கொண்டாடப்படுகின்றன. அருஞ்சுனை காத்த அய்யனார்க்கே 10 நாள் விழா நடைபெறுகிறது.

*அருஞ்சுனை காத்த அய்யனார் கதை*

அருஞ்சுனை காத்த அய்யனார் கொடைவிழாவின் போது பாடப்பெறும் வில்லுப்பாட்டில் வரும் கதையாவது:

இடையர் குலத்து ஓர் இளம் விதவை வைகறையில் சுனையில் நீராடி, அய்யனைச் வழிபட்டு, குடத்தில் நீர் எடுத்துச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். அவள் ஆடவர் கண்ணில் படாதவாறு வந்து சென்று விடுவாள். சுனையிலுள்ள மரத்தில் மாங்கனியொன்று மிகவும் அதிசயிக்கத்தக்க வகையில் பழுத்திருந்தது. அது சுனை நீர்த்தேக்கத்தில் வீழ்ந்து அப்பெண்ணின் குடத்துள் அவளை அறியாமல் புகுந்து விட்டது. மாங்கனி திருடப்பட்டதாகக் காவலர்கள் அறிந்தனர். அதிகாலையில் குளிக்கவரும் அப்பெண்தான் அதைத் திருடியிருக்க வேண்டும் என முடிவு செய்தனர். 'கனி திருடிய கள்ளி' என அவளைக் குற்றம் சாட்டினர். அவள் சபையில் நிறுத்தப்பட்டாள். சபையில், தான் கனி திருடிய கள்ளி அல்லள் என அப்பெண் முறையிட்டாள். சுனை அய்யனார் அவள் முறையீட்டை மதித்து, அவள் குற்றமற்றவள் என ஆராய்ந்து பார்க்குமாறு அரசனிடம் கூறினார். கருக்குவேலய்யனாரும் அவள் குற்றமற்றவள் எனக் கூறிச் சபையிலிருந்த தன் பரிவாரங்களுடன் வெளியேறினார். பிற அய்யனார்கள் 'அவள்தான் குற்றவாளி' என வாதிட்டனர்.

ஒன்றுமறியாத அப்பெண் தன்னைக் குற்றஞ்சாட்டித் தண்டனை அளிப்பதாகக் கூறியவர்கள் மண்மாரியில் அழிந்து போகுமாறு சாபமிட்டாள். தனக்காகப் பரிந்து பேசிய சுனை அய்யனார் அம் மண்மாரியிலிருந்து அழியாதிருக்கும்படியும் கருக்குவேலய்யனார்க்கும் அவர் பரிவாரங்களுக்கும் மேன்மேலும் புகழ் சேரும்படியாகவும் அவள் வாழ்த்தினாள். மண்மாரி பெய்து பிற அய்யனார் கோவில்களும் குடியிருப்புகளும் அழிந்துபோயின. மானவீர வளநாட்டின் பெரும்பகுதி மணலால் மூடப்பட்டு அழிந்து போயிற்று.

இக் கதைதான் சுனை வட்டாரங்களில் வில்லுப்பாட்டாகப் பாடப்பெறும் கதை. இக் கதைக்குச் சரித்திர ஆதாரம் கிடையாது. வில்லுப்பாடலாகப் பாடப்பெறும் மற்றொரு கதைக்கும் இதற்கும் தொடர்புள்ளது. அது வெங்கலராஜன் வில்லுப் பாட்டுக் கதை ஆகும். கி. பி. 1606ல் எழுதப் பெற்றதாக அறியப்பெறும் இக்கதைப்பாட்டில் மாங்கனி தொடர்பான செய்திகள் இடம் பெற்றுள்ளன.

இதனை எழுதியவர் அகத்தீசுவரம் ஆறுமுகம் என்பவர். இக் கதை முதலில் வில்லுப்பாடலாக மானவீர வளநாட்டில் பாடப்பட்டுள்ளது. வாய்மொழிப் பாடலாக அப் பகுதியில் வழங்கப் பெற்று வந்ததை இவர் சுவடியில் எழுதி வைத்துள்ளார். ஆனால் தற்காலத்தில் இக்கதை வழக்கொழிந்துபோயிற்று.

வெங்கலராஜன் என்பவன் இலங்கையிலிருந்து தன் கப்பல் மூலமாக, தென்நாஞ்சில் நாட்டிற்கு வந்து அங்கு வெங்கலக் கோட்டையிட்டு வாழ்ந்து வந்தான். அவனுடைய பெண் மக்கள் இருவரும் தம் தோழியருடன் ஆறாட்டு விழாவைக் காணச் சென்றபோது அங்கு வந்த வஞ்சி மன்னனால் விரும்பப்படுகின்றனர். வஞ்சி மன்னன் வெங்கலராஜனுக்கு மணத்தூது அனுப்புகிறான். ஆனால் அவனுக்குப் பெண்தர பெண்ணின் தந்தை மறுத்துவிடுகிறான். இதனால் மன்னனின் படை வெங்கலக் கோட்டையை முற்றுகையிடுகின்றது. மூத்தவளான திரை முத்தழகி தன்னால் வந்த வினை இது என வருந்தித் தன் தலையை வெட்டிக் கோட்டைக்கு வெளியில் எறியுமாறு தந்தையிடம் வேண்டுகிறாள். வேதனையுடன் அவனும் அவ்வாறு செய்து விடுகிறான். தலையை எடுத்துச் சென்று மன்னன் அடக்கம் செய்து விட்டு அவ்விடம் விட்டு அகன்று விடுகிறான்.

இனியும் நாஞ்சில் நாட்டிலிருந்தால் கேடுவரும் என்றெண்ணிய வெங்கலராஜன் தன் இனத்தவரிருக்கும் மானவீர வளநாட்டுப் பகுதியில் குடியேறுகிறான். அவன் குடியேறிய இடம் மானவீர வளநாட்டின் வட எல்லைப்பகுதி. குரும்பூர் நகருக்குத் தெற்கே புதிதாகக் கோட்டை கட்டி வாழ்ந்து வருகிறான். கோட்டைக்குக் கிழக்கே அருஞ்சுனையும் அய்யனார் கோவிலும் இருந்தன. தெற்கில் கருக்குவேலய்யனார் கோவிலும் பொன் காத்த பெருமாள் கோவிலும் இருந்தன. குரும்பூர் நாட்டின் மன்னனான நளன் என்பானது நமனபடை வீடு மேற்கில் இருந்தது.

சுனையின் எழில் தோற்றத்தைக் கண்ட மற்றொரு மகளான சங்கு முத்தழகி தன் தோழியர் எழுவருடன் அங்குச் செல்வது வழக்கம். நீர் நிலையில் குளிப்பதும், விளையாடுவதும், அருஞ்சுனை காத்த அய்யனாரை வழிபடுவதும், பொற்குடத்தில் நீர் கொண்டு வருவதும் அவள் வழக்கமாயிருந்தது. தனது மணிமண்டபத்திலிருந்து தன் பன்னிருசாண் முடியை அவள் உலர்த்திப் பூச்சூடுவாள். அவ்வாறு உலர்த்தும்போது அவளது கூந்தலிலிருந்து ஒரு முடி காற்றில் பறந்து அருகே சென்று கொண்டிருந்த குரும்பூர் மன்னனின் பல்லக்கில் சுற்றியது. முடியின் நீளத்தை அளந்து, அதற்குரியவளின் எழில் தோற்றத்தைக் காண ஆவலுற்ற அவன், வெங்கலராஜனுக்கு மணத்தூது அனுப்பினான்.

நளனுக்குப் பெண் கொடுக்க இயலாது என வெங்கலராஜன் வெகுண்டான். நளராசனோ தந்திரத்தால் அப்பெண்ணைக் கைப்பற்ற முடிவு செய்தான். அதன்படி மந்திரத்தால் சுனையிலுள்ள மரத்தில் மாங்கனியுண்டாக்கித் தொங்க வைத்தான். ஆண்டொன்றுக்கு ஒரே கனிதான் பழுக்கும் என்பதால் அக்கனியைக் காத்து மன்னவர்க்கு அளிப்பதற்காகக் காவலர்களிருந்தனர். மாயக்கனி எனத் தெரியாமல் எல்லோரும் அதைப்போற்றி வந்தனர்.

சங்கு முத்தழகி ஒருநாள் குளித்துவிட்டுப் பொற்குடத்தில் நீரெடுக்கும்போது, மாயக்கனி தெப்பத்தில் வீழ்ந்து அவளறியாமல் அவள் குடத்துள் புகுந்து கொண்டது. மாயக்கனியாக உருவமெடுத்தது துர்தேவதையாகையால் குடம் அவள் எடுக்கவராது கனத்தது. கையும் குடத்திலிருந்து விடுபடவில்லை. இச்சூழ்ச்சியை அறியாத சங்கு முத்தழகி, மருகி இறைவனை வேண்டினாள். வேண்டவும் குடம் எடுக்கக் கையில் வந்தது. ஆனாலும் மாயம் அவளைத் தொடர்ந்தது. வீடு சென்ற பின்பும் அவளுக்குக் கலக்கம் நீங்கவில்லை.

சுனையில் கனியைக் காணாத காவலர்கள் திகைத்தனர். நளராசனது கட்டளையால் வீடு வீடாகச் சென்று நீரெடுக்க வந்த பெண்களின் குடங்களைச் சோதித்தனர். சங்கு முத்தழகியின் குடத்துள் மாங்கனி இருப்பதைக் கண்டு 'மாங்கனி திருடிய கள்ளி' என அவளைக் குற்றஞ்சாட்டி நளன் முன் அழைத்து வந்தனர். பெண்ணென்றும் பாராது அவன் அவளின் அழகு முடியைச் சிரைத்து மானபங்கப்படுத்த முயன்றான். கண்ணகிபோல் அவள் வழக்குரைத்து, தான் குற்றமற்றவள் எனக்கூறியும் அவன்

கேட்கவில்லை. அவளைத் தண்டிக்க ஆணையிட்டான். மாங்கனி திருடிய கள்ளியெனத் தன்மகள் குற்றஞ்சாட்டப்பட்டுத் தண்டிக்கப்படவிருப்பதை அறிந்த வெங்கலராஜன் தன் கோட்டையை அடைத்துத் தாளிட்டுக் கூண்டோடு தற்கொலை செய்து கொண்டான். கோட்டைக்குள் எல்லோரும் இறந்ததைக் கேட்ட பின்பும் நளராசன் அவளை விடவில்லை. தண்டனையை நிறைவேற்றவே குறிக்கோளாய் இருந்தான்.

தந்தை உட்பட எல்லோரும் இறந்ததைக் கேள்வியுற்ற சங்கு முத்தழகி நளன் தன்னை மானபங்கம் செய்து கொள்வதற்கு முன் தான் இறந்து விட வேண்டுமென்று முடிவு செய்தாள். இறைவனை வழிபட்டாள். தான் குற்றமற்ற, கற்புடையவளாதலால் நளனுடைய நாடு மண்மாரி பெய்து அழியுமாறு சபித்தாள். தான் இறக்கவும் இறைவனிடம் வரம் வேண்டினாள். அவள் கேட்டவாறே இறைவன் வரம் நல்கினான். அவளும் அவ்விடத்திலேயே இறந்துபோனாள்.

மங்கையின் சாபத்தால் மண்மாரி பெய்தது. குரும்பூர்க் கோட்டை அழிந்தது. மானவீர வளநாட்டின் பகுதிகளும் மணலால் மூடுண்டன. நளனின் வமிசம் அழிந்தது. கருக்குவேலய்யனார் தன் பரிவாரங்களுடன் நளன் நாட்டை அழிக்கப் புறப்பட்டு வந்தார். இளம்பாளை அய்யனும் தன் படையுடன் வந்தார். ஆனால் அதற்குள் மண் மாரி எவ்விடமும் பெய்தது.

**கருக்குவேல் அய்யனார் வில்லுப்பாட்டுக் கதை**

கார்த்திகை மாதம் நடக்கும் 'கள்ளர் வெட்டு'த் திருவிழாவில் கருக்குவேலய்யனார் வில்லுபாட்டுக் கதை படிப்பது வழக்கம். அதில் முதலில் மோகினி - சிவனார்க்குப் பிறந்தவரே அய்யனார் எனக் குறிக்கப்படுகிறது. காட்டிற்கு வேட்டைக்குச் செல்லும்போது காட்டில் கிடைத்த குழந்தை அய்யனாரை எடுத்து வந்து பாண்டியன் தன் அரண்மனையில் வளர்த்து வந்தான். அவ்வாறு வளர்க்கும் போது, கல்வி முதலியவற்றில் சிறந்தவராகி அவர் வளர்ந்தார். பின் அய்யனார் பாண்டியனிடம் மூவாயிரம் பொன் சம்பளத்தில் வேலைக்குச் சேர்ந்தார். அவ்வாறு சேவித்து வரும் நாளில் இராணிக்குத் தலைவலி வர அதற்காகப் புலிப்பால் கொண்டு வர அய்யனார் காட்டிற்குச் சென்றார். எல்லா மிருகங்களும் அய்யனார்க்கு அடிபணிந்தன. புலியினைக் குட்டிகளுடன் நாட்டுக்குக் கூட்டி வந்தார். பார்த்த மக்கள் எல்லாம் பயந்து ஓடினர். அரண்மனைக்கு வந்து புலிப்பால் கறக்குமாறு அய்யனார் கூறவே பயந்து

யாரும் செல்லவில்லை. அய்யனாரே கறந்து புலிப்பாலை மருந்து தயாரிக்கக் கொடுத்தார். இராணி இவ்வாறு தந்திரம் செய்தும் அய்யனாரை அங்கிருந்து அகற்ற முடியவில்லை.

பாண்டியனுக்குரிய மரங்களில் கனி ஒன்று ஓடையில் விழுவது வழக்கம். அதைத் தினமும் எடுத்து வருவதுண்டு. ஒருநாள், ஆண்கள் கண்ணிலே விழிக்காத விதவைப் பெண்மணி, குளித்துக் குடத்தில் நீர் எடுக்கும் போது அவள் அறியாமல் அக்கனி குடத்துள் வந்து விடுகிறது. அவள் குடத்தை வீட்டினுள் வைத்து அறியாதவளாய் இருந்தாள். மரத்தில் கனியைக் காணாத காவலாளிகள் அரசனிடம் முறையிட்டனர். அப்போது வீடு வீடாகச் சோதனை செய்ய அவன் ஆணையிட்டான். எல்லோருடைய வீட்டையும் சோதனை செய்துவிடுகிறார்கள். அந்தப் பெண் வீட்டையும் சோதனை செய்ய அரசன் உத்தரவிடுகிறான். அரசனின் ஆணைப்படி காவலாளிகள் அந்தப் பெண் வீட்டையும் சோதனை செய்கின்றனர். அப்போது குடத்தினுள் கிடந்த கனியைக் கண்டெடுத்தனர். மாங்கனியையும் அந்தப் பெண்ணையும் சபைக்குக் கொண்டு வந்தனர். அரசவையைக் கூட்டிக் கனியைத் திருடிய இந்தப் பெண்ணை மொட்டை அடித்து, கழுதை மேல் ஊர்வலமாக வரச்செய்து சுண்ணாம்புக் களவாயில் நீத்த உத்தரவிடுகிறான். அப்போது மந்திரியாக இருந்த கருக்குவேல் அய்யனார், ‘கண்ணிலே காண்பதும் பொய், காதிலே கேட்பதும் பொய், தீர விசாரிப்பதேமெய்’ எனக் கூறினார். ஆனாலும் அரசன் அவர் அறிவுரையை ஏற்காது தன் ஆணையை நிறைவேற்றக் கூறுகிறான். காவலர்கள் அந்தப் பெண் அருகே செல்லும் போது, கீழே குனிந்து ஒரு கை மண் எடுத்து நின்று, நீதி விசாரணை செய்யாத இப்பாண்டிய தேசம் தீக்காற்று, தீ மழைக்கு இரையாகக் கடவது என மண்ணை வீசி அப்பெண் சாபம் இடுகிறாள். உடனே கருக்குவேல் அய்யனாரும் மன்னனிடமிருந்து வெளியேறுகிறார். தெய்வப் பிறவியான அவர் செல்லும் இடம் மட்டும் தீக்காற்று, தீமழை இல்லாமல் இருக்குமாறும் அவரிருக்கும் இடம் புளியமரமும் பூங்காவனமும், சுளவடி வட்டம் மணல் மேடுமாகக் கோட்டையாக இருக்கக் கடவது எனவும் அவள் வரங் கொடுக்கிறாள்.

அரசனின் அரண்மனையை விட்டு அய்யனார் வெளிவரும் போது பட்டாணி சாயபுகள் அய்யனார் பின்னே தொடர்ந்து வருகின்றனர். காட்டு வழியே அய்யனார் வரும்போது கருக்குவா மரம் என்ற மரத்தின் கீழ் வந்து

நின்றதும், அம்மரம் இரண்டாகப் பிளந்து உள்ளே சென்றார். பின்னே தொடர்ந்து வந்த பட்டாணி சாயபுகள் தெய்வப் பிறவியான அய்யனாரைக் காணாமல் திடுக்கிட்டார்கள். மரத்தைச்சுற்றிக் கால் தடங்கள் உள்ளன. ஆளைக் காணவில்லையே என அவர்கள் இடுப்பில் சொருகி வைத்துள்ள வாளைப்பாய்ச்சித் தம் உயிரை மாய்த்தனர்.

அந்த வழியாக ஆடுமேய்க்கும் இடையன் ஒருவன் வரும்போது அம்மரத்தின் வேர் தட்டி அவன் வைத்துள்ள கஞ்சிக் கலயம் தினமும் உடைந்துவிடும். ஆத்திரம் கொண்ட அவன் ஒரு நாள் அந்த மரத்தின் வேரைக் கோடாரியால் வெட்டும்போது அந்த வேரிலிருந்து இரத்தம் பீறிட்டு எழுகிறது. அவன் மேல் இரத்தம்பட்டதும் பதறி அடித்துக் கொண்டு வீடு நோக்கி ஓடுகிறான். இதனைப் பார்த்த அவன் மனைவி அவன் யாரையோ கொலை செய்து வந்து விட்டதாகப் பதறுகிறாள். அப்போது அவன் நடந்ததைக் கூறினான். அந்த வேரை வெட்டிய போது இரத்தம் பீறிட்டதாகச் சொன்னான். இருவரும் மரத்தருகே வந்து அந்த வேரிலிருந்து இரத்தம் வந்ததைக் கண்டனர். அன்று இரவு அவர்கள் நித்திரை செய்யும் போது கனவில் கருக்குவேலய்யனார் தோன்றி அந்த இடத்தில் இருப்பது 'தாம் தான்' என்றும் அதில் ஒரு குத்து ஓலை நாட்டி வெள்ளி, செவ்வாய் தீபம் காட்டி வாருங்கள் என்றார். அதன்படியே அவர்கள் குத்து ஓலை நாட்டி, தீபம் ஏற்றி வந்தார்கள். அதன் பிறகு அங்கே கோவில் கட்டப்பெற்றது. முதன் முதலில் கோவிலிருந்த இடம் மணல் மூடி, இரண்டாவதாகக் கோவில் கட்டிய இடமும் மணல் மூடி, இப்போது மூன்றாவது இடத்தில் அய்யனார் அமர்ந்துள்ளார்.

இவ்வாறு கருக்குவேலய்யனார் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. சுனை அய்யனாரை வழிபட ஆயிரமாயிரம் பக்தர்கள் வெளியூர்களிலிருந்து வருகின்றனர். சபரிமலை சாஸ்தாவுக்கு அடுத்த நிலையில் அதிகமாக வழிபடப் பெறுவோர்களில் இவ்விரு அய்யனார்களும் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுக்கு அடுத்த நிலையில் பொதிகை மலையிலுள்ள சொரிமுத்தையன் விளங்குகின்றார்.

### *சொரிமுத்தைய்யனார் கதை*

தென் பாண்டி நாட்டின் தென்மேற்கு எல்லையாகப் பொதிகைமலை விளங்கி வருகின்றது. இங்கே உருவாகி அந் நாட்டின் தென்பகுதியை

வளமாக்கும் தாமிரபரணி பல மைல் தூரம் ஓடி இறுதியில் கொற்கைப் பகுதியில் கடலுடன் சங்கமமாகின்றது. பாவநாச மலையில் மேலேறிச் செல்லுங்கால் தாமிரபரணி ஆற்றின் கீழ்க்கரையில் சொரிமுத்தையன் கோவில் உள்ளது. அய்யனை வழிபட ஆயிரமாயிரம் பொதுமக்கள் சாதி வேறுபாடின்றி அம் மலையின் அடிவாரப் பகுதிகளிலிருந்து வருகின்றனர். பல காலமாக இவ் வழிபாடு நடந்து வருகின்றது.

சொரிமுத்தையன் கோவில் மலையாள நாட்டிற்கும், பாண்டி நாட்டிற்கும் எல்லையாக அமைந்த பகுதியில் இருப்பதால் அப் பகுதியில் போக்குவரத்து அதிகமாக முன்பு இருந்துள்ளது. மேலும் அத் திருக்கோவில் ஆற்றின் அருகில் இருப்பதாலும் அகன்ற கட்டடங்களால் ஆனதாலும் வழி நடைப்பயணிகள் ஆங்கு வந்து, இருந்து, செல்வதற்கு வசதியாக உள்ளது. சொரிமுத்தையன் மிகவும் வீரியமான தெய்வமாகப் போற்றப்பட்டு வணங்கப்படுகிறார். முத்துப்பட்டன் கோவில், சொரிமுத்தையன் கோவில் அருகில் உள்ளது. முத்துப்பட்டன் கதைப்பாட்டிலும், சுடலைமாட சுவாமிக் கதைப்பாட்டிலும் சொரிமுத்தையன் கோவில் முக்கியப் பங்கு வகிக்கின்றது. முத்துப்பட்டன் மலையாள நாட்டில் பணிபுரிந்து தாயகம் திரும்பும் போது நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்தும் சொரிமுத்தையன் கோவில் பகுதிகளிலேயே நடப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. திருச்செந்தூர் முருகன் கோவிலுக்குக் கொடிமரம் வெட்டுவதற்குச் சொரிமுத்தையன் கோவில் மலைப்பகுதியையே தச்சர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். அவர்கள் மரத்தை வெட்டும் போது அம்மரத்தில் குடிகொண்டிருந்த சுடலைமாட சுவாமி உட்பட்ட பல தெய்வங்கள் அவர்களை விரட்டின. அவர்கள் பயந்துசென்று அண்மையிலிருந்த சொரிமுத்தையன் கோவிலில் அடைக்கலமானார்கள்.

சொரிமுத்தையன் சிவன் பார்வதி வளர்த்த பிள்ளையாதலால் சிவனார் வேள்வியிலிருந்து வெளிவந்த சுடலைமாட சுவாமி, தம்மைவிட உயர்ந்த சொரிமுத்தையனுக்குக் கட்டுப்பட்டு அத் தச்சர்களை எதுவும் செய்யாது விட்டு விடுவதாகச் சுடலைமாட சுவாமிக் கதைப்பாடல் மூலம் தெரியவருகின்றது.

இப்போது பதிப்பிக்கப்படும் இந்த அய்யனார் ஓலைச்சுவடியில் கைலாயத்திலிருந்து தெற்கே வரும் அய்யனார் முதலில் குடகு மலையில் ஒரு பகுதியான (சபரிமலையின் ஒரு பகுதி என்று கொள்ளுவது பொருத்தம்)

கருமலை உச்சி மேலே மணிகண்டய்யனென்று இருந்தார். (இவர்தான் சபரிமலை ஐயப்பன் என்று இப்போது வணங்கப்படுபவர்). அடுத்தபடியாக அன்னக்கொடிகட்டி ஆடுகின்ற ஆரியங்காவு அய்யன் என்னும் பெயரில் குடியிருந்தார். பின்பு பொதிகைமலையில் மூங்கில் வெடித்து முத்துச் சொரிகின்ற தலத்தைக் கண்டு சிறுபிள்ளை வடிவெடுத்துச் சொரிமுத்தையன் என்ற பெயரில் கோலோச்சினார். அதன் பின்னரே பாண்டியனை மதுரை சென்று கண்டு அவனுக்குச் சேவை செய்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

மேலும் அய்யனார் மலைகள்தோறும் காவல் தெய்வமாக மக்களால் வழிபடப்படுகிறார் என்றும் இப்பதிப்புச் சுவடியில் கூறப்பட்டுள்ளது. சபரிமலையிலும், ஆரியங்காவிலும், பொதிகை மலையிலும், இன்னும் பல பகுதிகளிலும் அவரைப் பெருந்திரளான மக்கள் வழிபடு:திலிருந்து இவ்வுண்மை உறுதிப்படுகின்றது.

பாண்டிய நாட்டில், குறிப்பாகத் தென்பாண்டி மலைப் பகுதியில் அய்யனார் காவல் தெய்வமாக ஆதிகாலம் தொட்டு வழிபடப்பட்டு வந்துள்ளார் என்பதும், அதன் பின்னர், பல்வேறு ஊர்களின் எல்லைப் புறங்களிலும் அவர் சாஸ்தா அய்யன் என்ற பெயரில் எல்லைப்புறக் காவல் தெய்வமாகக் கோவில் பெற்று வழிபடப்பட்டு வருகிறார் என்பதும், சரித்திர சமூக நிலையில் தெரிய வரும் செய்திகளாகும்.

**வனமூர்த்திலிங்க அய்யனார் கதை**

தென்பாண்டி நாட்டின் வடமேற்கு எல்லையான இராஜபாளையம் வட்டார மலைப்பகுதியில் பல்வேறு சமுதாயத்தாரால் வழிபடப்பட்டு வருபவர் வனமூர்த்திலிங்க அய்யனார் ஆவார். இந்த அய்யனார் பற்றிய வரலாறு ஓட்டக்காரசுவாமிக் கதைப்பாடல் (வில்லுப்பாட்டு) மூலம் இப்போது தெரியவருகின்றது.

கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் மதுரைப் பகுதியை ஆண்ட பாண்டிய மன்னர் பரம்பரையில் வந்த ஓர் அரசனுக்குப் பெரிய ஓட்டக்காரன், சின்ன ஓட்டக்காரன் என்ற இருவர் செய்தி அறிவிக்கும் பணியைச் செய்து வந்தனர். மதுரை மீனாட்சி-சொக்கநாதர் கோவிலுக்குக் கொடிமரம் வெட்டவேண்டி - தச்சரும், பிறரும் ஸ்ரீவில்லிபுத்தூர், இராசபாளையம் மலைப்பகுதிக்குச் சென்று அதற்கான மரத்தை வெட்டிய பின்னும் அதனைக்

காட்டைவிட்டு வெளியே கொண்டுவர முடியாத நிலை ஏற்பட்டது. பாண்டியனால் அனுப்பப்பட்ட பெரிய ஓட்டக்காரன், கொடிமரம் வெட்டிய தச்சர்களைக் கண்டு பேசியபின்பு வனத்தில் வேட்டையாடச் சென்ற பொழுது ஆங்கிருந்த வனமூர்த்திலிங்க அய்யனார் கோவிலுக்குள் சிலநாள் இருக்கும் நிலை ஏற்பட்டது. பெரிய ஓட்டக்காரன் வராதது குறித்துக் கவலையுற்ற சின்ன ஓட்டக்காரன் பாண்டியன் அனுமதி பெற்றுக் கொடிமரம் வெட்டிய தச்சருடன் பெரிய ஓட்டக்காரனைச் சந்திக்கின்றான். வனமூர்த்திலிங்க அய்யனார் பெரிய ஓட்டக்காரனைத் தன்பிள்ளையாக வந்துவிடும்படிக் கூறுகின்றார். கொடிமரத்தைக் கோவிலில் சேர்த்த பின்பு பாண்டியனின் அனுமதியோடு அவர்கள் இருவரும் வனமூர்த்திலிங்க அய்யனார் கோவிலுக்கு வந்து அய்யனாரின் பரிவார தெய்வங்களோடு ஐக்கியமாகி விடுகிறார்கள்.

பொதிகை மலையில் உள்ள சொரிமுத்து அய்யன் பல்வேறு சமூகத்தினரால் வழிபடப்படுவது போலவே வனமூர்த்திலிங்க அய்யனாரும் வழிபடப்பட்டு வருகிறார். மேலும் திருச்செந்தூர்க் கோவிலுக்குக் கொடிமரம் வெட்டச் சென்ற தச்சர்களையும், மற்றவர்களையும், மலையிலுள்ள சுடலைமாட சுவாமி விரட்டியபோது அவர்கள் சொரிமுத்து அய்யன் கோவிலுக்குள் சென்று அய்யனாரின் அடைக்கலமாக ஆயினர். இதிலிருந்து சொரிமுத்து அய்யன் கதையும் வனமூர்த்திலிங்க அய்யனார் வரலாறும், ஒன்றுபோலவே அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. தென்பாண்டி நாட்டின் தென்மேற்கு எல்லை மலைப்பகுதியில் சொரிமுத்து அய்யனும், அதன் வடமேற்கு எல்லை மலைப்பகுதியில் வனமூர்த்திலிங்க அய்யனும் கோவில் கொண்டிருப்பது மூலம் அவர்கள் பாண்டிய நாட்டினர்க்கு மேற்குமலை எல்லைக் காவல் தெய்வங்களாக அமர்த்தப்பட்டிருப்பது நன்கு தெரிகிறது.

## 6. சேரனும் அய்யனார் வழிபாடும்

அய்யனார் பற்றிய ஓலைச்சுவடிகளில் பெரும்பான்மை அவர் பாண்டியனுக்காகப் பணிசெய்த கதையே காணப்படுகின்றது. பிற்காலச் சோழர்கள் தம் படையினர் வணங்குவதற்காக அய்யனார் கோவில்களுக்கு ஆதரவு நல்கியமையும், அப் படைகள் ஈழம் சென்று பல ஆண்டுகளுக்குப் பிறகு பாண்டிய நாட்டில் திருச்செந்தூரிலிருந்து மதுரை வரை குடியேறியமையும், திருச்செந்தூர்ப் பகுதியில் பல அய்யனார்களுக்குக்

கோவில்கள் எழுப்பி அவர்கள் வழிபட்டமையும், அண்மைக்கால ஆய்வுகளிலிருந்து தெரியவருகின்றன.

பிற்காலப் பாண்டியர்களின் சந்ததியரின் ஆட்சி தென்பாண்டி நாட்டின் சில பகுதிகளில் மறைந்த போது சேர மன்னர்கள் அப்பகுதிகளைப் பிடித்து ஆட்சி செலுத்தி வந்தனர் என்பது சரித்திர உண்மை. அவர்கள் திருச்செந்தூர்ப் பகுதிகளையும் தம் ஆளுகைக்குட்படச் செய்திருந்தார்கள். மலையாள நாட்டில் மலை எல்லையில் காவல் தெய்வமான அய்யனார்க்கு அம் மலையாள மன்னர்கள் திருச்செந்தூர்ப் பகுதியில் கோவில்கள் எழுப்பினார்கள் எனச் சில கதைகள் வழங்குகின்றன. இதனால் அய்யனார் வழிபாட்டைச் சேர, மன்னர்கள் ஆதரித்து ஊக்கப்படுத்தினர் எனத் தெரிகின்றது.

## 7. தமிழ் இலக்கியங்களிலும் புராணங்களிலும் அய்யனார் வழிபாடு

சாத்தன் எனும் பெயர் பழந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. இப் பெயரே பிற்காலத்தில் அய்யனாராக வழங்கலாயிற்று எனச் சிலர் கூறுவர்.

சிலப்பதிகாரத்தில் மாற்றாள் குழந்தைக்குப் பாலுட்டிய போது அது விக்கி இறந்ததால் அஞ்சிய மாலதி என்பவள் இறுதியில் பாசண்டச் சாத்தனிடம் வேண்ட அவரே குழந்தையாக வந்தார் என்றும், தேவந்தி என்பவள் கணவனாகச் சில ஆண்டுகள் சாத்தன் எனும் தெய்வம் வாழ்ந்ததாகவும் குறிப்பிடப் பட்டுள்ளது.

பக்தி இலக்கியங்களில் சிவனுக்கும் திருமாலான மோகினிக்கும் பிறந்ததாக அய்யனார் கூறப்படுகிறார் என்பது நாயன்மார், ஆழ்வார்கள் பாடல்களிலிருந்து தெரிகின்றது.

கந்தபுராணத்தில், அசுரகாண்டத்தில், மகா சாத்தாப் படலம் எனும் பகுதியில், அய்யனாரின் அவதாரம் கூறப்படுகிறது. அமுதம் பங்கிடுதல், மோகினியைச் சிவன் சேருதல், அய்யனார் பிறத்தல், சிவனிடம் வளர்தல், சூரபதுமாதியர்களால் இந்திரனுக்கும் இந்திராணிக்கும் துன்பம் நேரும்பொழுது இந்திராணியை மாகாளனை அனுப்பிக் காத்தல் முதலிய

செய்திகள் உள்ளன. அய்யனார் கதைப் பாடல் சுவடிகளின் ஒரு பகுதிக்குக் கந்த புராணச் செய்திகளே காரணமாக இருந்துள்ளன.

**காஞ்சி நகரத்தில் அய்யனார்**

மாசாத்தனார் எனும் அய்யனார் அவதரித்துக் காஞ்சியில் கோவில் கொண்ட செய்தி சிவஞான முனிவர் ஒரு பகுதி பாடிய காஞ்சிப் புராணத்தில் 'மாசாத்தன் தளிப் படலத்தில்' கூறப்பட்டுள்ளது. கந்தபுராணத்தை அடியொற்றியே அய்யனாரின் அவதாரச்சிறப்பு இங்குக் கூறப்படுகிறது. அய்யனார் காஞ்சிபுரத்திற்கு வந்து இறைவனை வழிபட்டார் என்றும், காஞ்சி காமாட்சி அம்மைக்குக் காவலாக அவர் அம்மையருகில் கோவில் கொண்டார் என்றும் காஞ்சிப்புராணம் கூறுகின்றது.

இந்தக் காஞ்சி அய்யனாரே கரிகால் பெருவளத்தானுக்கு மேருமலையைத் திரிக்கக் கூடிய செண்டாயுதத்தை வழங்கினார் என்று சிலப்பதிகார உரை வெண்பா ஒன்றால் தெரியவருகின்றது. அய்யனாரைச் செண்டலங்காரன் எனவும் இதனால் வழங்குவர். இச் செண்டாயுதத்தையே பிற்காலத்தினர் குதிரைச் சாட்டை போன்று சித்திரித்து விட்டனர். திருச்செந்தூர்க்கருகிலுள்ள கருக்குவேலய்யனார் கையில் மட்டுமே இச் செண்டாயுதம் இருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

**சமண, பௌத்த நூல்களில் அய்யனார்**

தமிழில் அய்யனாரைச் சமணத் தெய்வமாகவும், பௌத்த தெய்வமாகவும் காட்டும் இடங்களும் காணப் படுவதாகச் சிலர் குறிப்பிடுகின்றனர். மேலும் இந்திரனின் யானை வழிபாட்டிலிருந்து தொடர்புபடுத்தி, அய்யனாரின் யானையைக் குறிப்பிடுவர். குதிரைவாகனம் அவர்க்குரிய சிறப்பு அமிசமாதலால் 'சாதவாகனன் என அய்யனாரைக் குறிப்பிட்டு, சாதவாகனர்கள் வரலாற்றோடு அய்யனார் வரலாற்றைச் சிலர் கூறுகின்றனர்.

இவற்றிலிருந்து, சாத்தனார் என்ற அய்யனார் எல்லா மக்களாலும் எல்லா மதத்தினர்க்குரிய வராகவும் கருதப்பட்டுள்ளார் என்று தெரிகிறது.

**அய்யனார் கதைப் பாடல் சுவடிகளும் நாயக்கர் வரலாறும்**

அய்யனார் கதைப் பாட்டுச் சுவடிகளில் பெரும்பாலும் பாளையக்காரர்கள், துரைமார்கள், வட்டத் தொப்பிக்காரர், பட்டறை,

பைசாக்கு போன்ற சொல்லாட்சிகளிலிருந்து இக் கதைப்பாட்டு நாயக்கர்கள் ஆட்சிக் காலத்தில் பாடப் பெற்ற கதைப்பாடலாக இருக்கலாம் எனத் தெரிகிறது. நாயக்கர்கள் மதுரையைப் பிடித்த காலத்தில், வெறும் பெயரளவிலேயே பாண்டிய வமிசத்தினர் நாடாண்டனர் எனவும், அக்காலகட்டத்தில் ஊழலும், கலகமும் நிறைந்திருந்தன எனவும் சரித்திரச் சான்றுகளால் அறியமுடிகின்றது. அப்படியான காலகட்டத்தில் ஆட்சி சிறப்புற நடப்பதற்கு வந்ததாகவே அய்யனார் கருதப்பட்டார் எனக் கருதலாம்

மேலும் மலையாளத்திலுள்ள பந்தள நாட்டிற்கும் பாண்டி நாட்டு மதுரைக்கும் இடைவழியில் இருப்பது இராசபாளையப் பகுதி ஆதலால், அப்பகுதி வழியாக மேற்கு மலையைக் கடந்து அய்யனார் படைகள் சென்றதாக இராசபாளையம் வட்டாரத்துச் செவிவழிச் சான்றுகள் பகர்கின்றன. இங்குள்ள அய்யனாரும் மிகவும் பிரசித்தி பெற்றவர். இவர்க்கும் தெலுங்கு மொழி பேசுவோருக்கும் மிக்க தொடர்புள்ளதாக அச் சான்றுகளிலிருந்து தெரிகிறது. இதனாலும், பாண்டிய நாட்டில் தெலுங்கர் ஆட்சி ஏற்படத் தொடங்கிய ஆரம்பக் கால கட்டத்தில் உண்டாகிய பாண்டியனின் நிலைஉற்ற ஆட்சியை வலுப்படுத்தவும், கலகக்காரர்கள், கொள்ளையர்களை அடக்கி அமைதி காக்கவும் வந்தவராக அய்யனார் இருந்திருக்கலாமென்றும் அவரைப் பற்றிய கதைப் பாட்டில் புராண நிகழ்ச்சிகளையும் சேர்த்து, புலிப்பால் கொண்டு வந்த நிகழ்ச்சியையும் சேர்த்து இதைப் போன்ற கதைப் பாடலை உருவாக்கியிருக்கலாமெனத் தோன்றுகிறது. இக் கதைப் பாடலே பிற்காலத்தில் எல்லா அய்யனார் கதைப் பாடல் சுவடிப் பிரதிகளுக்கு ஆதாரமாயிற்று எனவும் கூறலாம்.

இவ்வாறாயின், இக் கதை நடந்த காலம், – நாயக்கர்கள் மதுரையைப் பிடித்த 16 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியாக இருக்கலாம் எனவும், அதன் பின்னர் 100 ஆண்டுகளில் அந்த அய்யனார்க்குக் கோவில் எழுப்பப் பட்டிருக்கலாம் என்றும், அக் காலகட்டத்திலோ அதற்குச் சற்றுப் பின்போ தான் இக் கதைப் பாட்டும் புனையப் பட்டிருக்கலாம் என்றும் தெரிகிறது. ஏறத்தாழ 250 ஆண்டுகளுக்கு முன் அய்யனார் கதைப் பாடல் பாடப் பெற்றிருக்கலாம் என்றும், அது 150 ஆண்டுகளாகத் தென் பகுதிகளில் வழங்கப்பட்டுவருகிறது என்றும் கருதலாம்.

## 8. தமிழக நாட்டுப்புறங்களில் அய்யனார் வழிபாடு

### ஊர்க்காவல் தெய்வமாக அய்யனார் விளங்குதல்

முதலில் அய்யனார் கோவில்கள் மலையின் எல்லைப் பகுதிகளிலேயே இருந்ததாக அய்யனார் கதைப்பாடல் பிரதிகள் மூலம் அறிய முடிகின்றது. நாள் செல்லச் செல்ல சிற்றூர்கள் அமைத்து மக்கள் குடியேறிய காலகட்டங்களில் அவ் ஊர்களின் எல்லைப் புறங்களில் காவல் தெய்வமாக அய்யனாரை அமைத்து வழிபட்டு வந்துள்ளனர். இவ்வாறான சாஸ்தா அய்யன் கோவில்கள் (சாஸ்தா கோவில்கள்) இன்றும் பல ஊர்களின் எல்லைப்புறங்களில் சிதைந்த, புறக்கணிக்கப்பட்ட நிலையில் காணப்படுகின்றன. ஊர்க்காரர்களால் காவல் தெய்வமாக வழிபடப்பட்ட இந்த சாஸ்தா அய்யன் கோவில்கள் நாள் செல்லச் செல்ல ஊர்கள் பெருகியதால் அவ்ஊர் மக்களால் புறக்கணிக்கப்பட்டன. ஊர்களின் எல்லையில் இருப்பதால் எந்த ஊருக்கு அவை சொந்தம் என்ற பூசலில், சில அய்யன் கோவில்கள் வழிபாடற்றுச் சிதைந்தன. மேலும் ஊருக்குள்ளேயே சக்தி தெய்வங்களான மாரியம்மன், காளியம்மன், முத்தாரம்மன் போன்ற பெண் தெய்வங்களுக்கெனக் கோவில்கள் பிற்காலத்தில் அமைக்கப்பட்டதால் ஊர் எல்லைப் புறங்களில் இருந்த சாஸ்தா கோவில்கள் புறக்கணிக்கப்பட்டு அம்மன் கோவில்களுக்குள்ளேயோ அல்லது பிற காவல் தெய்வங்களுக்கான கோவில்களிலோ அய்யனார்க்குப் பீடங்களும் இடம்பெற்றன.

இவ்வாறு அய்யனார் ஊர்மக்களால் வழிபடப்பட்டு வந்த நிலையை அறிந்து கொள்ளலாம். சமூகவியல் ஆய்வு மூலம் மேலும் ஆய்வை மேற்கொண்டால் அய்யனார் பற்றி மிகுதியாக அறியலாம்.

### வடதமிழ்நாட்டில் அய்யனார் கோவில்கள்

பாண்டிய நாட்டின் தென்பகுதிகளில் அய்யனார் தம் மனைவியரான பூரணைபுட்கலையோடு வழிபடப்பட்டு வருவதையும், சிறுபான்மை குழந்தை வடிவிலும், பிரம்மச்சாரியாகவும் வழிபடப்பட்டு வருவதையும் தெரிந்து கொள்ள முடிகிறது. இங்குள்ள அய்யனார் கோவில்களில் பெரும்பான்மை சிறிய உருவங்களிலேயே அய்யனாரும், அவர் வாகனமாகிய குதிரை, யானை போன்ற பரிவார தெய்வங்களும் வழிபடப்பட்டு வருகின்றன. மிகச் சிறுபான்மையே, தென் பகுதிகளில் பெரிய பெரிய

உருவங்கள் இடம்பெற்றுள்ள அய்யனார் கோவில்கள் இருப்பதைக் காணலாம்.

ஆனால் மதுரையின் கிழக்குப் பகுதியிலும், வடக்குப் பகுதியிலும், தொண்டைமண்டலத்தின் தென்பகுதிகளிலும் அய்யனாரும் அவரின் பரிவார தெய்வங்களும் பெரிய பெரிய உருவங்களில் வழிபடப்பட்டு வருகின்றனர்.

மதுரையில் அடைக்கலம் காத்த அய்யனார் கோவில், அருப்புக்கோட்டை, கமுதி, ஸ்ரீவில்லிபுத்தூர், இராமநாதபுரத்திலுள்ள சிலபகுதிகள், புதுக்கோட்டை வட்டாரங்கள் போன்ற பகுதிகளில் காணப்படும் அய்யனார் கோவில்களில் எல்லாம் அய்யனாரும், பிற தெய்வங்களும் பெரிய, பெரிய உருவங்களில் அமைக்கப்பெற்று வழிபடப்பட்டு வருகின்றனர். இதற்கான காரணங்கள் பலவாகும். களிமண் மிகுதியாகக் கிடைக்கின்ற இப் பகுதிகளில் பெரிய பெரிய உருவங்கள் சமைப்பதற்கு வசதி இருந்ததால் அவ்வாறு அய்யனாரும் அவர் பரிவார தெய்வங்களும் பெரிய பெரிய உருவங்களில் வழிபடப்படுகின்றனர் என்று கூறுவர். இதற்கு நேர்மாறாகச் சிறிய உருவங்களில் தென்பாண்டி நாட்டு அய்யனார் கோவில்களில் தெய்வங்கள் இடம்பெற்றுள்ளன. மக்கள் குடிபெயர்ந்து செல்லுங்கால் தங்கள் வசதிக்கேற்ப தெய்வங்களின் உருவங்களையும் அமைத்து வழிபட்டதன் காரணமாகவே இச் சிறிய உருவங்கள் ஏற்படலாயின என்பது தவறாகாது.

பெரிய பெரிய உருவங்களில் அய்யனாரும் அவரின் பரிவார தெய்வங்களும் அமைக்கப்பட்டு வழிபடப்படுவதற்கு மற்றொரு சரித்திர உண்மையைக் கூறுவது பொருத்தமாகும். கி. பி. 9–ஆம் நூற்றாண்டில் விசயாலய சோழன் அமைத்த 'நிதம்பசூதனி' என்ற பெண் தெய்வம் பெரிய பெரிய உருவத்திலேயே இருந்தது. அதைப் போன்றே அக் காலத்தில் வழிபடப்பட்ட அய்யனாரும் பெரிய பெரிய உருவங்களில் அமைக்கப்பட்டு வழிபடப்பட்டார். அந்த உருவ அமைப்பே அக்காலம் முதல் இக்காலம்வரை வடதமிழ் நாட்டுப் பகுதிகளில் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. அப் பகுதி மக்கள் மரபிலிருந்து மாறாமல் அய்யனார் உருவங்களையும் குதிரை, யானைகளையும் அமைத்து வருகின்றனர். ஊர்ப்புறங்களில் பெரிய பெரிய உருவங்களைக் காணும்போது பகைவர்களுக்கும், திருடர்களுக்கும், மற்றோருக்கும் திகில் ஏற்படுவதோடு பக்தியும் ஏற்படும் என்ற

நோக்கத்திலும் பெரிய பெரிய உருவங்களில் அய்யனார் சிலைகள் ஏற்படுத்தப்பெற்றிருக்கலாம் என எண்ணத் தோன்றுகின்றது.

#### பிற அய்யன் கோவில்கள்

மிகப் பிரசித்தி பெற்ற அய்யனார் கோவில்கள் மேலே சொல்லப் பெற்றன. தென்பாண்டி நாட்டுக் கதைப்பாடல் சுவடிகளில், இதுவரை கூறப் பெறாதவையான, தென்காசி பொன்னுருவி அம்மன் கதைப்பாடல், பலவேசக்கார சுவாமிகள் கதைப்பாடல், பொன்னிறத்தாள் கதைப்பாடல் போன்றவற்றில் குன்னிமலை சாஸ்தா போன்ற அய்யனார்கள் இடம்பெறுகின்றனர். இதைப்போன்றே வடதமிழ் நாட்டுப்பகுதிகளில் உள்ள அய்யனார்களுக்குரிய வரலாறுகள் புனையப்பெற்றிருக்கலாம். அவ்வாறான அய்யனார்கள் பற்றிய ஓலைச்சுவடிகளோ, வாய்மொழிப்பாடல்களோ கதைகளோ,அற்புதங்களோ கிடைக்குமாயின் தமிழ்நாட்டிலுள்ள அனைத்து அய்யனார்கள் பற்றிய புராண – வரலாற்று – சமூக ஆய்வுகளை மேற்கொள்ள ஏதுவாகும். சுவடிகளில் கிடைத்த அளவு இதுவரை ஆராயப்பெற்றது. மேலும் மேலும் அய்யனார் பற்றிய புதிய செய்திகள் கிடைக்குமாயின் அவை பிற்சேர்க்கையாகச் சேர்த்துக் கொள்ளப்படும்

## 9. அய்யனாரும் பரிவார தெய்வங்களும்

அய்யனார் சிறு தெய்வமாகையால் ஆதியில் கல் படிவமாகவே வழிபடப்பட்டு வந்துள்ளார். பின்பு சிறுதெய்வங்கள் மதிக்கப்பட்ட காலத்தில், சிற்பக்கலை சாத்திர விதிகளின்படி அய்யனார்க்குச் சிலை அமைத்துப் பிரதிட்டை செய்துள்ளனர். இவ்வகையான சிலைகளில் தம் இரு கைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு கம்பீரமாக அவர் நின்று கொண்டிருக்கிறார். அய்யனாரின் வலப்பக்கம் பூரணை அம்மையாரும் இடப்பக்கம் புட்கலை (பொற்கொடி) அம்மையாரும் நின்று கொண்டிருக்கின்றனர்.

பொதுவாக அய்யனார் படிவங்கள் இருந்த நிலையிலும், நின்ற நிலையிலும் அல்லது வாகனத்தில் இருந்த நிலையிலும் வடிக்கப்படும். மண் படிவம் என்றால் பெரிய உருவமான குதிரை வாகனத்தின் மேல் அவரிருப்பது போல் அமைக்கப்படுவார். அருஞ்சுனைகாத்த அய்யனார் நின்ற நிலையில் அருள் பாலிப்பவராய், வீரராய், வாள் இடுப்பில் தொங்க இரு மனைவி மக்களுடன் எழுந்தருளியுள்ளார். மனைவியர் இருவரும்

ஆளுக்கொரு குழந்தையை இடுப்பில் வைத்துள்ளனர். கருக்குவேல் அய்யனார் தம் கையில் செண்டாயுதத்தை ஏந்தியுள்ளார். பூரணை—புட்கலை அம்மன்களுக்கு எதிரே சிறுதெய்வங்கள் வைக்கப் பெற்றிருக்கும். இவற்றுள் ஆண்தெய்வங்களும், பெண் தெய்வங்களும் அடங்கும்.

*பூரணை—புட்கலை(பொற்கொடி)*

அய்யனார்க்கு வலப்புறத்தில் பூரணை அம்மனும் இடப்புறத்தில் புட்கலையாரும் இடம் பெற்றுள்ளனர். இவர்கள் ஆளுக்கொரு ஆண்மகவை ஏந்தி நின்று கொண்டிருக்கின்றனர். பூரணை தன் இடக்கையாலும் புட்கலை தன் வலக்கையாலும் தம்தம் இடுப்பில் உள்ள குழந்தையை அணைத்துள்ளனர். மானவீர வளநாட்டு ஊர்களிலுள்ள அய்யனார் கோவில்களிலும், கருக்குவேல்அய்யனார் கோவிலிலும் இவ்வாறே தேவியர் இருவரும் எழுந்தருளியுள்ளனர். இவர்கள் பற்றிய முழு விபரங்கள் தெரியவில்லை. தேவியர் அய்யனாரின் இரு மனைவியர் எனவும் இரு குழந்தைகளும் அவரது குழந்தைகள் எனவும் கருதப்படுகின்றனர்.

அரிகரபுத்திரன் அல்லது ஐயப்பன் என வணங்கப்பெறும் சபரிமலை ஐயப்பன் மணமாகாது தவமிருக்கச் சென்றார் என்று கூறப்படுகிறது. சபரிமலையில் மாளிகைப்புறத்தம்மன் என்பாருக்கே கோவில் உள்ளது. சேரன் மகாதேவி என்ற பெயரில் வழங்கும் ஊரைச் சேரமன்னன் தன்மகளை அய்யனார்க்கு மணமுடித்துக் கொடுத்ததற்காகப் பரிசாக அளித்ததாகவும் ஒரு கதை வழங்குகின்றது.

வட—மத்திய இலங்கையிலுள்ள பல அய்யனார் கோவில்களிலும் பூரணை – புட்கலையார் இடம் பெறுதலைக் காணலாம். மேற்கே அச்சன் கோவிலிலும் இவ்வாறே காணலாம். பூரணை—புட்கலையாரில் ஒருவர் சௌராஷ்டிரத்தொடர்பு கொண்டுள்ளார் எனவும் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு இவ்விரு அம்மன்கள் பற்றிப் பல கதைகள் வழங்கப்படினும் அவற்றில் உண்மை எதுவுமில்லை. அய்யனார் வீரராகவும், மனைவியர் - மக்களுடன் வாழ்ந்தவராகவும் இருந்தால்தான் இவ்வாறு சிலைவடிவிலும் வணங்கப்படுகிறார் எனக்கருதலாம். இவற்றிலிருந்து அய்யனார் குழந்தை வடிவிலும், இளைஞனாகவும், யோகநிலையிலும் மனைவியர் மக்களோடும் சித்திரிக்கப்படுகிறார் எனத் தெரிகிறது.

*அய்யனாரின் பரிவாரங்கள்*

அய்யனாரைப் பார்த்து நிற்கும் அய்யனார் பரிவாரங்களுள் முதலில் யானையே நிற்கும். அதன்பின் சில அம்மன் தெய்வங்களும் ஆண் காவல் தெய்வங்களும் வரிசையாக நிற்கும். பெரிய குதிரைமேல் அய்யனார் அமர்ந்து இருக்கும் மண்சிலை காணப்படும். குதிரை தன் முன் கால்களை மேலே உயர்த்தியிருக்கும். கால்களுக்கு அருகில் ஆண்–பெண் உருவங்கள் உள்ளன. இவற்றையன்றி யானை, குதிரை மற்றும் காலாட்படைகளும் கூட்டமாக நிற்பதாகக் கற்சிலைகளும், மண்படிவங்களும் மிகுதியாக அய்யனார் கோவில்களில் காணப்படுகின்றன.

அய்யனார் காவல் தெய்வமாகையால் அவர் பவனிவருவதற்குக் குதிரை வாகனமாகப் பயன்பட்டதாகக் கூறுவர். யானைமீதும் அவர் பவனிவருவதாகக் கூறுவர். படைப் பரிவாரங்கள் காவலுக்குத் துணை செல்வதாகவும் கருதுவர். அவர் வேட்டையாடச் செல்வதாகவும் சொல்லுவர். இவற்றையன்றி, அய்யனாருடன் மிகவும் தொடர்பு கொண்டிருந்த நண்பர்களும், அய்யனார் மதிப்பு வைத்திருந்த சில அம்மன்களும் அவரது பரிவாரங்களில் அடங்குவதாகவும் வழங்குவர்.

அய்யனார் கோவிலில் பெரும்பாலும் அய்யனார் மட்டும் தனித்து இருப்பதில்லை. பல்வேறு தெய்வங்கள் அய்யனாருக்கு முன்னர் அமைக்கப் பெற்றிருக்கும். இத் தெய்வங்கள் அனைத்தையும் கூட்டுறவு என்பர். இந்த கூட்டுறவில் 21 சிறு தேவதைகள் இருக்குமாம். அவை பின்வருமாறு.

1. பத்திரகாளி
2. பரமராக்கித்தி
3. சிவனணைந்த பெருமாள்
4. தளவாய்
5. சுடலை
6. காத்தவராயன்
7. வன்னியராயன்
8. பாவாடைராயன்
9. பட்டவராயன்
10. பெரியதம்பி
11. சின்னத்தம்பி
12. கறுப்பன்
13. முன்னடியான்
14. பின்னடியான்
15. முண்டன்
16. பேய்ச்சி

17. இசக்கி

18. பலவேசக்காரன்

19. முனீஸ்வரன்(முனியசாமி)

20. தபசுத்தம்பிரான்

21. சங்கிலிமாடன்

இத் தெய்வங்களுக்குத் தலைமையானவர் அய்யனார். அய்யனாரே அதிகாரியாக இருந்து ஆணையிடுகிறார் என்பதும் மக்களது நம்பிக்கை.

## 10. அய்யனார் — ஐயப்பசுவாமி வழிபாட்டு முறைகள்

பூசை முறைகள்: அய்யனார் காவல் தெய்வமாகையால் நாட்டுப் புறங்களில் பிற காவல் தெய்வங்களுக்கு என்ன பூசை முறைகள் உள்ளனவோ அவ்வாறே அய்யனாருக்கும் செய்யப்பட்டு வருகின்றது.

எல்லைப் புறங்களில் உள்ள அய்யனார் கோவில்கள் அல்லது சாஸ்தா கோவில்களுக்கு அம்மன் தெய்வங்களுக்கு எடுப்பிக்கும் கொடை விழா போன்ற விழாக்கள் எடுப்பதில்லை. ஆனால் பங்குனி மாதம் அய்யனாருக்கு புனித மாதம் ஆகையால் அம் மாதத்தில் சிறப்பான வழிபாடுகள் செய்யப்படுகின்றன. நாட்டுப்புறக் காவல் தெய்வமாகிய அய்யனார் சிலைகளைத் தூய்மை செய்து எண்ணைக் காப்பு சாத்திப் படையல் செய்வர். அதைத் தொடர்ந்து தீபாராதனையும் காட்டுவர்.

அய்யனாருக்குச் சைவப் படையலே செய்வது வழக்கம். ஆனால் அய்யனாரின் சில பரிவார தெய்வங்களுக்குப் படையல் செய்து கோழி, ஆடு போன்ற பலிகளையும் கொடுப்பதுவழக்கம்.

மானவீர வளநாட்டிலுள்ள அருஞ்சுனைகாத்த அய்யனார் கோவிலில் மட்டுமே பங்குனி மாதத்தில் ஆண்டுக்கு ஒரு முறை பத்து நாள் விழா கொண்டாடப்படுகிறது. அந்தக் கொடை விழாவின் தொடக்கத்தில் கொடியேற்றுவர்.

அதன் பின் பத்து நாள்கள் கும்பாபிஷேகம், அன்னதானம் கலை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், வில்லுப்பாட்டுகள், மெல்லிசைக் கச்சேரிகள் போன்றவை நடைபெறும். இறுதியில் தெய்வத்தைத் தெப்பத்தில் வைத்து எடுத்துச் சென்று ஊரில் ஊர்வலமாகத் தூக்கிச் செல்வர்; அச் சப்பரத்தில் அய்யனாரின் திரு உருவப் பொன்சிலை வைக்கப்பட்டிருக்கும். ஊர் முழுவதும்

உலா வந்தபிறகு கோவிலுக்கு மீண்டும் வந்து இறங்கிய பின்னர் பொங்கல் இட்டுப் படைத்து அதை உண்டு மகிழ்கின்றனர்.

அப் பகுதியிலுள்ள மற்றொரு அய்யனாரான கருக்கு வேல் அய்யனாருக்குப் பத்து நாள் கொடை கிடையாது. அதற்குப் பதிலாகக் கார்த்திகை மாதத்தில் கள்ளர்வெட்டு என்னும் திருவிழா இரண்டு நாள்கள் விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. இத்திரு விழாவின் போது கருக்கு வேல் அய்யனார் வில்லுப்பாட்டும் படிக்கப்படும்.

பொதிகை மலையிலுள்ள சொரிமுத்தையனின் கோவிலில் ஆண்டுக்கு ஒரு முறை திருவிழா நடைபெற்று வருகிறது. இத் திருவிழா நடைபெறும் நாளில் எண்ணிலடங்கா மக்கள் இத் தலத்திற்கு வந்து அய்யனாரை வழிபட்டுப் பொங்கலிட்டு, படையல் செய்து, உண்டு மகிழ்ந்து செல்கின்றனர்.

மேற்குத் தொடர்ச்சி மலையில் செங்கோட்டைக்கு மேற்கே உள்ள ஆரியங்காவு அய்யன் கோவிலிலும் அதற்கு வடபாலுள்ள அச்சன் கோவிலிலும் விழாக்கள் நடைபெறுவதுமுண்டு. இக் கோவில்களுக்குப் பெரும் திரளாக மக்கள் வந்து அய்யனாரை வழிபடுகின்றனர். இவ்வையன் கோவில்கள் எல்லாம் தற்காலத்தில் கருவறை, வழிபடும் மண்டபம், சந்நிதி போன்ற கட்டடங்களைப் பெற்றிருப்பதாலும் ஒழுங்காக நிருவகிக்கப்படுவதாலும் நாள்தோறும் பூசைகள் நடந்து வருகின்றன.

அய்யனாரை மிகவும் பரிசுத்த நிலையிலேயே வழிபடவேண்டும். ஆண் பெண்கள் குடும்ப சமேதமாய்ச் சென்று, பூசைகள் செய்து, பொங்கலிட்டு வழிபடுவது நாட்டுப் புறங்களில் இன்றும் காண்பதாகும். ஆனால் சபரிமலையிலுள்ள ஐயப்பசுவாமி தரிசனம் பிற அய்யனார் கோவில்களிலிருந்து முற்றிலும் மாறுபடுகின்றது. கார்த்திகை மாதம் முதல்நாள் மாலையிட்டு, கறுப்பாடை அணிந்து, நாள்தோறும் கோவில்களில் சென்று வழிபட்டு, அசைவ உணவுகளை அகற்றி, குடும்பத்தில் தூய்மையைக் கடைபிடித்து, நாற்பது நாள்கள் இவ்வாறு விரதமிருந்து இருமுடி கட்டிச் சபரி மலைக்குச் செல்லுவது வழக்கமாகும்.

முதல்முதலாகச் சபரிமலை யாத்திரை செய்பவரைக் கன்னிச்சாமி என்கின்றனர். (கன்னி ஐய்யப்பன்). சபரிமலை செல்லும் எல்லாப் பக்தர்களையும் ஐயப்பசுவாமி என்று அழைக்கின்றனர். ஐயப்ப சுவாமிகள்

அணிந்து கொள்ளும் மாலை அய்யனார் முத்திரை பொறித்ததாகவும் சந்தன மணி மாலையாகவோ துளசி மாலையாகவோ உத்திராட்சை மாலையாகவோ இருக்கும். மாலை போடும் சடங்கு குருநாதர் என்பவர் முன்னிலையில் நடைபெறும் மாலையிட்ட பிறகு பிரம்மசாரிய விரதம் மேற்கொள்ள வேண்டும். நாற்பது நாள் அதிகாலையில் எழுந்து, நீராடி ஆலயங்களில் சென்று வழிபட்டு, சைவ உணவு உண்டு, வழிபட்டு வெறுங்காலில் நடந்து, கறுப்பு ஆடை அணிந்து செல்லுவது முக்கிய விதி முறைகளாகும். பலர் தம் வீடுகளிலேயே ஐயப்பசுவாமியின் படம் அல்லது சிலை போன்றவற்றை வைத்து அவற்றுடன் பிற தெய்வங்களின் படங்களை வைத்து குத்து விளக்கு ஏற்றி ஐயப்பனின் புகழ் பாடிப் பூசை செய்வது வழக்கம். சபரிமலை ஐயப்பன் சந்நிதிக்கு ஏறிச் செல்லும் 18 படிகளையும் அமைத்து அவற்றையும் வழிபடுவர். சபரிமலைக்கு யாத்திரை புறப்படும் நாள் நெருங்கியவுடன் அவ்வப் பகுதியிலுள்ள ஐயப்ப பக்தர்கள் ஒன்றாய்க் கூடி இசைக் கருவிகளை முழக்கி, ஐயப்பனின் புகழ்பாடிச் செல்வது இக்காலத்தில் பரவலாகக் காணப்படுகின்றது.

சபரிமலை யாத்திரைக்குப் புறப்படும் முன்னர் ஐயப்பன் அபிசேகத்திற்குத் தேவையான நெய் நிறைத்து முத்திரை வைத்த நெய்த் தேங்காயும், சந்நிதானத்தில் ஏற்றுவதற்கான கற்பூரமும், கடுத்த சுவாமிக்கான அவல், பொரி, பொடிகள் இவையனைத்தையும் இருமுடியில் முன் முடியிலும், சபரிமலை யாத்திரைக்குத் தேவையான ஆகாரப் பொருள்களைப் பின் முடியிலும் வைக்கவேண்டும்.

இவையனைத்தும் இருமுடிக் கட்டில் நிறைக்கும் சடங்கே கட்டுக் கட்டுதலாகும்.

நெய்த்தேங்காய், சாம்பிராணி, கற்கண்டு, கற்பூரம், கதலிப்பழம், முந்திரிப்பழம், பன்னீர், ஊதுபத்தி, பச்சரிசி, பாசிப்பருப்பு போன்ற அபிசேகப் பொருள்கள் முன் கட்டிலும், உணவுப் பொருள்கள் பின் கட்டிலும் வைப்பது முறையாகும். மேலும் கட்டின் இடையில் ஊசி, விளக்கு வைப்பதும் உண்டு. இந்த ஊசிவிளக்குப் பூசையின் போது ஏற்றுவதற்காகவும், மேலும் இரவு நேரங்களில் வெளிச்சத்திற்காகவும் பயன்படுத்துவதற்குக் கொண்டு செல்வார்கள். மேற்கூறிய பொருள்கள் அனைத்தையும் சிறிய சிறிய பைகளில் தனித்தனியே கட்டி வைப்பார்கள்.

கன்னி ஐயப்பனின் கட்டுக்கட்டும் சடங்கினைப் பெரிய சுவாமி அல்லது குருசுவாமி நடத்துவார். கட்டுக் கட்டும் சடங்கினை மிகவும் ஆடம்பரமாக நடத்துவது தான் அக்கால வழக்கம். இந் நாளிலும் முன்போலவே சிறப்பாக அதனைச் செய்யும் பக்தர்கள் ஏராளம். வெள்ளம்குடி குருபூசை, கன்னிபூசை என்னும் வழிபாட்டிற்காக அமைக்கப்பட்ட பந்தலில் தான் கட்டுக் கட்டும் நிகழும்.

பெரிய அல்லது குருசுவாமி விதிகளின்படி கட்டுக் கட்டியதன் பின்னர், இருமுடிக் கட்டின்மேல் எல்லாச் சடங்குகளுக்கும் உரிய காணிக்கைகளை முறையே வெற்றிலை பாக்குடன் வைக்கவேண்டும். இச் சடங்குகள் நிறைவுற்றதும் இருமுடியைத் தொழுது வணங்கி, கற்பூரம் ஏற்றி ஆராதனை செய்து, கிழக்கு முகமாக நின்று, பெரிய சுவாமியின் துணையுடன் பள்ளிக் கட்டினைத் தலையில் ஏற்றி வைத்துக் கொண்டு, ஐயப்பசுவாமி சரண ஓசையுடன் தேங்காய் எறிந்து விட்டு யாத்திரை தொடங்குவர். இந் நேரம் பெண்கள் மங்கல ஒலியாகக் குரவையிடுவர். நாதஸ்வரம் மற்றும் இசைக் கருவிகளுடன் பள்ளிக் கட்டும் ஏந்தி யாத்திரை புறப்படும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். பின்னர் நடந்தோ, இரயில் மார்க்கமாகவோ, பேருந்து போன்ற வாகனங்களிலோ சென்று பம்பை நதியை அடைவர்.

பம்பை நதித் தீரத்தை அடைவதற்கு முன் காட்டுவழிப்போகும் பக்தர்கள் எரிமேலி, பேரூர்தோடு, காளகட்டி, அழுதை, கல்லிடும் குன்று, இஞ்சிப்பாறைக் கோட்டை, கரிமலை வழியாகப் பம்பை அடைந்து நீலிமலை, சரங்குத்தியைக் கடந்து சன்னிதானம் செல்கின்றனர். சென்று அய்யனை வழிபட்டுத் திரும்புகின்றனர்.

சபரிமலைக்குப் பெண்கள் செல்லுவது இல்லை. இக் காலத்தில் சிறுமிகளும் வயதான பெண்களும் செல்வது வழக்கமாக உள்ளது. ஐயப்ப சுவாமி யோக நிலையில் இருக்கும் சபரிமலையில் பெண்களின் பங்கு தவிர்க்கப்பட்டு வந்ததால் இப்பொழுதும் அந்நிலையே நீடிக்கிறது.

சபரிமலை யாத்திரை பந்தள மன்னருக்கு ஐயப்பன் சேவை செய்த காலத்தில் முதன்முதலில் தொடங்கியது. ஐயப்பன் தன் வீரர்களை ஆயுதங்கள் தரிக்காது, ஆடிப்பாடி, இருமுடிகளில் அவரவர்களுக்குரிய பொருள்களைச் சுமந்து, உறுதியான மனத்தோடும், ஊக்கமுடனும் எரிமேலி

போன்ற கடுமையான மலைப் பகுதிகளைக் கடந்து சென்று இறுதியில் சபரிமலையில் தர்ம சாஸ்தா இருக்கும் இடம் சேரவேண்டுமென்று முன்பொரு காலத்தில் ஆணையிட்டது போலவே இக் காலத்திலும் அம் முறை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. சபரிமலை யாத்திரையைச் சிறப்பான யாத்திரையாகக் கருதுகின்றனர். சபரிமலைக்குப் போக்குவரத்து வழித்தடங்கள் சீர் இல்லாதிருந்த காலங்களில் சபரிமலை யாத்திரீகர்கள் கல்லிலும், முள்ளிலும், நடந்து, காடுகளில் விலங்குகளுக்குப் பயந்து, விளக்கின்றி, உணவின்றித் தங்கி, இறுதியில் ஐயப்பசுவாமியின் ஆலயம் சென்று அவரைத் தரிசித்து வந்துள்ளனர்.

ஆனால் போக்குவரத்து வசதி நிறைந்த இந்தக் காலத்தில் பம்பை நதித் தீரம் வரைக்கும் வாகனங்கள் செல்லும் வசதி ஏற்பட்டதால் சபரிமலை யாத்திரை எளிதாகவும் விரைவாகவும் அமைந்து விடுகின்றது. பம்பை நதிக்கும் ஐயப்பனின் ஆலயத்திற்கும் இடைப்பட்டுள்ள பகுதிகளில் கூட பக்தர்கள் நடந்து செல்வதற்கு நல்ல பாதைகள் அமைக்கப்பட்டுள்ளன. இதனால் அதிக அளவில் சபரிமலைக்குப் பக்தர்கள் செல்லக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது.

ஒரு காலத்தில் மிகவும் புனிதமாகக் கருதப்பட்ட சபரிமலை யாத்திரை நாகரீக யுகமான இந்தக் காலத்தில் ஒரு சில ஐயப்ப பக்தர்களால் அப் புனிதப் பயணத்திற்கு இழுக்கு நேரும் வண்ணம் அந்த யாத்திரை மேற்கொள்ளப்படுவது வருத்தத்துக்குரியதாகும்.

## 11. அய்யனார் கதைப் பாடல்களில் கதைவேறுபாடுகள்

அய்யனார் எனும் சாஸ்தா அல்லது ஐயப்பன் பற்றிய கதைகள் தமிழ் நாட்டிலும், மலையாள நாட்டிலும் அவ்வவ் மொழிகளில் வாய்மொழியாகவும், ஓலைச்சுவடிகளிலும் பாடல்களாகக் கிடைத்து வருகின்றன. இவற்றைத் தவிர வடமொழியில் அய்யனார் கதை புராணமாகப் பாடப்பெற்றுள்ளது. பூத நாதோ பாக்கியானம் என்ற பெயரில் உள்ள நூலில் இக் கதை இடம்பெற்றுள்ளது.

தமிழ்நாட்டின் தென் பகுதிகளில், வில்லிசையில் அய்யனார் கதைப்பாடல் கோவில் கொடை விழாக்களில் பாடப்பெறுகின்றது. அய்யனார் கோவில்களன்றி, பிற அம்மன்கோவில்கள், ஆண் காவல்

தெய்வங்களுக்கான கொடைவிழாக்களிலும் அய்யனார் கதை பாடப் பெறுகின்றது.

மலையாள நாட்டின் தென்பகுதியிலும் 'உடுக்குப்பாட்டு' எனும் ஓர் இலக்கிய வகைப்பாட்டாக அய்யனார் கதைபாடப்பெறுகின்றது.

இதுவரை இம் முன்னுரையில் கூறப்பெற்ற செய்திகளில் இடம்பெறும் அய்யனார் கதைகளும், செய்திகளும், பிறவும் இவ்வாறான இலக்கியங்களில் திரட்டப்பெற்றவையே.

தமிழ்ப் பாடல்களில் பெரும்பான்மை வல்லரக்கன் வதம், புலிப்பால் கொண்டுவருதல், பாண்டிச்சேவகம் போன்றவை இடம்பெறும் ஓலைச்சுவடிகளே மிகுதியாக உள்ளன. மலையாளப் பழம்பாடல்களில் பாண்டிச்சேவகமும் புலிப்பால் கொண்டு வருதலும் மிக்கோங்கியுள்ளன. வடமொழிப்புராணத் தாக்கத்தால் மகிஷிவதம் பற்றிய செய்தித் தாக்கமும் உள்ளது. தமிழ்ப் பாடல்களுக்கும் மலையாளப் பாடல்களுக்குமுள்ள கதைவேறுபாடுகளைப் பின்வருமாறு அட்டவணைப் படுத்தலாம்.

| வரிசை எண் | தமிழில் அய்யனார் கதைகள் | மலையாளத்தில் அய்யனார் கதைகள் |
|---|---|---|
| 1. | அய்யனார் பிறப்பு வல்லரக்கனை அழிக்க ஏற்படுகிறது | அய்யனார் மகிஷியை அழிக்க அவதாரம் எடுக்கிறார். |
| 2. | பிறந்த பின், சிவனால் கயிலாயத்தில் வளர்க்கப்படுகிறார் | பிறந்தபின் பந்தள மன்னனால் வளர்க்கப்படுகிறார். |
| 3. | கயிலாயத்திலிருந்து பாண்டிய நாட்டிற்கு அனுப்பப்படுகிறார் | பந்தளநாட்டிலிருந்து புலிப்பாலுக்குப்போகும்போது மகிஷியைக் கொல்ல அனுப்பப்படு கிறார். பின் பம்பை நதி அடைகிறார். |

| வரிசை எண் | தமிழில் அய்யனார் கதைகள் | மலையாளத்தில் அய்யனார் கதைகள் |
|---|---|---|
| 4. | பாண்டியனுக்குச் சேவகம் புரியும் போது புலிப்பால் கொண்டுவரக் காட்டிற்குப் போகிறார் | பந்தளமன்னன் குமாரனாக வளரும் போது காட்டிற்குச்செல்லுகிறார். |
| 5. | பாண்டியநாட்டில் சேனா திபதியாக,மந்திரியாகப் பணியாற்றுகிறார் | பந்தளநாட்டில், இளவரசனாக, கொள்ளைக்காரர்களை அடக்கும் வீரனாகப் பணியாற்றுகிறார். |
| 6. | சோழனுக்காக ஈழச்சேவகம் புரிந்து மீண்டும் பாண்டிநாடு வந்து 'ஐயன்' எனும் தலைவனாக விளங்குகிறார் | பந்தள மன்னனுக்காகப் படைச்சேவகம் புரிந்து, சபரிமலையில் யோக நிலையில் அமர்கின்றார். |
| 7. | ஊர்க்காவல் தெய்வமாக ஐயன் கோவில் அல்லது சாஸ்தா கோவில்களில் வழிபடப்பெறுகிறார். மேற்கு மலையில் மலை எல்லைத் தெய்வமாக விளங்குகிறார். | எல்லைக் காவல் தெய்வமாக மலையில் வழிபடப்பெறுகிறார். |
| 8. | சிறுதெய்வமாகப் பிற அம்மன் கோவில்களில் இடம்பெறுவதால் வில்லுப்பாட்டுக்கதையை முதலில் பாடுகின்ற தகுதி பெறுகிறார் | அவ்வாறான தகுதிபெறாது, சிறுதெய்வவழிபாட்டிலிருந்து மேலோங்கிப்பெருந்தெய்வமாக சபரிமலையில் வழிபடப்பெறுகிறார். |

இவ்வாறான கதைவேறுபாடுகள் தமிழ்ப் பாடல்களுக்கும் மலையாளப் பாடல்களுக்கும் இடையேயுள்ளன. மேலும் பல சுவடிப்பிரதிகள் கிடைத்தால் இவ்வேறுபாடுகள் சிறப்பாக ஆராயப்படும்.

## 12. அய்யனார் கதைப் பாடல்களின் இலக்கியவகை

இக் கதைவேறுப்பாடுகள் புராண, வரலாற்று, சமூக அடிப்படைகளில் அமைந்துள்ளன என அறிய முடிகின்றது. மகிஷி, வல்லரக்கன், புலிப்பால் செய்திகள் புராணச் சாயல் (Myth) பெறுபவை. பாண்டியமன்னன் படைச் சேவகம் அல்லது பந்தளமன்னன் படைச்சேவகம் என்பன பழங்கதை (Legend) அல்லது வரலாற்றுச்சாயல் கொண்டன. ஊர்க்காவல் தெய்வமாக, சபரிமலை சாஸ்தாவாகப் பல்லாயிரம் மக்களை ஈர்த்து வழி படப்பெறுவது சமூகச் சாயல் (Social) பெறுவதாக உள்ளது. இதைக் கீழ்க்காணுமாறு விளக்கலாம்.

| புராணத் தொடர்பு (Mythology) | பழங்கதை (Legend) அல்லது வரலாற்றுத் தொடர்பு (Historical) | சமூகத் தொடர்பு (Social) |
|---|---|---|
| மகிஷி வதம்<br>வல்லரக்கன் வதம்<br>புலிக்கூட்டத்தைக் கொண்டு வருதல் | பாண்டியன் படைத்தலைவனாக/ பாண்டியன் மந்திரியாக பந்தள மன்னன் படைத்தலைவனாகப் பணிபுரிதல் | சோழனிடம் / பாண்டியனிடம் பணிபுரிந்து தெய்வமாதல்/பந்தள இராசகுமாரனாக வாழ்ந்து சபரிமலை ஐயப்பனாக ஆதல் |

இவ்வடிப்படையில் அய்யனார் கதைப்பாடல்கள் மூன்று இலக்கிய வகைகளாக அமைந்துள்ளன என இதுவரை கிடைத்துள்ளவற்றால் தெரிந்து கொள்ள முடிகின்றது. இவற்றுள் வரலாற்றுத் தொடர்புக்கான சான்றுகள் தெளிவாகக் கிடைக்கவில்லை. சமூகத் தொடர்பு இலக்கியங்கள் இன்னும் தெளிவான ஆய்வைப் பெறவில்லை.

## 13. அய்யனார் கதைப்பாடல் சுவடிப்பிரதிகள்

அய்யனார் கதைப்பாடல் இடம்பெறும் தமிழ்ச்சுவடிகள் நெல்லை மாவட்டம், வ. உ. சிதம்பரனார் மாவட்டம், குமரி மாவட்டம் ஆகிய பகுதிகளில் வில்லுப் பாட்டாளிக் கலைஞர்களிடம் மிகுதியாகக் கிடைக்கின்றன. கேரளப் பல்கலைக்கழக ஓலைச்சுவடிகள் நூலகத்திலும் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறை நூலகத்திலும், தமிழ் ஓலைச் சுவடிகள் பாதுகாப்பு மையத்திலும் இக்கதைப்பாடலின் பல பிரதிகள் உள்ளன. இவற்றைத் தவிர சிறுபான்மை தனிப்பட்டவர்களிடமும் உள்ளன. இங்ஙனம் மிகுதியாக இக் கதைப்பாடல் பிரதிகள் கிடைத்தாலும் அவை எல்லாம் கதை வேறுபாடின்றி ஏறத்தாழ ஒரே கதையின் பிரதிகளாகவே உள்ளன.

மோகினிக்கும் சிவனுக்கும் பிறந்த அய்யனார் பார்வதி தேவியாராலும் சிவபெருமானாலும் வளர்க்கப்பெற்று, இறுதியில் தெக்கணா பூமியான பாண்டி நாட்டிற்கு அவர்களால் அனுப்பப்படுகிறார். அவ்வாறு வந்த அவர் பாண்டி நாட்டைக் காத்து நிற்கும் வீரனாகப் பணிபுரிந்து, புலிப்பாலுக்காகப் புலிக்கூட்டங்களைக் கொண்டு வந்து, இறுதியில் காவல் தெய்வமாகப் பாண்டிய நாட்டின் மேல் எல்லையான மலைப்பகுதிகளில் வீற்றிருக்கின்றார். இக் கதையே முதன் முதலில் எடுத்துரை நடையில் பாடலாகப் பாடப்பெற்றிருக்கலாம். பின்பு அது ஓலையில் எழுதப் பெற்றிருக்கலாம். இக்கதை குறைந்த வரிகளுடனிருந்ததால் பாட்டாளிகள் அக்கதைப்பாட்டுச் சுவடியைப் பிரதி செய்து கொண்டனர். எனவே மிகுதியான சுவடிப் பிரதிகள் கிடைத்துள்ளன. இதிலிருந்து அய்யனார் கதையின் மூலம் (Original Text) ஒன்றே என்றும் அதன் பிரதிகளே இதுவரை கிடைத்த சுவடிகள் எனவும் தெரிந்துக் கொள்ளலாம்.

இந்த நூலில், அப்படியான ஒரு சுவடிப் பிரதி பதிப்பித்து வெளியிடப்படுகின்றது. இக் கதைப்பாடல் சுவடிப் பிரதியை வ. உ. சிதம்பரனார் மாவட்டம், சிறுதண்டு என்ற ஊரில், பொன்னம்பல பாண்டியன் என்ற அன்பரிடமிருந்து நான் 1991 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் மூலப்பொழி ச. மண்டக்ராஜா நாடார் அவர்கள் உதவியால் பெற்றேன். இதனுடன் வேறுசில சுவடிகளும், அச்சு நூல்களும் எனக்குக் கிடைத்தன.

சிறுதண்டு பொன்னம்பல பாண்டியனின் தந்தையான புலவர் தங்கப் பாண்டி நாடார் ஒரு பெரிய வில்லுப்பாட்டுக் கலைஞராயிருந்து அண்மையில் காலமானார். தங்கப்பாண்டிப் புலவரின் தந்தையான பொன்னையா புலவரும் பெரிய வில்லுப்பாட்டுப் புலவராகத் திகழ்ந்தவர். பொன்னையா புலவரின் வில்லுபாட்டுக் கதைகளன்றி, அவர் பாடிய தனிப்பாடல்கள் மிகுதியாக இன்றும் வாய்மொழிப் பாடல்களாகத் திருச்செந்தூர், திருவைகுண்டம் பகுதிகளில் வழங்கப்பட்டு வருகின்றன. பொன்னையா புலவரின் தந்தை பற்றி எதுவும் தெரிந்திலது.

பொன்னையா புலவரும், தங்கப் பாண்டிப் புலவரும் மிகுதியான வில்லுப்பாட்டுகளைப் புனைந்திருப்பர் என்பதும், அவற்றைப் பல கொடை விழாக்களில் வில்லிசையில் பாடிப் பல்லாயிரம் மக்களைப் பக்திப் பரவசத்தில் திளைக்கச் செய்திருப்பர் என்பதும் உள்ளங்கை நெல்லிக்கனி.

இவ்விருவரும் யாத்து, பிரதி செய்து, சேகரித்து வைத்திருந்த ஓலைச் சுவடிகள் எல்லாம் பொன்னம்பல பாண்டியனிடமிருந்து 1990ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறையினர்க்குக் கிடைத்தன. வில்லுப்பாட்டுப் பாடும் தகுதி பொன்னம்பல பாண்டியனுக்கு இல்லை. தமிழ்ப் பல்கலைக்கழகத்தார் மொத்தம் 59 சுவடிக் கட்டுகளைப் பெற்றனர். அவற்றுள் 50-க்கும் மேற்பட்டவை வில்லுப்பாட்டுக் கதைபாடல்கள். அவை 18 வில்லுப்பாட்டுக் கதைப்பாடல்களின் பிரதிகள் ஆகும். அந்த 50 சுவடிகளில் 4 சுவடிகள் அய்யனார் கதைப்பாடலின் பிரதிகள். இவற்றில் மூன்று சுவடிகளில் 'சாஸ்தா கதை' எனவும் ஒரு பிரதியில் 'அய்யன் கதை' எனவும் எழுதப்பெற்றுள்ளது.

பொன்னம்பல பாண்டியனிடமிருந்து நான் பெற்ற அய்யனார் கதைப்பாடல் சுவடி 'அய்யன் கதை' என்றே தலைப்புப் பெற்றுள்ளது. தமிழ்ப் பல்கலைக் கழகத்திலுள்ள அய்யன்/சாஸ்தா கதைப்பாட்டும் இப்போது பதிப்பித்து வெளியிடப்படும் அய்யனார் கதைப்பாட்டும் ஒரே மூலத்தின் பிரதிகள் எனக் கூறுவது தவறாகாது.

பதிப்பிலுள்ள அய்யனார் கதைப்பாடல் சுவடியில் கீழ்வரும் குறிப்புள்ளது.

“இந்த சாஸ்த்தாவின் கதை 1144ஆம் ஆண்டு கீலக வருஷம் தை மாதம் 25 ஆம் தேதி பெருமாள் குளம் க. அருணாசல நாடாரால் எழுதப்பட்டது நன்றாக.”

மேலும் வேறொரு கையெழுத்தில்

“சிறுத்தொண்ட நல்லூர் புலவர் ரா.பொ. தங்கப்பாண்டியன் படித்து வருகிற சாஸ்த்தாவின் கதை நன்றாக நீடுழி வாழ்க” என்ற குறிப்பும் உள்ளது. கொல்லம் ஆண்டு 1144-க்கு இணையாக கி. பி. 1969-ஆம் ஆண்டு வருகிறது. இதிலிருந்து பெருமாள் குளம் க. அருணாசல நாடார் ர.பொ. தங்கப்பாண்டிப் புலவர்க்குச் சரவெழுதிக் கொடுத்த ஓலைச் சுவடியே இப்போது பதிப்பிக்கப் பெறும் சுவடியாகும்.

மிக அண்மைக் காலத்தில் பிரதி செய்யப்பெற்ற இச் சுவடியில் காப்புப்பாடல் மற்றும் குறிப்புப்பகுதி (Colophon) உள்ள முதல் ஓலையுடன் 39 ஓலைகள் உள்ளன. இரு பத்திகளாகவும் மூன்று பத்திகளாகவும் வரிகள் எழுதப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தியிலும் குறைந்தது ஆறு அல்லது ஏழு வரிகள் இடம் பெற்றுள்ளன. சந்தி பிரிக்காமலும், வரிகள் ஒழுங்கின்றியும் எழுதப் பெற்றுள்ளதைச் சீராக்கி இந் நூலில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. முதலில் இரு காப்பு விருத்தங்கள் இடம் பெற்றுள்ளன. அதன்பின் கதை ‘கயிலாயத்தில்’ தொடங்குகின்றது. எடுத்துரை நடையில் கதை பாடப்பெற்றுள்ளது. அடிதோறும் நான்கு சீர்களோ ஆறு சீர்களோ இடம் பெற்றுள்ளன. மொத்தம் 760 வரிகள் அமைக்கப்பட்டன.

பதிப்பிலுள்ள இந்த அய்யனார் கதைப்பாடல் குறைந்த வரிகளாகவிருந்தாலும் மிகுந்த சொல்லாளுமை (diction) கொண்டுள்ளமை இதன் சொல்லகராதியிலிருந்து தெரிய வருகின்றது. இந்தக் கதைப்பாடலில் இடம் பெறும் உவமை நயங்கள் நம் கற்பனைக்கும் அப்பாற்பட்டவை. அவை தொகுத்து இணைப்பாகக் கொடுக்கப் பெற்றுள்ளன. தமிழ் நாட்டிலும், மேற்குத் தொடர்ச்சி மலையிலும் இருக்கும் அய்யனார் கோவில்களில் சிலவற்றை வரைபடத்தில் காட்டியுள்ளோம்.

தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையத்தில் நெல்லை மாவட்டம், தென்காசி வட்டம் குறும்பலாப்பேரியிலிருந்து பெறப்பட்ட சாஸ்தான் கதை என்ற சுவடியின் குறைப் பிரதியும் ஏறத்தாழ இப் பதிப்புச் சுவடியைப் போன்றதுதான். அதுவும் இப் பதிப்புக்குத் துணையாகக் கொள்ளப்பட்டது.

## 14. நன்றியுரை

தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையத்திலிருந்து சுவடிப்பதிப்பு நூல்கள் தொடர்ந்து வெளிவருவதற்குக் காரணமாக இருந்து, ஊக்கமும், அன்பும், ஆதரவும் நல்கி, நல்ல வாழ்த்துரை ஒன்றையும் இந்நூலுக்கு அளித்துள்ள இம் மையத்தின் தலைவர் ஐயா திரு பா. இராமச்சந்திர ஆதித்தனார் பி.எஸ்சி. அவர்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இம் மையம் வளருவதற்கு ஊக்கமும் உதவியும் அளித்துவரும் அண்ணாச்சி செவாலியர் டாக்டர் வி.ஜி. சந்தோசம் அவர்களுக்கு என் நன்றி.

நல்ல பல தமிழ் நூல்கள் ஓலைச் சுவடிகளிலிருந்து அச்சுவடிவம் பெறவேண்டுமெனவும், அவற்றில் பல ஆய்வுகள் நடந்திட வேண்டுமெனவும் விரும்பி, எனக்குப் பல்லாற்றானும் நேசக்கரம் நல்கிவரும் மதிப்பிற்குரிய ஐயா இரா. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ., அவர்களுக்கு, மிக்க நன்றி.

அய்யனார் கதைப் பாடல் ஓலைச் சுவடியைத் தந்த திரு பொன்னம்பல பாண்டியனுக்கும், அவரிடமிருந்து பெற்ற பிற ஓலைச்சுவடிகளின் பட்டியலை அனுப்பித்தந்த தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச் சுவடித்துறைத் தலைவர் முனைவர் த.கோ. பரமசிவம் அவர்களுக்கும், கருக்குவேல் அய்யனார் வில்லுப்பாட்டுக் கதையை எழுதித் தந்த திரு முருகன் அவர்களுக்கும் பல ஆய்வுக் கருத்துக்களை நல்கிய மூலப்பொழி ச. மண்டக் ராஜா அவர்களுக்கும், அருஞ்சுனை காத்த அய்யனார் புகைப்படம் எடுக்க உதவிய திரு அ. அசோக் ஆதித்தன் அவர்களுக்கும் நன்றி.

இந் நூலாக்கத்தின்போது உறுதுணையாயிருந்து, உவமையகராதி, பெயரகராதிகளைத் தயாரித்த திரு க. தேரியப்பனுக்கும், உதவியாளர் திரு நெல்சனுக்கும், இந்நூலுக்கான முன்னுரை எழுதுங்கால் பல ஆய்வுக் கருத்துக்களை நல்கி இந் நூல் வெளி வர ஆர்வம் காட்டிய இம் மையத்தின் நிருவாக அதிகாரி திரு K. நடராஜன் அவர்களுக்கும், அட்டைப் படம் வரைந்த ஜி.ஜி. குமார் அவர்களுக்கும், எப்போதும் உதவிக் கரம் நீட்டும் பேராசிரியர் டாக்டர் இன்னாசி அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் அச்சாக்கத்திற்குப் பல வகையிலும் உதவிய திரு துரை. இராகவ ஆதித்தன் அவர்களுக்கும், அக்ஷரா நண்பர்களுக்கும் முக்கியமாக, திரு பிரசாத் அவர்களுக்கும், பாவை அச்சகத்தார்க்கும் குறிப்பாக திரு துரைராஜ் அவர்களுக்கும் மிக்க நன்றி.

**ஆ. தசரதன்**
பதிப்பாசிரியர்

# அய்யனார் கதைப்பாடல்

## விருத்தம்

### காப்பு

மெய்யைத் தூண்டி வரம்வாங்கி
விரைவா யரக்கன் தனைவெகுண்டு
செய்யச் சிவனார் தனைவெருட்டி
திருமாலருகே மகிழ்ந்து சென்று
தையல் வடிவாய் நடந்துசென்று
சத்தியங் கொண்டு வரமழித்த
அய்யன் வரலாறு தனைப்பாட
ஆனை முகவன் காப்பாமே.

2 வரத்தால் வதைத்து வதைவதைத்து
வரத்தால் சிவனார் தனைவெருட்டி
கூற்றை யுதைத்தோன் றனைமேவி
கொண்ட கோலந் தனைக்காட்டி
ஆத்தாள் மோகந் தனில்பிறந்து
அதிகபுலிப்பால் கறந்து வைத்த
சாஸ்த்தா வின்கதை படிக்க
தந்திமுகவன் காப்ப தாமே.

---

*காப்பு*

1. அரக்கன் - வல்லரக்கன், தூண்டுமாமுனி; தையல் - மோகினி; வரமழித்தல் - வல்லரக்கன் பெற்ற வரத்தை அவனாலேயே அழிக்கச் செய்தல்
2. கூற்றையுதைத்தோன் - எமனை எத்திய இறைவன்; ஆத்தாள் - மோகினியாகிய திருமால்; சாஸ்த்தா >சாஸ்தா >சாத்தா

## கயிலாய வருணனை

### நடை

உள்ளதன்றி[க்] கள்ளமற்ற வெள்ளிக் கயிலாசம்
உம்பருல கத்தினிடை ஊடுருகி நிற்கும்
வள்ளல் பரமேஸ்பரனார் மாளிகையின் மேடை
மால்பிரம ரிந்திரர் வணங்குகின்ற வாசல்
தேசத்தை விசாரிக்கின்ற காரியக் காரரும்
சீலமுறு யோகி பதினாலு முனிவோரும்
மாசறு குலராச ராசமுனி வோரும்
மருத்துவர்கள் வாயுதேவ ருத்திரர்கள் சூழ
தோத்திரஞ்சேர் பன்னிரெண்டு சூரியர்கள் சூழ
துந்துமி முழக்குகின்ற இந்திரன் வணங்க
காத்திருக்கும் நந்தியுடன் கைப்பிரம்புக் காரர்
கைக்கருமஞ் செய்யுகின்ற கனவார்கள் கோடி
மாத்திரைக் குள்ளாகப் பூமிவட்டமாகச் சுத்தி
வந்து பொம்மியர்களோடு கந்திருவர் சூழ
சாத்திரங்கள் வேதங்கள் சருவ சித்திகள்
தப்பிடாமல் ஆட்டிவைக்கும் சகல தேவதையும்
செய்த புண்ணியங்களை[த்] திருடுகின்ற பேரும்
தீது புரிவாரோடே வாதை யிடுவாரும்
சைவ சிகாமணி தன்கயிலாச வாசல்
சாச்சியை விசாரிக்கின்ற ராச்சதர்கள் கோடி

---

1. உம்பர் - அமரர்; ஊடுருகி > ஊடுருவி
2. பரமேஸ்பரனார் - பரமேசுவரனார், சிவன்
3. விசாரிக்கின்ற காரியக்காரர் - மேற்பார்வை செய்வோர்
7. மாத்திரைக்குள்ளாக - ஒரு கணத்தில்; பொம்மியர்கள் - அரம்பையர்; கந்திருவர் - கந்தருவர்
8. சருவ சித்திகள் - எல்லாச்சித்திகளும்
9. வாதை - வேதனை, நோய்
10. சைவ சிகாமணி - சைவசமயத்திற்கு மணிமுடி போன்ற சிவபெருமான்; சாச்சி சாட்சி

கும்பிடுவார் தங்களுக்குப்[ப்] பூக்கொடுத்த மரங்கள்
கூறரிய கயிலாச பேருவந்து காண
பண்பு சிவனடியார்க்குப்[ப்] பால்கொடுத்த பசுக்கள்
பத்தியுள்ள கயிலாச முத்தி வந்துசேர
பழகுகின்ற பாதையிலே நிழல்கொடுத்த மரங்கள்
பாக்கியஞ்சேர் கயிலாச பதவி வந்துசேர
தழுவும் உத்திராக்கியமுஞ் சாம்பிராணி சுமந்த
சடைக்கழுதை கயிலாச சமூகஞ் சென்றுகாண
கயிலாச மலைதனக்கு காணிகாத்த வரில்லை
காசினியில் சீவனெல்லாம் கண்டு வந்ததுண்டாம்
வயிரமுள்ள சிவனையன்றி மற்றுமுள்ள பேரெல்லாம்
வருவதுவும் போவதுவும் ஆகவே இருக்கும்
மணிகளுட நாதங்கள் கணீரெனத் தொனிக்கும்
மழைமுழக்கம் போலிருக்கும் வாச்சியத்தி னோசை
பிணிகளில்லை மூப்புமில்லை பெரும்பசியு மில்லை
பிறப்புமில்லை இறப்புமில்லை வெறுப்புமில்லை யங்கே
பாடுவது மாடுவதும் வீடுதோறு முண்டு
பஞ்சமில்லா நெஞ்சிலொரு வஞ்சகமு மில்லை
கரடுகளு மில்லாத மேடுகளு மில்லை
கல்லறை யில்லாத மறவர் சில்லறையுமில்லை
எறும்புகளுஞ் சிறுபுழுவை[க்] கரும்புவது மில்லை
ஈக்களுந் தான்போய் மரத்தி லேறுவதுமில்லை
குறும்புகளும் வறுமைகொண்டு புலம்புவது மில்லை
கொடுக்கிற பேரல்லாது தடுக்கிற பேரில்லை
மனம்பொருத்து[க்] கொடைகொடுத்தால் மாற்றுவது மில்லை
வாழ்சிவனுக் கடிமையாகார் மனிதரைப் போலில்லை

---

14. உத்திராக்கியம்- உத்திராக்ஷம்; சடைக் கழுதை - கழுத்தில் அதிகமாகத் தொங்கும் முடிக்கற்றைகளுள்ள கழுதை.

15. காணி - உரிமை

17. வாச்சியம் - ஓர் இசைக்கருவி

20. கரடு - மேடு பள்ளம்; சில்லறை - சிதறிய

21. கரும்புதல் - அரித்தல்

22. குறும்புகள் - சிறுஉருவமுடையோர்

சினம்படைத்த பேர்கள்கிட்டச் சொல்லப் படாதங்கே
தேசத்துள்ளே பிறந்த சிவனுக்கோ ரொதுக்கம்
அழுக்குமில்லை யடிப்பிசகும் வழுக்குமில்லை மலைதான்
அண்ண 'லடியார்களுட கண்ணுக் கழகாகும்
இழுக்குடைய பேர்கள்மட்டும் யேறப்படா தங்கே
இந்திரலோகம் வூடுருவும் சந்திரஉதயம் போலே
ஒதி யுண்பாரல்லாது உழுது உண்பாரில்லை
ஊர்[ப்]புறத்தில் பத்துலட்சம் பேய்[ப்]படைகள் காவல்
கண்டவர் மேலாசைவைக்கும் பெண்களு மில்லை
களவுமில்லை செத்துப்போற யிழவுமில்லை யங்கே
மண்டலத்தில் நின்ற எட்டுமலையில் பெரிதான
வர்ண[க்]கயிலாச மலையினுட வளமை துலையாதே

## சிவன் வீற்றிருத்தல்

### வேறு

கயிலைமலை என்னுங் கோட்டையிலே
காட்சிகள் காண கோபுரத்தில்
வயிரமணித் தூண்சேர் மண்டபத்தில்
வர்ணஞ் சிறக்கின்ற மணிப்பீடத்தில்
தங்கப் பலகையின் மேலாக
தலத்தாமரை தவசி ருப்பில்
சிங்கா தனத்தின்மேல் யீஸ்பரனார்
தெற்கு முகமாக[த்] தவசியிருந்தார்
மூத்த மகனான யானைமுகன்
முகந்த கற்பூரம் ஏந்திநிற்க

---

24. சொல்லப்படாது - சொல்லக்கூடாது; ஒதுக்கம் - மறைவிடம்
25. அடிப்பிசகுதல் - கால் இடறுதல்
26. ஏறப்படாது - ஏறக்கூடாது
33. சிங்காதனம் - சிங்காசனம், இருக்கை
34. யானைமுகன் - கணபதி

கற்றைக் குழல்வள்ளி நாயகனார்
கமலப் பூவள்ளி சொரிந்துநிற்க
சிலது ராசாக்கள் அடப்பங்கட்டி
தீருவை கட்டியங் கூறிநிற்க
அரியும் பிரமனும் இந்திரனும்
அரகராவென்று புகழ்ந்து நிற்க
லச்சந் தம்பிரார் வீரவாகும்
எந்தன் பெருமானைப் போற்றிநிற்க
பச்சந் தருகின்ற பூதப்படை
பதினெண் கோடியுஞ் சுத்திநிற்க
மலையைத் திருப்பியே கடல்கடைந்த
வாலியொரு பக்கம் போற்றி நிற்க
கலையைப் பரியாக யேறும்
பத்திரகாளி யொருபக்கம் போற்றிநிற்க
இருண்ட யானைத்தோல் மூடிக்கொண்டு
எட்டு வயிரவர் போற்றிநிற்க
திரண்ட தளத்தோடு வேர்வைப் பத்திரன்
தேவன் சமூகத்தில் சேவிக்கவே
நாத னிருக்கின்ற மண்டபத்தை
நாக ராசாக்கள் வலஞ்செய்யவே
வேதந் தொனிக்கின்ற தொனியுடனே
வீணை ராகங்கள் தான்முழங்க
மேடை முகப்பிலே கன்னிமார்கள்
வெஞ்சா மரைதனை தலையசைக்க

---

35. வள்ளி நாயகன் - முருகன்

36. அடப்பம் கட்டுதல் - கப்பம் கட்டுதல்; தீருவை - தீர்வை, வரிப்பணம்

38. வீரவாகு - கந்தனுடன் சூரனை வதைக்கச் சென்றவர்

39. பச்சம் - பட்சம் - பக்கம்

40. வாலி - பாற்கடலைக் கடைந்த போது ஒருபக்கம் வாலியும் மறுபக்கம் அமரர்களுமிருந்து கடைந்தனர் என்று புராணம் கூறும்

42. எட்டு வயிரவர் - அட்டதிக்குப் பாலகர்

43. வேர்வைப்பத்திரன் - வீர பத்திரன்

44. வலஞ் செய்தல் - சுற்றி வரல்

வாடைக் காத்தினை வரச்சொல்லியே
 வர்ணன் எதிர்பார்த்து நிற்க
கோடைக் குயிலோடு கிளிப்பிள்ளைகள்
 குமரன் திருப்புகழ் படித்துநிற்க
ஓடித் திரிகின்ற மேகங்கள்தா
 னுச்சி மலைமேலே பூச்சொரிய
அம்மை படுபாதி பங்காக
 அப்பன் முழுவதுமா யரசிருந்தார்
மும்மை யுலகத்தினிடந் தோறும்
 மூன்று திருக்கண்ணுந் தான்துலங்க
ஈரே ழுலகுக்கும் நடுவாக
 இருந்தார் நடுவிலே பரமசிவன்

## வல்லரக்கன் தவம் செய்தல்

வாரப் பக்ஷமும் மத்திபமும்
 வைத்தங் கிருக்கின்ற காலத்திலே
விரிந்த நாவுலகப் பெருந்தீவில்
 மிகுந்த காலத்திற் ராச்சதரில்
பிரிந்து திரிந்ததோர் வல்லரக்கன்
 பிரம ராச்சத னென்றவனாம்
தெய்வ லோகத்து ராசாக்கள்
 செத்துப் போக[ா]மலிருக் கிறார்கள்
மேவி எதிராக நின்றுகொண்டு
 விரலால் தூண்டியே கொல்லவேணும்
அமுதந் தனையுண்ட படியாலே
 ஆயுதத்தினால் சாக மாட்டார்
சுமதி பகைவரை[த்] தூரநின்று
 தூண்டிக் கொல்வது சோலியல்ல

---

50. படுபாதிபங்கு - சமபங்கு

53. வாரப் பக்ஷம் - வாரப் பக்கம்; மத்திபம் - மத்திமம், நடுக்காலம்

54. நாவுலகப் பெருந்தீவு - நாவலந்தீவு, இந்திய நாட்டிற்கு நாவலந்தீவு எனப் பெயர்

59. சுமதி பகைவர் — மிகுதியான எதிரிகள்; சோலி - வேலை

கண்டதேவர் மேல்விரலை நீட்டி[க்]
கழுத்தை யறுப்பது காரியந்தான்
பண்டை ராச்சத ரிந்தப்புத்தி
படிக்க மாட்டாமல் செத்துப்போனார்
நமக்கிப்படி[த்] தெய்வம் தந்ததுண்டால்
நாட்டுப் பகையெல்லாந் தீர்ந்துபோமே
தமக்குச் சளனென்றே யறியாமல்
தவசு பண்ணவே துடங்குவானாம்
மனிதரறியாத காட்டிற் சென்று
மரத்தின் விழுதுதனை முடித்து
இனிய பெருவிரல் தனைமுடிந்து
இடும்ப ராச்சதன் தலைகீழாய்
தூங்குந் தலைநேராய் குழியைவெட்டி[ச்]
சூழ விறகதை அடுக்கிக்கொண்டான்
பாங்காய் எரிகின்ற அக்கினிமேல்
பாவி தலைகீழாய்[த்] தூங்குகிறான்
பஞ்சாச் சரந்தன்னை வட்டஞ்செய்து
பரமசிவன் தன்னை மனதிலெண்ணி
நெஞ்சில் நினைத்ததோர் வியாழவட்டம்
நெடிய தவஞ்செய்து நின்றானே

## சிவனிடம் வல்லரக்கனை நந்தி கூட்டிவரல்

அரக்கன் செய்கின்ற தவத்[தை]எல்லாம்
அறிந்து சிவநந்திதனை யழைத்தார்
சுரத்தில் தலைகீழாய்[த்] தவசுபண்ணும்
தூண்டு மாமுனிதனைக் கூட்டி

---

63. சளன் - துன்பம்; துடங்குவான் - தொடங்குவான்

65. இடும்பராச்சதன் - வல்லரக்கனுடைய இயற்பெயராக இருக்கலாம். பஸ்மாசுரன் என்றும் குறிப்பிடுவர்

69. வியாழ வட்டம் - நீண்ட காலம்

71. சுரம் - காடு, வனம்; தூண்டுமாமுனி - வல்லரக்கன், விரலைத் தூண்டிக் கொல்ல வரம் பெற்றவன்

அழைத்து வரவேணுமென் றுரைத்தார்
அதனைக் கேட்டவ ரெழுந்திருந்தார்
விடையுங் கயிலாச கோட்டைவிட்டு
விடை கொண்டெழுந்து வாறார்
நந்திதேவர் தெற்காக நடைகொண்டார்
நடுக்காட்டி லரக்கன் தவங்கண்டார்
சந்தித்தான் அரக்கன் நந்திதன்னையும்
தம்பிரா னீவாழுமென்று கும்பிட்டான்
கொல்லவேண்டி[த்] தவங்கள் புரிந்தவர்
கூட்டிவா வென்றார் கூடவாருமென்றார்
நல்லகாலம் நமக்கின்றைக் காமென்றே
நந்தி தேவருடனே நடைகொண்டான்
வெள்ளிக்கட்டும் பிரம்புக்கை வீச்சுக்கும்
மேலுங்கீழுந் திருகிய மீசைக்கும்
துள்ளிக்கொண்டசை குண்டல காதுக்கும்
தோளில்போட்ட நெடும்புலித் தோலுக்கும்
பையபைய வருஞ்சிருப்பாணிக்கும்
பத்துலச்சம் பணந்தந்தால் காணுமோ
ஏதுதானய்யா மெத்த[க்]கொடு போறீர்
இன்னந் தூரமுண்டோ கயிலாசந்தான்
என்றுகேட்ட அரக்கன் முகம்நோக்கி
இங்கே பாரென்று கோட்டைகாட்டினார்
கோபுரமுந் திருப்பணி மேடையும்
கோடிகோடி கணாதிபர் கூட்டமும்
சாபமோசன மாமுனி வோர்களும்
தனக்குத்தான் பகையாகிய தேவரும்
ஒன்றாய்[க்] கூடிஇருக்கின்ற கூட்டத்தில்
... ... ...
பக்கத்தில் நின்றவர் தன்முகம்பார்த்துப்

---

78. வெள்ளிக் கட்டு - வெள்ளியால் பூண் கட்டப்பட்டுள்ள கைத்தடி

80. சிருப்பாணி - சிரிப்பாணி - சிரிப்பு

81. மெத்தக்கொடுபோதல் - நீண்டதூரம் கொண்டு செல்லுதல்

பரமநகரில் பகையோ டிருப்பதேன்
என்னைக் கூட்டிவரச்சொன்ன செய்திதான்
இந்தக்கோடிப் பகையிடமோ வென்றான்
உன்னைப் பாவம்விடாத படியினால்
ஒக்கவே பகையாச்சு துனக்குத்தான்
பொன்னின் மண்டப[த்]துள்ளே இருக்கின்ற
புனிதனைச்சென்றுபோற்றுவாய் நீஎன்றார்

## சிவனிடம் வல்லரக்கன் வரம் கேட்டல்

வண்ணமான பரமசிவன் தன்னை
வாழ்த்தினான் போற்றினான் வல்லரக்கனும்
அரக்கன்தன் முகம்பார்த்துமே யீஸ்பரன்
அல்லவோ வகைசொல்லுவா நீஎன்றார்
வரத்தை[ச்] சொல்லென் றரனாருஞ் சொல்லவே
மனதிலன்றைக்கு வைத்ததை[ச்] சொல்லினான்
எனக்குத்தான் பகைமெத்த இருக்குது
இத்தனைப் பகைஎல்லாமே மேவனான்
கனத்திருக்குங் கயிலாசக் கோட்டையில்
கணங்களெல்லாம் பகையாகவே கண்டேன்
ஆயுதங்கொண்டு சாதிக்கப் போகுதோ
அலக்கொடுக்கப் படாதவர் தன்னோடே
தூயதேவ ரிஷிகளை[க்] கண்டாக்கால்
தூரநின்று விரலதை[த்] தூண்டுவேன்
தலைதெறிக்கும்படி வரந்தந் திட்டால்
சாதிப்பேன் சோதிப்பேன் பகையோர்களை
பலமாக[த்] தரவேணு மென்றுதான்
பாதகன்கேள்க்க பரமனுஞ் சொல்லுவார்

---

87. ஒக்கவே - எல்லாம் சேர்ந்து

91. அல்லவோ - மேலும்

94. கனத்திருத்தல் - வலிமையுடனிருத்தல்

95. அலக்கொடுக்கப்படாதவர் - வருத்தப் படாதவர்

## சிவன் வரமீய்தல்

உலகம்ஒக்கப் பகையாகக் கண்டதால்
உனக்குத்தான் பகையாகா திருக்குமோ
விலகிக்கொள்ளாமல் சாகிற விரல்காட்ட
வேண்டக்கோ தந்திட்டோம் தந்திட்டோம் என்றார்

## வல்லரக்கன் வரத்தைச் சோதிக்க முனைதல்

தந்திட்டோ மென்றரனாருஞ் சொல்லவே
சமர்த்தரில்லை எனக்குச் சமானமாய்
வந்திப் பலனுக்குப் பயந்தாற்சிவன்
வரத்தை[ச்] சோதிக்கமாட்டாமல் போவேனோ
சோதிப்பேனென்று கைவிரல் நீட்டியே
தூண்டுமாமுனி யீசன் எதிர்சென்றான்
மெத்த தேவரிசி முனிவோர்களும்
வெள்ளிமாமலை தன்னை விட்டோடினார்.

## வல்லரக்கனுக்குப் பயந்து எல்லோரும் ஓடுதல்

### வேறு

அரக்கன் கொடூரம் பொறுக்கப் படாதென்று
அரனாரும் ஓடினார் உமையவளு மோடினாள்
வெறிகொண் சந்திரரு மிந்திரரு மோடினார்
வெகுகோடி தவமுனிவர் குகையிலே வொளித்தார்
இராச்சதன் றங்காமா லெச்சனிவ னென்றே
இலட்சிமியுடன் பத்திர காளியு மோடினாள்
புரோகிதனார் கூடித்திசதா சத்தியு மொளித்தாள்
பூதகண நாதர்சிலர் புவியிடை[ப்] புகுந்தார்
துடராதபடி கடிது சூரியரு மோடினார்
சுருதி நடையாய்க் காலதூதுவ ரொளித்தார்

---

101. சமர்த்தர் - பகைவர், இணையானவர்; சமானம் - சமம்
102. வந்திப்பலன் - முதல் பலன்
107. லெச்சனிவன் - தொந்தரவு தருபவன்
109. துடராதபடி - தொடராதபடி; சுருதி நடையாய் - ஒரே ஒலியெழுப்பி நடந்து செல்லுதல்

அடியிதறி யிதறிஅம்மை உமையவளு மோடினாள்
அம்மாடி எனவிசுவ கம்மாள ரோடினார்
சடைமுடிகள் சிதறவே தவசிகளு மோடினார்
சருவதேவ ராதிகளு மோடி விட்டாரே
உடையனாரிருக்கின்ற வுலக மதிலே
உனதுவரம் உனதிடமாய் சோதிப் பேனான்
இரக்க மில்லாதவன் எதிராகுதல் கண்டு
இவனம்மை விடுவதில்லை என்ன எழுந்தார்
அரக்க னிடமாகவோ ராதாய முண்டென்று
அவனுடைய கண்காணவே ஓடினாராம்

## வல்லரக்கன் பின்தொடர்தல்

கயிலாச மலையைவிட்[டு] இமைகிரி மலைமேல்
கால்வைக்கு முன்னவன் கூடவே குதித்தான்
வயிரமலை விட்டுல[க]க் கடலிடை குதித்தார்
வல்லரக்கன் சென்று கடலிடை மறித்தான்
மேக மண்டலத்தில் விரைவே குதித்தார்
விடுவேனோ என்றுபின் தொடுவ போல் நின்றான்
தாக மொடுக்கமிறை தாவியே குதித்து
தட்டோல மிட்டு[ச்]சிவன் வட்டாடி னாரே
தொட்டுக் கொள்ளாதபடிக் கிட்டவரு முன்னே
சூட்ச வடிவாகவே மேல்சிவ னொளித்தார்
தப்பினானென் றரக்கன் மீண்டு போனான்.

## சிவன் திருமாலிடம் முறையிடல்

### வேறு

அரக்கன் வெகுதூரம் போனபின்பு
அரனார் திருவுளத்தி[ல்] நகையுண்டாம்

---

110. அடியிதறுதல் - அடி இடறுதல் (இதறு < இடறு)

117. தாகமொடுக்கம் - நீர் வேட்கை; தட்டோலமிடல் - அபயமிடுதல்; வட்டாடுதல் - சூதாக ஆடுதல்

118. சூட்சவடிவு - தந்திரமான தோற்றம்

துரத்தி முடுக்கியே தகையெடுத்து[த்]
தோற்றுப் போனவர் கோலம்போலே
தமக்குத் துணையான நாராயணர்
தம்மைத் தேடியே செல்லுவாராம்
உமைக்குத் தமையனார் ஆள்பாடியில்
உள்ள பசுவெல்லாந் திரட்டிக்கொண்டு
முரட்டுத்தடி யொன்று கடைகாலொன்று
முதிய தோளிலே தோள்பையொன்று
இரட்டைத் துணியுஞ் சீங்குழலுமொன்று
இடுப்பில் சொருகிய அரிவாளொன்று
கம்பைச் சுழற்றுவார் ஓடிக்கொள்வார்
கடுவாய் கிடந்தாலும் பதறமாட்டார்
கொம்பு பசுக்களைத் திரட்டிக்கொண்டு
குளிர்ந்த நிழலிலே கூட்டிக்கொள்வார்
ஓடித் திரிகின்ற இளைப்புத்தீர
ஊன்றுந் தடிக்கம்பில் உறங்கிக்கொள்வார்
காடிக் கடையாலின் பழங்கஞ்சியைக்
கடைவா னனையவே ஒழுகிக்கொள்வார்
சுண்[]டைச் செடிக்குள்ளே இருந்துகொண்டு
சுருதி சீங்குழ லூதிக்கொள்வார்
கண்டகை என்ற ஆற்றினுட
கரையி னிடமாக நிற்கையிலே

---

122. தகையெடுத்தல் - தாகம் எடுத்தல்

123. ஆள்பாடி - ஆய்ப்பாடி

125. கடைகால் - கடைசால், குடுவை. பார்க்க: கடையால் (வரி 130)

126. சீங்குழல் - புல்லாங்குழல்

127. கடுவாய் - புலி

129. இளைப்பு - களைப்பு

130. காடி - கூழ் உணவு; கடைவாய் - வாயின் ஓரப்பகுதிகள்

131. சுண்டச் செடி - சுண்டைக்காய்ச் செடி

132. கண்டகை ஆறு - கண்டகை ஆறு என்றும் கண்டிகை ஆறு என்றும் கூறுவர். இது மகத தேசத்தில் உள்ள ஆறு என்பர்.

வேர்வை யுடம்போடு சடைவிரிய
　　வீரப்புலித் தோ லுடை யவிழ
தொங்கல் நடையோடு நெட்டோட்டமாய்
　　தூரவருவது தெரியக் கண்டார்
செங்கை குவித்தவர் தெண்டஞ்செய்து
　　சிவனுக் கெதிரேபோய் சந்தித்தாராம்
இந்த வனவாச[க்] கருங்காட்டில்
　　இளைத்து வரத்தக்க தேதோவென்றார்
வந்த யிடுக்கத்து[க்] கிணையில்லாமல்
　　மைத்துனா மெத்தசடைத்து[ப்] போனேன்
தூண்டு விரலாலே கொல்வதற்கு[ம்]
　　துஷ்டன் வரங்கேட்டான் கொடுத்துவிட்டேன்
ஈண்டு மவர்தனை[ச்] சோதிக்கவே
　　யிருந்த பேர்களை வெருட்டிவிட்டான்
உனது தங்கைச்சி எனைப்பாராமல்
　　ஓடிப் பிழைத்தாளே உயிரைக்கொண்டு
எனது எளிமையைக் கண்டுகொண்டு
　　யிடும்பா லெனை[த்]தானும் வெருட்டினானே
உரத்து வருகின்ற அரக்கன்முன்னே
　　ஓடப் போகுதோ எந்தனுக்கு
வரத்தைக் கொடுக்கப்போய் யிடையில்லாமல்
　　வாணால் மறுகுதே மைத்துனரே
முயலைத் துடர்ந்திடும் நாய்போலே
　　முடிக்கினா னந்த[ச்]செடி வரைக்கும்

---

134. தொங்கல் நடை - கண்ணுக்கு எட்டிய தூரத்தில் தளர்ந்து போய் நடந்தும், நெட்டோட்டம் - நெடிய, நீண்ட ஓட்டமாகவும்

135. தெண்டம் - தண்டம், விழுந்து வணங்குதல்

137. இடுக்கம் - இடுக்கண், துன்பம்; சடைத்தல் - தளர்தல்

138. தூண்டுவிரல் - சுண்டிக் காட்டும் விரல்; சுட்டிக் காட்டும் விரல்.

139. வெருட்டி - விரட்டி

140. தங்கைச்சி - தங்கச்சி, தங்கை

141. இடும்பு - கொடுமை

143. வாணால் - வாணாள், வாழ்நாள், ஆயுள்

144. முடிக்கினான் - முடுக்கினான், விரட்டினான்

பயலைக் கடந்து நான்வருவதற்கு[ப்]
பட்டபாடுகள் மெத்த உண்டு
புரத்தைச் சுடுகின்ற சிருப்பாணியும்
பொய்த்துப் போச்சுதோ மைத்துனரே
திருத்த மதன்தன்னை[ச்] சாம்பலாக்கும்
தீக்கண் ணெங்கே போச்சுதென்றார்
மருட்டி வெருட்டிய அச்சத்தாலே
மறந்து போனேனான் மைத்துனனே
திரட்டிக்கொடுத்து நானளித்தே னென்றால்
செய்த பாவத்தை[த்] தொலைக்கப்போமோ
உலகை யளக்கின்ற உன்னைப்போலே
உபாயந் தெரியாதே எந்தனக்கு
கலக மிடுகின்ற அரக்கனைப்போய்
கழுத்தை அறுத்துநீ வந்ததுண்டால்
மேலும் பார்வதி தன்னோடும்
வெள்ளி மலையிலே குடியிருப்பேன்
காலுமடித்து நீமாட்டோ மென்றால்
காடுசெடி பார்த்து ஒளிக்கப்போறேன்
என்று சிவன்சொல்ல நாராயணர்
யீசன் முகம்பார்த்தங் கேதுசொல்வார்

## சிவனிடம் திருமால் விடைபெறுதல்

சென்று நானவன் றனைவதைத்து[த்]
திரும்பி நானிங்கே வருமளவும்
கன்று பசுக்களும் போகாமல்
கார்த்து நிற்பது கடனாமென்றார்

---

146. புரத்தைச் சுடுகின்ற சிருப்பாணி - சிவன் திரிபுரங்களைச் சிரித்து எரித்ததை இது குறிப்பிடுகிறது.

147. தீக்கண் - மூன்றாவதான நெற்றிக்கண்; மன்மதனை எரித்த செய்தி இங்கே கூறப்படுகிறது.

150. உலகை அளக்கின்ற உன்னைப்போல் - திருமால் வாமன வடிவத்தில் வந்து மாவேலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டு ஓரடியால் உலகத்தை அளந்த கதை இது.

பருத்த வரைதொட்ட மாயவரே
பசுவை மறித்திங்கை நிற்கையிலே
வெருட்டிக் கொடுவந்த அரக்கனிங்கே
மீண்டு வருவானோ தெரியாதே
மீண்டு வரும்போது ஓடமாட்டேன்
வேளைக் கொருவருந் துணையில்லையே
ஆண்டிக் கோலமிட் டிடையனானால்
அரக்க னறிவானோ மைத்துனனே
ஒருக்கால் பட்டதை நினைத்துக்கொண்டே
ஒதுங்கி[ப்] பிழையாட்டால் சளனல்லவோ
இருகால் தவறியே விழும்போது
எடுத்து வருவாரைக் காணோமே
என்று சிவன்சொல்ல நாராயணர்
யானே இருக்கிறேன் அரக்கனுக்கு
தெய்வப் பசுவிலே பால்கறந்து
சிவனை ஆற்றிலே முழுக்காட்டி
கையில் கடை[க்]காலின் பழங்கஞ்சியை
கரைத்து விட்டாரே குடிக்கச்சொல்லி
தடியுங் கடைகாலும் பதனமென்று
தம்பிரான் கையில் தான்கொடுத்து
கொடிய மாயவன் வனத்தைவிட்டு
நிறைந்த மோகினி வடிவுகொண்டார்

## திருமால் எடுத்த மோகினியின் அழகு

### வேறு

பந்துபோ லிலகு கொங்கை மூடுகின்ற
பட்டுச் சேலை யழகும்

---

157. பருத்த வரை தொட்டமாயவர் - இந்திரன் காரணமாக ஏற்பட்ட பெருமழையிலிருந்து பசுக்களையும் கோவலர்களையும் காப்பாற்ற கண்ணன் அவதாரத்தின் போது கோவர்த்தன கிரியைத் தூக்கிப் பிடித்த செய்தி இங்குக் கூறப்படுகிறது.

164. தெய்வப் பசு - காமதேனு; முழுக்காட்டி - குளிப்பாட்டி

166. பதனம் - கவனம்

பல்லுத்தான் வெளியில் மெல்லக்காணுஞ்
சிருப்பாணி வாயி னழகும்
செந்தூரக் கதம்ப சந்தனக் குழம்பு
தீட்டும் பொட்டி னழகும்
தேனிலே பசுவின் பாலிலே நனைந்த
சீனி போலும் மொழியோ
170 கொத்துக் கொத்தாக முத்து தூக்குகின்ற
கொப்புக் காதி னழகோ
கோதிப் பூமுடித்துப் பாதியாய் வகுந்த
கொண்டை கோலத் தழகோ
பத்திரமாத்துப் பொன்னின் சித்திர மாகச்செய்த
பட்டப் பொட்டுத் தாலியோ
பத்திப் பாச்சலுள்ள கத்திவீச்சிப் போலே
பக்கம் பாய்ந்த கண்களோ
வெள்ளைப் பால்மணக்கும் எள்ளுப் பூவைப்போலே
வேள்கை மூக்கி னழகோ
வெடுவென் றிடாமல் திடுதிடென் றிடாமல்
மெல்லச் சென்ற நடையோ
புள்ளிக்காரன் தன்னை[க்] கள்ளக்காமச் சிங்கி
பூட்டுங் கோட்டி குணங்களோ
புத்தியானதிலே பித்தமேத்து தற்குப்[ப்]
பூசும் மஞ்ச லழகும்
காட்டனுக்கு[ச்] சீட்டு விட்டாப் போல
கமகம என்ற மணமும்
கண்டை பாடகத்து[த்] தண்டைமேல் புரண்ட
கம்பிச் சேலை யுடையோ

---

170. கொப்பு - ஒரு வகைக் காதணி
171. பத்திரமாத்துப் பொன் - பத்தரை மாற்றுப் பொன்;
பொட்டுதாலி - தாலி வகைகளுள் ஒன்று; வட்ட மாக இருக்கும் என்பர்; பத்திப் பாச்சல் - பற்றிப் பாயும் இயல்புடைய
172. வேள்கை - வேட்கை, ஆசைகொள்ளும்
173. புள்ளிக்காரன் - பணக்காரன்
174. காட்டனுக்கும் - காற்று தனக்கும்; கண்டை - கரண்டைக்கால்; பாடகம் - ஓர் அணி, தண்டை - கரண்டைக் கால்

கூட்டும் ரத்னவயிர[ப்] பூட்டுவந்து தொடும்
கொய்த கந்தி னழகோ
கூத்தனார் புணர்ந்து சாத்தனார் பிறக்க
கொண்ட ரோமக் குறியோ
மண்கள்மேல் பிறந்த பெண்கள் பார்த்துக்கொள்ள
வந்த சந்திர முகமோ
வண்ட ராச்சதன் தன்மண்டை தானுருள
வந்த ராகத் தொனியோ
பண்டதான தடிக்கம்பு கொண்ட கையில்
பைம்பொன் சங்கு வளையோ
பாண்ட மோரைக் களவாண்டருந்தும் வாயில்
பாக்குத் தின்ற சிவப்போ
உலகம் யீரேழையும் விலைகொள்ளும் படிக்கு
ஒருகை வீச்சு அழகோ
ஒட்டு வித்தைக்குள்ளே பட்டபேர்கள் தப்பி
ஓட வொட்டா நகையோ
மாது லெச்சிமியாள் விலகிடாம விங்கே
வந்து வேலை செய்தாக்கால்
மற்ற பெண்களெல்லாம் ஒத்தி போடத்
தக்க வைக்கல் கூளமல்லவோ
ஈசனைத் துரத்தும் நீச ராச்சதனை
யெட்டிப் பார்த்த கொங்கையோ
எத்தி யோடுவாரை[க்] குத்திப்] போடுகின்ற
யீட்டி போலும் விழியோ
காசைக் கொள்ளையிட்ட வேசைப் பெண்களைப்போல்
கள்ள னுள்ளே கிடக்க
காட்டரக்கன் தன்னை வேட்டை யாட[க்]
கடந்து போயி னாளே

---

175. கந்தின் அழகு - கழுத்தின் கீழுள்ள பகுதியின் அழகு
177. பாண்டம் - (மண்) பாத்திரம்.
179. ஒத்திபோடத்தக்க - விலக்கத்தக்க; வைக்கல் கூளம் - நெல்லின் தட்டையான வைக்கோல் கூளம் ’
181. எத்தியோடுவார் - எத்தி ஓடுவார்; ஏமாற்றி ஓடுவார் எனவும் கூறலாம்.

## மோகினியை வல்லரக்கன் காணுதல்

### வேறு

தொந்திமி தொந்தோமெனவே மந்தநடை யாடிவர
　　தொகு சதங்கை யோலமிடவே
இந்த வனவாசமதில் வந்த வடிவே[யெ]தனவே
　　ராச்சதன்வந்தெதிர்த்தானே
பண்டை யடியார்கள் வந்து கண்டுகொள்ள மாட்டாத
　　பாக்கியத்தின்பால்குடந்தான்
185 துண்டரு மற்றுமுன் தொண்டரும் கிட்ட விளையாடுகின்ற
　　சோதி வடிவை
பெண்பிள்ளை யீதென்று கொண்டான் கண்பிழைய தென்றுஇறை
　　பேணிக்கொள்ள மாட்டாதவன்
உண்பதொரு சோறுகறி கொண்டு வந்தபேர்களைப் போல்
　　ஓடிஓடி[க்] கிட்டே வருவான்
பண்டுசெய்த பழவினை தொண்டர்தனைச் சுற்றிக்கொண்டால்
　　பண்டிதத்துக் காள் கிடைக்குமோ
பண்டுமேதான்யீசனோடுசண்டையிட்ட பன்றி வலைவீச்சிக்குள்ளே
　　பட்டுக் கொண்டுதே

## வல்லரக்கன் மோகியுடன் பேசுதல்

190 பிடித்த வெத்திலைச்சுருள் கடித்திடும் மிச்சமதை[ப்]
　　பிச்சையிட்டால் நல்லதல்லவோ
துடுக்காய் வழிகூட்டினால் நடக்கப் படாதெனக்கு[த்]
　　துரைப்பெண்ணேநில்லுநில்லென்பான்
சக்கரைப் பழந்தருவேன் ஒக்கரையில் இருக்காமல்
　　சடைக்க நடக்கலாகுமோ
அக்கரையும் இக்கரையும் ஒக்கவே பெருகிவர
　　ஆத்துக்கொரு தோணியல்லவோ

---

185. துண்டர் - தொந்தரவு செய்வோர்

191. துடுக்காய் - விரைவாய்; வழிகூட்டுதல் - வழிப் பயணம் செய்தல்; நடக்கப் படாது - நடக்க இயலாது

192. ஒக்கரை - ஒக்கலை, இடுப்பு

பக்கம்பழுத்த கொவ்வை[ப்] பழம்போல் சிவந்தவாயால்
பழக்கமிடப் படாதோ
வத்திராப்பு தீர்த்தத்திற்கு[ப்] போகி[ற] வழிக்கரையில் மாமாங்கம்
வாய்த்துக்கொண்டுதோ
உனக்கு மெனக்குமொத்த இனிப்பாய் இருக்குமிந்த
ஊதிபத்தை போட்டு[ப்] போறாய்
நனைத்து[ச்] சுமப்பதற்கு வனத்துக் கிளிப்பிள்ளைகள்
நடுச்சொல்ல மாட்டீர் களோ
சொத்துக்கார னாகும்முன்னே செத்து[க்] கெட்டு[ப்]போகாமல்
துணைக்கொரு தெய்வமில்லையோ
வித்தைதந்த யீசுரனை[ச்] சுத்திசுத்தி வெருட்டிய
வீரமெல்லாந்தூரப்போச்சே
எப்படியா னாலுமுந்தன் சொற்படி நடந்துகொள்ள
எனக்குத் திராணி யில்லையோ
வெப்பெடுத்த காச்சலிலே செத்திடாம லெனக்கொரு
வீடுகட்டி வைக்கொ ணாதோ
குயிலே மடக்கொடியே மயிலே புலம்புமெந்தன்
கூடவந்து கொஞ்சணாதோ
உயிர்போலும் உந்தனுக்கு[ப்] பொருள்வேணு மாகிலெனை
ஒத்திவைத்துக்கோ வித்துக்கோ
கற்பூர வெற்றிலைக்கு நித்தம்நித்தம் ஆயிரம்பொன்
காணுமோ காணாதோ சொல்லு
தக்கமில்லா ராசாக்கள் குடியானபேர்கள் வந்த[ால்]
சந்திப்புக்கொடுக்கணாதோ

---

194. பழக்கமிட - பயணக் களைப்பு நீங்கப் பேசுதல்

195. வத்திராப்பு - வத்திராயிருப்பு, ஓர் ஊர்.

196. ஊதிபம் - ஊதியம், இலாபம்

197. நடுச்சொல்லுதல் - இடையிட்டு ஆதரித்துச் சொல்லுதல்

200. திராணி - துணிவு, வலிமை

201. வெப்பு - வெப்பம்; வெம்மை

203. ஒத்திவைத்தல் - ஒற்றி வைத்தல், ஈடுவைத்தல்

205. தக்கமில்லா -தர்க்கமில்லா

பண்டொருக்கால் தோத்துப்போன மன்மதனை யென்னோடே
படையெடுக்கப் பண்ணினாயே
கன்னியரே உன்னுடைய கன்னமஞ்சள் வாடைவந்து
களங்கனென என்னப்போகுதே
பேருமில்லை கிட்டமுட்ட ஆறுமில்லை வேறொருவர்
பிறகே துடரவில்லையே
வாருமிருமென்பதற்கு வார்த்தையில்லை ஆனதுண்டால்
வாணா லிருப்பதில்லையே
புண்ணியம் போலெனது கண்ணெதிரே வந்ததெய்வம்
பொசிப்புத் தீரவில்லையே
மண்ணிலுள்ள உடைமையில் பெண்ணுடமை நல்லதென்று
வருத்தத்தை இன்றை[க்]கறிந்தேன்
சீதை என்ற லெச்சிமியை[க்] காதல்வைத்தால் னானுமொரு
ஸ்ரீராமன் போலிருப்பேனே
வீதியிலே சிவனோட வெருட்டுதற்கு என்னைப்போலே
வேறேயொரு சேவகனுண்டோ
முட்டாங்கை நீக்கிஎந்தன் பட்டாங்கை கேள்க்கும்போது
மோட்ச வீடுதூரமில்லையே
வட்டமிட்டு வருகிறேன் தொட்டுக்கொள்ள மாட்டாமல்
மரியாதைக்குப் பயந்தல்லோ
கொத்துக்காரப் பிடித்து[ச்] சொத்துக்கார னாக்குவாரை[க்]
கும்பிடவும் கூச்சமில்லையோ
மைத்துனனை[க்] கிட்டவைத்து மற்றுமொருவ ரெனவே
வழிமறித்து யிருப்பேனோ

---

206. மன்மதன் சிவனிடம் தன் கணைகளை ஏவினாற் போல் வல்லரக்கனிடமும் ஏவுதலாகக் கூறப்படுகிறது.

208. கிட்டமுட்ட - அருகில்

210. பொசிப்பு - புசிப்பு, பசி, காமப்பசி.

212. சீதை என்ற லெச்சிமி - சீதை திருமகளின் அவதாரமாக வந்தாள் என்பது கதை.

214. முட்டாங்கு - மூடாங்கு, மூடியிருத்தல்; பட்டாங்கு - உண்மை

216. கொத்துக் காரன் - கூலிக்கு வயல் வேலை செய்பவன்;

## மோகினி வல்லரக்கனிடம் பேசுதல்

### வேறு

வழிமறித்து நிற்கையிலே வாய்திறந்து ஏதுசொல்வாள்
பழிஎடுக்க வேணுமென்றோ பத்துகிறாய் நீபாவி
சக்திகெட்[ட] என்கணவன் சண்டைபண்ணி தானடித்தான்
புத்திகெட்ட தாய்வீட்டில் போகவென்று வந்துவிட்டேன்
கையு[டை]மை பறிக்கவந்த கள்வனென்று அறியேனே
மெய்யு[ட]மை நான்கழற்றி விட்டெறிவேன் கொடுபோடா
அடிபிடிகள் பண்ணுதற்கோ ஆசைவைத்து வழிமறித்தாய்
மடியைவந்து தொட்டதுண்டால் மனம்பொறுக்க மாட்டேநான்
நாக்கைத்தான் பிடுங்குதற்கு நமக்குஒரு சோலியில்லை
போக்கிடுவேன் சீவனென்று புலிபோலே முழங்கினளே
பிராணனதை[ப்] போக்குதற்கோ பின்துடர்ந்து கெஞ்சுகிறேன்
தூஷணங்கள் பேசியுன்னை[த்] துரத்தினவன் வந்ததுண்டால்
வெட்டிவிப்பே னல்லவென்றால் விலங்கிலிட்டு வேலைகொள்வேன்
ஒட்டுறவு[க்] காரனோடு உனக்கினிமேல் உயிதமுண்டோ
கொண்டவனைத் தள்ளிவிட்டு[க்] கொடும்போக்காப் போகையிலே
கண்டவனைத் தள்ளிவிட்டால் காரிழைமார்க் கழகல்லவே
வழக்கெடுத்து[ப்] பேசினாக்கால் வந்தமிச்ச மொன்றுமில்லை
நிழல்குளி[ர்]ந்த மரத்தருகே நின்றுதகை யாறுபெண்ணே
உடையவனைத் தள்ளிவிட்டால் உலகில்மழை பெய்யாதே
இடையில் வந்துகூடினவர் இடுக்கத்துக்கு உதவுவாரோ

---

219. பத்துகிறாய் - பற்றுகிறாய், பிடிக்கிறாய்
228. பிராணன் - உயிர்
229. தூசணம் - அவதூறு
231. ஒட்டுறவுக் காரன் - சொந்தக்காரன்
235. தகையாறுதல் - களைப்புத் தீர்தல்
236. உடையவன் - கணவன்
237. இடுக்கம் - துன்பம்

தடுமுடுக்காய் நடந்ததுண்டால் தலைதெரித்துப்போகாதே
கார்வண்ணன் இடைச்சிகளைக் களவாண்ட தன்மையைப் போல்
ஊர்புகுந்து பிடியாமல் ஒளித்திருந்து பிடிக்கவந்தாய்
மனுநீதி நடத்தாமல் வனத்தில்வந்து வழிமறித்தாய்
அனியாயஞ் செய்தவரை ஆகாசம் விட்டிடுமோ
துரும்பதுதான் இவளெனவே தூண்போலே வந்துநின்றாய்
பரும்பூதம்போலே வந்து படப்போறாய்எனஉரைத்தாள்
ஆளடுமைசெய்த குற்றம் அரண்மனையார் பொறுப்பார்களோ
மீளவுந்தான் பிழைகள்செய்தால் விடுவாரோ அடியாமல்
செய்தகுற்றம் உண்டானால் திருவடியால் மிதித்திடுவார்
வைதாலும் அடித்தாலும் வடுவில்லாப் பேரல்லவோ
சிவனை முந்தாநாளிலிந்த செடிவரைக்கும் வெருட்டிவந்தேன்
அவராலே செல்லலையே அடியேன்செய்த கீர்த்தியது
தவசுசெய்து சடைத்ததற்கு[த்] தந்துதல்லோ தெய்வம்வுன்னை
அவகுணத்தை[ப்] பேசாதே அருமையுள்ள வாயாலே
சிவனைத்தான் விட்டாலும் திரும்பஉன்னை விடுவேனோ
நாவுலகில் பெண்ணமுதே நாள்கடந்து போகாமல்
பூவணைமேல் படுத்திருக்க[ப்] போவோமென் றுரைத்தனனே
உரைத்திடவே மோகினியாள் உன்கூட வரும்போது
திருத்தமுடன் கலியாணஞ் செய்தவருக்கென்ன சொல்வேன்
தாலிகட்டும் பெண்கள்கண்டால் சண்டைசெய்யா திருப்பாரோ
வாலிதம்பி பெண்ணை[த்]தொட்டு மாண்டகதை அறியாயோ

---

238. தடுமுடுக்காய் - தவறாய்

239. கார்வண்ணன் இடைச்சிகளைக் களவாண்டதன்மை - கோகுலத்தில் கண்ணன் பல கோபியருடன் நட்புக் கொண்டிருந்த கதை.

245. ஆளடுமை - ஆள் + அடுமை - அடிமை

251. சடைத்தல் - களைத்திருத்தல்

252. அவகுணம் - கெட்ட செயல்

259. வாலி தம்பி பெண்ணைத் தொட்டு மாண்ட கதை - கிட்கிந்தாவின் அரசனான வாலி தன் தம்பி சுக்கிரீவனை அடித்துத் துரத்திவிட்டு அவனுடைய மனைவியான தாரையைத் தன்னுடன் சேர்த்து வைத்துக் கொண்டதால், இராமபிரான் அவளை மீட்கும் பொருட்டும், சுக்கிரீவனுக்கும் நாடு கிடைக்கும் பொருட்டும் வாலியைக் கொன்றார்.

பக்ஷம்வைத்து உன்வீட்டில் படுத்திருக்க வரும்போது
லெக்ஷிமியாள் சிறையிருந்த இலங்கையைப்போல் முடியாதோ
என்றுரைத்த பெண்கொடிக்கு ராச்சதனும் ஏதுசொல்வான்
மன்றிலுள்ள ராவணனும் வாலியும் எந்தனுக்கிளையோர்
தேசமதில் முன்னிருந்தோர் சிவனைவெருட்டினவ ருண்டோ
மோசமுள்ள வார்த்தைகளை மொழியாதே என்முன்னே நின்று
தாலிகட்டும் பெண்களுன்னை[த்] தாங்கிடவே செய்துவைப்பேன்
மேலெனக்குப் பெண்டிருந்தால் வீட்டைவிட்டு வெருட்டிடுவேன்
வெருட்டாமல விருந்ததுண்டால் வேறெயொரு வீடில்லையோ
உருட்டிஎன்னை அடித்தாலும் உன்னைவிட்டுப் போவேனோ
திருட்டியிலே பிடித்ததுண்டால் தீராது நோக்காடு
மருட்டுகின்ற வார்த்தையினால் வாணாலைக் குறையாதே

## மோகினி வல்லரக்கனிடம் வரம் வாங்குதல்

இப்படியே வரக்கன்சொல்ல எடுத்துரைத்தாள் மடக்கொடியாள்
கைப்பிடித்த பெண்களுன்னை[க்] கள்வனென்று துடராமல்
அருமைகெட்டு நீயொருநாள் அவளிடத்தில் செல்ல[ா]மல்
சரசமல்ல சொல்லுகிறேன் சத்தியத்தை[ச்] செய்துதந்தால்
கற்பழித்து[ப்] போனாலும் கவலையில்லை பெண்டிருப்பேன்
தர்க்கமில்லாக் காச்சல்வந்தால் சர்க்கரையுங் கசந்திடுமே
கலகம்வருங் காலமதில் கழுவேறக் கூடாது

---

260. பக்ஷம் - பக்கம்

261. லெக்ஷிமி (லக்ஷ்மி)யாள் சிறையிருந்த இலங்கை அழிதல் - இராமன் மனைவியான சீதை லெக்ஷ்மி அவதாரம் என்பர். சீதையை இராவணன் தூக்கிச் சென்று இலங்கையில் சிறை வைத்திருந்தான். இராமன் சீதையை மீட்டு, இலங்கையை அழித்து இராவணாதியர்களையும்கொன்றார்.

266. பெண்டு - மனைவி

270. திருட்டி - திருஷ்டி - திஷ்டி - திட்டி - கண் பட்டுவிடுதல்; கண்டுபட்டுவிட்டதால் ஏற்படும் நோய் எளிதில் சுகமாகாது என்பது வழக்கு

278. தர்க்கமில்லா - தர்க்கம் + இல்லா; சந்தேகத்திற்கு இடமின்றி, 'தர்க்கமில்லாக் காய்ச்சல் வந்தால் சர்க்கரையும் கசந்திடுமே' எனும் வழக்கு, 'நோய் சந்தேகத்திற்கு இடமின்றிக் காய்ச்சல் தான்' என்றால் நோயாளியின் நாக்கு சர்க்கரையும் கசக்கும் அளவு சுவை அற்றுப்போகும். கலகத்தின் போது தாமாக யாராவது கழுவேறித் தற்கொலை செய்து கொண்டால் அது கலகக் காரர்களால் ஏற்பட்ட கொலை என்று பரவி, கலகமும் மிகும் என்பதால், 'கலகம் வரும் காலமதில் கழுவேறக் கூடாது' என்னும் 'வழக்கு' ஏற்பட்டது.

உலகிலுள்ள ஆண்பிள்ளைகள் ஒருக்காலே ஆசையுண்டு
ஆசையுள்ள பேரோடே அலக்கொடுக்கப் போகாது
தேசுடை சத்தியத்தை[ச்] சீக்கிரஞ் செய்யாதிருந்தால்
காடுதனில் மாடுகளை[க்] கார்த்துநிற்கிறா ரொருவர்
ஓடிவாவென்று சொல்லி உத்தவழி பார்த்துநின்றாள்
வெருங்கிழவ னவனெனவே விருப்பம்வைத்தே னுன்மேலே
உள்பொழுது போகுமுன்னே உண்மைசொல்லி[த்] தாருமென்றாள்
சத்தியம் பண்ணென்றிடவே தளதளென்று முகமலர்ந்து
பத்தியத்தை முறித்தவர்க்கு[ப்] பண்டிதமும் பலியாது
மண்மேலே ஆசைவைத்தால் மனிதரைப்போல் பிழைத்திடுவார்
பெண்மேலே ஆசைவைத்தால் பிழைக்கமதி அறிவாரோ
உண்மை சொல்லித்தாராம லுன்னையினித் தொடுவேனோ
பெண்மயிலே சத்தியந்தான் பெரிதாகுமென்று கண்டாய்
நெய்தனிலே கையிட்டோ நீண்டமழு வேந்திட்டோ
பொய்யாது பாம்படைத்த புதுக்குடத்தில் கையிட்டோ
சன்னதியில் சிவலிங்கம் தலையிலடித் திட்டோ
என்னசத்தியஞ் செய்துதர ஏந்திழையே சொல்லுமென்றான்
நாட்டிலுள்ள சத்தியங்கள் நமக்குநன்றாய்[ப்] பிடியாது
கேட்டவர்க ளெல்லாரும் கெட்டியென்று சொல்வதற்கு
தூண்டுவிரலைக் கழுத்தில் தொட்டிடுவா யாமாகில்
ஆண்டவனார் தன்னாணையது நமக்கு[ச்] சத்தியந்தான்
சொன்னபுத்தி தட்டாமல் துணிந்தானே சாவதற்கு
என்னுடைய பாவமெல்லாம் இன்றோடே போச்சுதென்றான்

---

279. ஒருக்காலே - மிகுதியாக; ஒரு காலே எனவும் வரும்

280. அலக்கொடுக்கப் போகாது - சேர்ந்து திரியக்கூடாது. (அலக்கொடுக்க - அலைக் கொடுக்க - அலைக்கழிக்க)

281. தேசுடை - அழகு உடைய

287. பத்தியத்தை முறித்தவர்க்குப் பண்டிதமும் பலியாது - நாட்டு மருந்துகள் பயன்தர வேண்டுமாயின் சில உணவுப் பொருள்களை உண்பதைத் தவிர்க்கவேண்டும். அவ்வாறு இல்லையெனில் எந்த மருந்தும் பயன்தராது.

292. நெய்தனில் கைவிடுதல், மழு ஏந்துதல், பாம்படைத்த குடத்தில் கைவிடுதல் முதலியன உறுதியை நிரூபிக்க இவ்வாறு செய்தல் வழக்கம்

297. கெட்டி - கெட்டிக்காரன், சொல்வதை நன்றாகச் செய்பவன்

பரவையிலே பாராதே பண்ணுகிறேன் பாருமென்றான்
பிரமவிதிதனை யொருவர் போதிக்கப் போகாது
கண்ணெதிரே விட்டுக் கொண்டு கழுத்தறுக்கச் சொன்னதினால்
மண்ணுலகில் பெண்களைப்போல் வந்திடுமோ தந்திரந்தான்
ஒருவிரலை வல்லரக்கன் யுயர்கழுத்தில் தொட்டிடவே
சிரசுதரி யாதபடி தெறித்து[க்] கீழே விழுந்திடுமாம்

## அமரரும் பிறரும் மகிழ்தல்

### வேறு

அரக்கன் தலையத்து மலைபோலவே விழுந்தான்
அமரர்க ளந்தரத்தில் குரவைகள் முழக்கினார்
பெருத்த உடம்பிலே ரத்தங் குதிகொள்ளவே
பேய்கள் வந்துகூடி வாயில் புழுதியிட
பண்டே யிவனுக்குப் பயந்ததோர் தேவரெல்லாம்
பாரு வேருகளை பறிபட்டு[ப்] போச்சென்றார்
கண்ட செடிக்குள்ளே காணாமல் பதுங்கின
கால தூதுவர் மேல்மீசை முறுக்கினார்
யிதறிஓடி தட்[டி]விழுந்த கோடி ரிசிகள்
எலும்பு நொந்தயிடம் இன்றைக்கு[த்] தீர்ந்ததென்றார்
குறட்டுக் கம்புக்காய் கொண்டுபோன ஏமராசன்
குடிஎழுதித் தாறேன் கோவிந்தா உமக்கென்றான்
ஈட்டி[ப்] பிடங்காலே குத்துப்பட்ட யிந்திரனார்
எங்கள் பலத்துக்கு இனிக்குறையில்லை என்றார்
ஓட்டுத் தோழியர்கள் ஓடிப்போன வருந்தான்
ஓடிப்போன பேரைக் கூட்டென்று தேடிப்போனார்
வெள்ளிமலைப் புடைக்குள்ளே பதுங்கி[க்] கிடந்த
வெய்ய சூரியன் பையவெளியில் வந்தார்

---

311. வேருகளை - வேரும் களையும்

312. கண்ட செடி - ஒருவகைச் செடி; கண்டைச் செடி என வரி 131 இல் வந்தது காண்க

313. குறட்டுக் கம்பு - இலை, தழைகளை அறுக்கத்தக்க சுரண்டிக் கம்பு; சிறிய அருவாள் நுனியில் இருக்கும்

314. பிடங்கு - கைப்பிடி

316. புடை - குகை

தெள்ளும்புனல் சிவன்வோடிப் போனதிசை தோறும்
தேடித் திரிந்தாளே கயிலாசப் பார்வதியாள்
இந்தப் படியாக அந்தரத் தேவரெல்லாம்
எங்கள் பெருமாள்மேல் எறிந்தாரே புட்பமாரி
உந்தன் பொருட்டாலே யுலகம்பிழைத்த தென்பார்
உயிர்கள் பிழைக்கின்ற உபகாரமிது வென்றார்
சிவனார் பணிவிடைசெய்து நின்ற பெருமாளே
சிவனை[ப்] பேணுதற்கோ திருத்தொண்டர்க் குரைசெய்தார்
புவியில் சிவலிங்க பூசைக்குப்[ப்] பகைகொண்ட
புத்தி யற்றவனை[ச்] சத்துருவாய்[ப்] பொடிசெய்தாய்
இடைச்சி முலைப்பாலும் பசும்பாலும் குடித்தவா
இமையோர் பிழைக்கவே அமுதப் பாலுண்டவா
எடுத்து ஸ்தோத்திரம் இமையோர்கள் துதிக்கவே
எம்பெருமாள் பின்னு மொருவடி வெடுத்தார்

## திருமால் சிவனிருக்குமிடம் வரல்

### வேறு

பெண்கோலம் தன்னை விட்டுமுழுப்
பொய்க்கோலங் கெட்டியோனாள் கோபமாய்
மண்பால் வயதுடையசில
மானிடக் கோலத்துக் கோன்வடிவாய்
திரும்பி[க்] கருங்காட்டில் பாடுஞ்
சீங்குழ லோசை திசைமணக்க
கரும்பொட்டல் பாதையிலே நின்று
காத்திடு ம் யீச னிடமாக
நன்றான நெற்றியிலே பட்ட
நாதத்தை[ப்] போல்திரு நாமங்களும்
ஒன்றாய்[க்] கரித்துணியும் நெட்ட
ஒட்ட நடையுந் தலையாட்டும்

---

321. சத்துரு - பகைவன்

322. இடைச்சி - யசோதை

325. கோன் - இடையன்

அரியண்ட கொண்டைகளும் அந்த
ஆள்பாடி மாப்பிள்ளை மூப்பழகும்
சுருளுந்தலை ரோமம் திமிதொந்தோ மென்றே
காலைக் கிந்தி கிந்தி
வந்தார் பசுநிரையில் திருமைத்துனர்
பாதம் வணங்கிக் கொண்டார்
தந்த கடைகாலும் கைத்தடியையும்
என்கையில் தாரு மென்றார்
அடமானம் வைத்ததெல்லாம் இனி
அந்தா எடுத்துக்கோ தந்தோ மென்றார்

## வல்லரக்கனை வதைத்த விதம் கூறல்

யிடமாய் வரம்வாங்கி முன்னே
என்னை வெருட்டிய ராச்சதனை[க்]
கொன்ற உபாயமதை[க்] கூறென்றார்
நாரணர் கூற லுற்றார்
மன்றில் சிவபரனே யுந்தன் வல்லமை
யல்லாது வேறு முண்டோ
பொய்க்கோலந்தான் காட்டியவன் புத்தியில்
பித்தத்தை[ப்] பத்த வைத்து
மெய்[க்]கோல கண்மருட்டால் பகைமேல்
வரம்வாங் கும்விர லாலே
கழுத்தை யறுக்கச் செய்துஉன்
கடாச்சத்தி னாலிங்கு வந்தேனென்றார்
பழுத்த பழம்போலே வார்த்தை
பண்பது கேட்டு[ப்] பரமசிவன்
தேவாதி தேவரெல் லாமவர்
சேரப் பகையாக்கும் வீரப்புலி

---

330. அரியண்ட - அசிங்கமான, அழகில்லாத

331. கிந்தி கிந்தி - நொண்டி நொண்டி

340. கடாட்சம் - அருள்

343. காவாலி - ரௌடி. வீண் கலகம் செய்வோன்

காவாலி[ப்] பெண்பிள்ளை தன்கள்ளக்
கண்ணியில் பட்டிடுங் காட்சிதன்னை
நான்காண காட்டு மென்றேயுமை
நாயகர் கேட்டிட ந்ாராயணர்

## மீண்டும் மோகினி வடிவு கொள்ளுதல்

தான்பண்ணுங் கோல மதைச்சிவ
தம்பிரானுக் கெதிர்காட்டி னாராம்

### வேறு

தண்டை பாடகத்தோடே சதங்கை பாடியாடவே
தத்திதத்தியாய் நிறைந்த முத்து வடமாடவே
கொண்டையின் வெண்டமுகும் குக்ஷிகள் நின்றாடவே
கக்ஷரியசேலை முந்தி கச்சிப்பொதிந் தாடவே
கெண்டைக் கால்ரெண்டுங் கீழுமேலுமாய்[க்] குதிக்கவே
கிட்டிக் கம்புபோலே காதிலிட்ட குழையாடவே
வண்டுகிண்டும் கொண்டைமேலே மல்லிகை பூமணக்கவே
வட்டப்பொட்டு மைத்துனரே கிட்டவாரு மெள்ளவே

## சிவனும் மோகினியும் இணைதல்

பட்டுக் குஞ்சந் தூக்குகின்ற கட்டுக்கயிறாடவே
பாலுக்குள்ளே போட்ட வாழைப்பழம் போலேவார்த்தையும்
சுட்டிக்குக் கீழாக நெற்றிப்பட்டம் நின்றிலங்கவே
தோகை நடையொத்தாய் துவண்ட நடையாடவே
கைக்கட்டு பவளமும் காப்புகள் யிலங்கவே
கன்னிமேல் காமத்தெய்வம் சன்னத முண்டாகவே
முக்கண்ணுள்ள மாப்பிள்ளைக்குத் தக்க வடிவாகவே
முத்துக் கணையாழி யிட்டமோதிரகை வீசவே
ஞாலத்தை யளந்தவன் தன்கோலத்தை[க்] கொண்டாடியே
நாடுஞ் சிவனாருமொரு ஆடவரு மாகினார்

---

347. குக்ஷிகள் - குக்ஷி, வயிறு; கக்ஷரிய - கச்சு + அரிய; மார்புக் கச்சை

348. கெண்டைக் கால் - கீழ் கால்கள்; கிட்டிக் கம்பு - விளையாட்டில் பயன்படுத்தும் கோல்கள்

ஏலமிட்ட கஸ்த்தூரி வாலப்பருவ முள்ளவராய்
இந்திர நீலக்கொண்டையிலே சந்திரநீல உருமாலும்
செம்மையா யுடுத்திருக்குஞ் சோமனுட மீதிலே
சிங்கக் கொடியெழுதிய தங்கக்கொடி யழகோ
காமனுக்கு அம்பல சுவாமியான படியால்
கண்ட பெண்கள்தானும்மைக் கொண்டு போக[க்]கூடுமோ
உதிக்கின்ற பாம்பு ஒருதுதிக்கை மாலையாகவே
உடம்பில் கிடந்து புரண்டு விளையாடவே
ததிகததிமி யென்று மிதிக்கின்ற தாளத்திலே
தரிகிடதக வென்று வீர[த்]தண்டை ஓசையிட
எட்டு[த்]திக்குஞ் சுத்தி[ச்]சுத்தி வட்டத்திலே யாடுவார்
இந்தவேளை னானுமொரு ராக்ஷதன் காணென்பாராம்
தொட்டு முத்தமிட்டுக் கொள்ள கிட்டக்கையை நீட்டுவார்
சூழச்சூழ வந்துமெள்ள தோளில் கைபோட்டனர்
கட்டிக்கொண்ட சன்னாசி பட்டமுள்ள தம்பிரான்
கார்த்திருக்கும் பார்வதியாள் பார்த்துக்கொண்டு நிற்கவே
முட்டுப்பிடியாக[க்] கணவன்தொட்டுக் கொண்ட காலத்தே
மோடிசெய்யப் பெண்களாலே ஓடிப்போகப் போகுமோ?
தேடிவந்த எண்ணிறந்த கோடித்தேவர் பூப்பெய்தார்
தெய்வப் பெண்ணை[ப்]போய் சென்றேஅய்யன் மேனகை காட்டினார்

## அய்யனார் பிறத்தல்

கூடிவிளையாடி விந்து நாடியங் குதிக்கவே
குற்றமற்ற பார்வதியாள் சித்தம்அறிந்தே சென்றாள்
சிவனுடைய இந்திரியந் தீண்டுகின்ற பூமிதான்
செத்துபோமே என்றுமுந்தி[ச்] சேலையோடு கையேந்தினாள்

---

355. உருமால் - உருமாலை, தலை அணி

356. சோமன் - ஒருவகைப்பட்டு

357. காமனுக்கு அம்பலசுவாமி எனச் சிவபெருமானைக் குறிப்பர். காமன் விடுத்த கணைகளுக்கு மசியாது அவனை எரித்தவர் ஆதலால் இவ்வாறு அழைக்கப்படுகிறார்.

363. முட்டுப்பிடி - முட்டிப்பிடி, கட்டிப்பிடித்தல்; மோடி - பிணக்கு, ஊடல்

அவருடைய கிருபையால் ஆண்பிள்ளை பிறக்கவே
அரியரபுத்திர னென்று திருநாம மிட்டாள்

## அய்யனார் கயிலையில் வளர்தல்

### வேறு

இருவருக்கும் பிறந்தபிள்ளை எனக்குமொரு பிள்ளைஎன்றே
திருவருள் கண்டகையாற்றில் தீர்த்தக் கரையிடமாக
பெருமாள் தன்னருளாலே பிறந்த வியாழக்கிரகம்
நல்லபிள்ளை பிறந்ததென்றே நாச்சியார் தானெடுத்து
வல்லமையாய்[க்]கயிலாச மண்டபத்தில் கொண்டு சென்றார்.

### வேறு

கொண்டுசென்று பிள்ளைதன்னை[க்] கோதாட்டி தாராட்டி
அண்டரெல்லாம் புகழ்ந்திடவே அரியர புத்திரருக்கு
வேதங்க ளொருநான்கும் விளங்குஞ் சமயமாறும்
பாதங்க ளணுகாத பதினாறு சாஸ்த்திரமும்
முறையுடைய புராணமது மூவாறுங் காரணனே
இறையவனாரே றுகின்ற இருபத்திஎட் டாகமமும்
அஞ்செழுத்தில் விளையாடும் அறுபத்தி நாலுகலை
மிஞ்சுகின்ற பாசாண்ட விதற்பம் தொண்ணூறாம்
ஏழுகோடி மந்திரமும் எண்ணிறைந்த புவனங்களும்
வழுகாமல் தானறிந்தார் வாகனவித்தை யெல்லாம்
சிவனுடைய விளையாட்டும் அய்யனுட விளையாட்டும்
அவருடைய இருதயத்தி லறியாத தொன்றுமில்லை

---

369. கண்டகை ஆறு - கண்டிகை ஆறு (பார்க்க வரி 132)

370. வியாழக் கிரகம் - அமரர்களைக் காப்போனாகிய அரியரபுத்திரன்

373. கோதாட்டுதல் - தவறுகளைத் திருத்தி

375-379. நான்கு வேதங்கள், அறுவகைச் சமயங்கள், பதினாறு சாத்திரங்கள், பதினெட்டுப் புராணங்கள், இருபத்தெட்டு ஆகமங்கள், அறுபத்துநான்கு கலைகள் என்பன இங்குக் கூறப்பெற்றுள்ளன.

380. தொன்னூறு வகையான பாசண்டம், கேள்வி ஞானம்; விதற்பம் - வேறுபாடுகள்

382. வாகனவித்தை - குதிரையேற்றம், யானை ஏற்றம் போன்ற பயிற்சிகள்; அசுவசாத்திரம், கஜ சாத்திரம் போன்றன.

ஒட்டியாணம் தான்சாத்தி யோகத்தே யிருந்துகொண்டு
விட்டத்திலே தொட்டுநின்ற விளையாட்டுப் பார்த்திருந்தார்
சைவருக்கோ பாமளசாய் சன்னாசி முத்திரையாய்
தெய்வ சிகாமணியாக[த்] திறத்தோடே யிருக்கையிலே

### பார்வதி சிவனிடம் அய்யனார் பற்றி எடுத்துரைத்தல்

முப்பத்தி ரெண்டறம் வளர்த்த மூதாதை பார்பதியாள்
செப்பமுள்ள சாத்தாவின் செய்கைஎல்லாந் தானறிந்தாள்
அறிந்து சிவனிடமாக அறிக்கையிட்டாள் பார்பதியாள்
மகனுடைய திறத்தையெல்லாம் மகாதேவர் தானறிந்து
அகம்மகிழ்ந்து நந்தியை விட்டழைத்தாரே சமூகமதில்

### சிவன் வர மீய்தல்

இருவருக்கும் புத்திரனாய் எல்லோர்க்கும் தாயகமாய்
ஒருவருமுந் தனைப்போலே உள்ளபடி இருந்ததில்லை
பூமியிலே நீ இருந்தால் பொல்லாப்பு வருவதில்லை
சேமமுள்ள மலைதோறும் சென்று விளையாடல் செய்வாய்
பொற்கலையும் பூரணையும் பூவைமா ரிருவரோடு
தெட்சண பூமிதன்னில் தேவதைக்கு ராசாவாய்
அகஸ்த்தியனார் மலைஅருகே ஆரியங்காவிற் சிறப்பு
செகத்தினில் நிரந்தரமாய்[ச்] சென்றுநீ இருக்கையிலே
மதுரையிலே பாண்டியனாய் வருவே னக்காலமதில்
சதுராக என்னிடமாய்[த்] தண்டு சேவிப்பாய்நீ
வடகயிலாசங் கார்த்த மாகாள பூதமதை

---

385. ஒட்டியாணம் - இடுப்பு அணி; விட்டத்திலே தொடுகின்ற விளையாட்டு - யோகப் பயிற்சியில் ஒன்றான 'எழும்புதல் பயிற்சி

387. சன்னாசி முத்திரை - சின் முத்திரை; யோக நிலையில், பட்டபந்தம் பூண்டு, சின் முத்திரையில் அமையும் கைகள் கால் முட்டுகளில் இருக்கவும், அவற்றுள் ஒன்று நீட்டியும் ஒன்று அருள்பாலித்தும் இருக்கும்.

398. பொற்கலை, பூரணை - அய்யனாரின் துணைவியர்

399. தெட்சண பூமி - தக்காண பூமி

400. ஆரியங்காவு - தமிழ்நாடு - கேரளத்தின் எல்லையிலுள்ள ஊர்

403. தண்டு சேவித்தல் - படைச் சேவகம் செய்தல்

இடமுடைய சாத்தாவுக் கேவல்செய்ய கூடவிட்டார்
மாசாத்தா ஏறுதற்கு மதயானைதான் கொடுத்தார்
பேசரிய தெய்வப்படை பேய்[ப்]படையுங் கூடவிட்டார்
மந்திரவாள் கொடுத்தார் வான்கரும்பு வில்கொடுத்தார்
சந்திர வட்டக்குடையும் சகலபேருங் கொடுத்தார்
பேய்களுக்கு மூப்பாகி[ப்] பிள்ளைவரக் கர்த்தனுமாய்
தாயகமாய் இருப்பதற்கு[ச்] சங்கரனா ரனுப்புவாராம்

## அய்யனார் விடைபெற்றுப் புறப்படுதல்

### வேறு

அனுப்பினார் தெக்ஷிணா முகஞ்செல்லவே
அம்மையப்பர் தனைவேண்டிக் கொண்டனர்
கனத்தகொம்புக் கடுநடை யானையை[க்]
கவணீட்டியென[க்]கச்சங்[கி]லி யிட்டார்
கொம்பில் குஞ்சரக் கவரிகள் தூக்கினார்
குத்திவாங்கிடும் கத்தியை[க்] கூட்டினார்
வெம்பத் தாங்கிய[ம்] வீரகண்டாமணி
வீரதண்டை நடைகாலில் பூட்டினார்
மத்தகத்தின்மேல் சிங்கக்கொடி கட்டி
வான்கழுத்தில் மணிவடம் பூட்டினார்
ரத்னவண்ணச் சகலாத்துப் பட்டினால்
இடையிறுக்கும் நெடும்கச்சை பூட்டினார்
பொற்பிர காசத்து[ப்]பூச்சப்பரத்தின்மேல்
பொய்யில்லாத மெய்ஐயன் இருக்கின்றார்
கற்பு நாச்சிமார் பூரண பொற்கலை
கண்ணழகை யிருபுறங் காட்டினார்

---

406. மாசாத்தா - அய்யனார்க்குரிய வேறு பெயர்

413. கச்சங்கிலி - யானையின் கழுத்தில் இடும் கயிறு

414. கத்தியைக் கூட்டுதல் - இடையில் கத்தியைச் சொருகுதல்

415. தாங்கியம் - ஓர் அணி

417. சகலாத்துப் பட்டு - கட்டியான பட்டு

தங்கத்தாலே குவடு சமுதாடு
சந்திரகாவியுறையிட்டமந்திரவாள்
தொங்கலாய் யிருக்கும் பட்டுச் சோமன்மேல்
துப்பட்டி முந்திதொங்க உடுத்தினார்
இட்ட முத்துப் பதக்க மிடத்திலே
லெச்சிமி குடிகொண்டங் கிருக்கிறாள்
பொட்டுக்கு மேலே பட்டுரு மால்கட்டு
பூதலத்தில் விஷ்த்தரம் போதுமே
மாகாளனென்னும் பூதத்தை நோக்கியே
மலையை நோக்கி[ப்]படையை நடத்தென்றார்
வேகமாகிய பூதப் பிசாசுகள்
மேகம்போலே திசைஎட்டுஞ் சூழவே
இயக்க ராக்ஷத[க்]கந்திருவ ராசாக்கள்
இன்னதா மென்று லெக்கிடக் கூடாது
மயக்கஞ் செய்யுங் கொடூரப் பிடாரிகள்
மண்ணும் விண்ணுஞ் சரியாய் நிறைந்ததாம்
அரியரபுத்திரன் தென்பூமி நோக்கிட
ஆதிலெச்சுமி தான்வழி காட்டினாள்
இருபுறமும் பிடிக்கின்ற தீவெட்டி
இருள்தன்னைப் பகலாகவே காட்டினார்
முரசுபம்பை கிடுபிடி மல்லாரி
முழக்கத்தாலே செவிமந்த மாச்சுதாம்

## அய்யனார் வரும் வழியின் வருணனை

வனத்தைக் காக்கும் கராதிதீர்த்தமும்
மாசில்லாத சிவலிங்கக் கொடியும்

---

420. குவடு சமுதாடு - திரண்டகத்தி வகையில் ஒன்று

421. துப்பட்டி - மேலாடை

423. விஷ்த்தரம் - வித்தாரம்

428. தீவெட்டி - தீவட்டி - தீப்பந்தம்

430. இவை முழவுக் கருவிகள்

431. கராதி தீர்த்தம் - முதலைத் தீர்த்தம்

பாளையப்பெண்கள் விளையாடும் பூமியும்
பச்சைநீலம் விளைகின்ற பூமியும்
காளமாமுகில் ஓயாத பூமியும்
கனிகளுண்டு களிக்கின்ற பூமியும்
எழுதிடாமல் படிக்கின்ற பூமியும்
இன்னமுண்டான ராச்சதப் பூமியும்
பொழுதுகாணா மரமுள்ள பூமியும்
புலிமுகமுள்ள மானிடர் பூமியும்
தேவர்வந்து தவஞ்செய்யும் பூமியும்
தெலுங்கு கன்னடம் பேசியபூமியும்
காவில்கல்மழை பெய்திடும்பூமியும்
தூரபாதாள தொண்டுள்ள பூமியும்
காத்தினால் பெண்கள் கற்பங்கொள் பூமியும்
கால்வைத்தோர்க்குப் பயிர்கின்ற பூமியும்
காத்துவீசிய அருச்சுனப் பூமியும்
கடந்து தென்முகமாய் நடைகொண்டார்

**வேறு**

அறிந்து தலதீர்த்த மாடி
அரிய கேதார தீர்த்தமாடி
விரிந்த குருகேந் திரன் பூமிவிட்டு
விசயன் தவம்பண்ணுங் காடுவிட்டு
ஆலித்தடிக்காரர் கூட்டத் தோடே
ஐயன் குருபூமி தனைக்கடந்து

---

433. காளமா முகில் - சப்த மேகங்களில் ஒன்று

435. பொழுதுகாணா மரம் - அடர்ந்திருப்பதால் சூரியனை மறைக்கும் இயல்புள்ள மரங்கள்

438. பயிர்கின்ற - பயப்படுகின்ற

440. கேதார தீர்த்தம் - சிவதலம்

441. குருகேந்திரன் பூமி - குருகேத்திரம், குருக்ஷேத்திரம். விசயன் தவம் பண்ணும் காடு - அருச்சுனன் பாசுபதத்திற்காகத் தவம் செய்த வனம்.

442. ஆலித்தடிக்காரர் - வரிசையாகக் கையில் தடியேந்தியவர்கள்; குருபூமி குருக்ஷேத்திரபூமி

மேலும் ஐயோத்தி 'நாடுவிட்டு
விளங்கும் வடகாசி தீர்த்தமாடி
சோனை நதிக்கரைதனை[க்] கடந்து
துரோண மலைவிட்டுக் கிழக்கானார்
காணி காளத்தி மலைகடந்து
கண்டார் வேங்கிடா மலைதனையே
அண்ணா மலையம்மை ஆறுவிட்டு
அழகுபெருங் காஞ்சிபுரமும் விட்டு
பொன்னை யாறது தனைக்கடந்து
பெருகுந் திருப்புலியூர் கடந்து
சிறந்த சீர்காழி சிற்றம்பலம்
திருவாரூர் விட்டுத் தெற்காகி
அறங்கள் தழைத்தோங்கும் பழனிமலை
ஆவினன் குடிஅரு கணைந்தார்
ஆனை வருகிற வழிதனிலே
அய்யன் பூச்சப்பரம் தன்னில்வர
சோனை மேகங்கள் மழைபொழியும்
சிறந்த பூஞ்சோலை வழியாக
தூண்டு மாமுனி படுகளத்தை[த்]
தூவிக் குயில்சொல்லிக் கூவிடவே
வேண்டும் பெருமாள்தன் வடிவுகொண்ட
வேட்டைக் கோலத்தை[க்] கிளியுரைக்க
ஈசன் பசுமேய்த்த காரணத்தை
எடுத்துப் பேசுதே பெடைக்குருவி

---

444. சோனைநதி - வச்சிரநாட்டைச் சார்ந்த ஆறு; துரோண மலை - தோரண மலை

444-446. இவற்றுள், துரோணமலை, காளத்திமலை, திருவேங்கடமலை, அண்ணாமலை எனும் தலங்கள் உள்ளமை காண்க.

447. பொன்னை ஆறு - காவிரி

451-465. வரை அய்யனார் பிறந்த பூஞ்சோலை வருணனை வருகிறது.

453. பெருமாள் வடிவு - மோகினி வடிவு

454. ஈசன் பசுமேய்த்தல் - வல்லரக்கனைக் கொல்ல திருமால் சென்றபோது அவர் வேலையை இறைவன் செய்தார்.

ஓசைத் தேவர்கள் ஓடினாற்போல்
ஓடிக் காட்டுதே மயிலினங்கள்
தூண்டித் தலையத்த ராச்சதன்போல்
துள்ளிக் குதிக்குதே மான்கன்றுகள்
கூண்டு வரையேந்து அரக்கனைப் போல்
குரங்கு வருக்கையின் கனிசுமக்க
மனதிடங் கண்ட முனிவனைப்போல்
மயிலின் விளையாட்டை[ப்] புலிபார்க்க
தென்றல் கமழ்கின்ற சோலையெல்லாம்
தெய்வத் துறைப்பெண்கள் பூவெடுக்க
யிடுப்பில் தடிவைத்த யாதவர்போல்
யேந்து வாலோடே மந்திபாய
உடுக்கத் துணியற்ற சன்னியாசிபோல்
ஓடித் திரியுதே மிருகமெல்லாம்
புதிய கலியாணப் பெண்களைப்போல்
பூத்து மணக்குதே மரங்களெல்லாம்
பதியி லிருக்கின்ற பரதேசிபோல்
படிந்து பூவினில் வண்டிசைக்க
பலர்க்கும் எளிதான பரத்தையைப்போல்
பழுத்த மரங்களில் பறவைமோத

## அய்யனார் மலையில் அமர்தல்

மலைக்குள் வளமெல்லாந்தான் பாத்துவந்தார்
குடக மாமலையின் மேலே
வந்து கருமலை யுச்சியின்மேல்
மணிகண்டய்ய னென்றே யிருந்தார்
அந்த மலைமேலே யரசிருந்தார்
ஆலித் தடிக்காரர் காவலாக

---

455. தேவர்கள் ஓடினது வல்லரக்கனைக் கண்டு என்க

456. கூண்டுவரை ஏந்து அரக்கன் - சேர்ந்துள்ள மலைகளைத் தூக்கக் கூடியவன்

465. குடகமாமலை - குடகு மலை

466. கருமலை - கரிமலை என இப்போது வழங்கப்படும் கறுத்தமலை; பம்பை நதி தீரத்திலுள்ளது; மணிகண்ட அய்யன் ஐயப்பனாகிய மணிகண்டன் என யோக நிலையில் இந்த இடத்தில் இருந்தார் என்பர்.

நின்று மேக்காக தானெழுந்து
நீண்ட மலைசுத்தி வேட்டையாடி
அன்னக்கொடி கட்டி ஆடுகின்ற
ஆரியங் காவினருகே வந்தார்
தோப்புஞ் சுனைகளும் வழிப்போக்குஞ்
துறையுஞ் சுரமென்று கோயிலுண்டாம்
ஆரியங் காவய்ய னென்றே
அந்த மலைமேலே யரசிருந்தார்
பொதிகை மலைசுத்திப் பார்க்கவென்றே
போனா ரொருகாலம் படையுடனே
விதியால் பொதிகையை வலஞ்சுத்தியே
மீண்டு வருகின்ற வேளையிலே
மூங்கி[ல்] மரமது தான்வெடித்து
முத்துச் சொரிகின்ற தலத்தைக்கண்டார்

## சொரிமுத்து அய்யனாக அமர்தல்

தாங்கும் பல்லாக்கை[த்] தானிருத்தி
தவழ்ந்து வடிவுள்ள சிறுபிள்ளைபோல்
தோன்றினா ரையன் மலைமேலே
சொரிமுத்தைய னென்று துதித்தார்
ஆன்ற காவேரி ஆற்றுக்கிப்பால்
அரிய தலமூன்று உண்டாக்கி
பாண்டி நாட்டுக்கு[ச்] சரக்குவரும்
பாதை மூன்றாகக் கண்டதுவே
பூசைக் குறைவந்தால் விசாரிப்பது
புலியுங் கடுவாயுங் காவலாக

---

469. அன்னக்கொடி - உணவு தானமாகக் கிடைக்கும் என்பதை உணர்த்தும் கொடி; ஆரியங்கா - ஆயிரங்காவு என்றும் வழங்கப்படும்.

475. சொரிமுத்து அய்யன் மூங்கில் மரத்தைப் பிளந்து அவதரித்தார் எனக் கதைகள் வழங்குகின்றன.

477-478. மூன்று தலம், மூன்று பாதை - மலையாள நாட்டிலிருந்தும் பாண்டி நாட்டிலிருந்தும் சரக்குப் போக்குவரத்து இருந்த மூன்று சரித்திர இடங்களான பொதிய மலை - சொரிமுத்து அய்யன், ஆரியங்காவு - ஆரியங்காவு அய்யன், கரிமலை - மணிகண்ட அய்யன். இம் மூன்றும் இங்குச் சுட்டப்படுகின்றன.

479. விசாரித்தல் - சோதனை செய்தல்

மாசில்லா மாகாள பூதத்தோடே
மலைகள் தோறு மரசிருந்தார்

## மதுரையில் மீனாட்சி பிறப்பு

### வேறு

அம்மலையின் மீதிலே யரசிருக்குங் காலம்
அந்தமான முறைதாத்தி நித்தியஞ் சேவித்தாள்
செம்மையுள் மதுரைமுதல் திருச்சிராப் பள்ளிக்கும்
சென்றதிசை வென்றுவருஞ் செங்கோலுக் காளில்லை
மூன்றுமுலை பெண்ணொருத்தி மதுரையிலே தோன்றி
மூப்புவயதா யிருந்தாள் மாப்பிள்ளை யில்லாமல்
ஈன்ற சுற்றத்தார்களோடு மூன்றுமுலை மங்கை
யிதுகவ்வைதீர சொக்கநாதரைத் தொழுதாள்
ஆட்டமுள்ள பெண்கொடிக்கும் நாட்டுக்கு மிரங்கி
ஆண்டவனார் மதுரையிலே பாண்டியனாய் வந்தார்
கூட்டமாக மூன்றுமுலை கொண்டுவந்த பெண்ணை
கோலமிட்டுக் கலியாண மாலையிட்டுக் கொண்டார்
மாலையிட்டு[த்] தென்மதுரை வாசலி லிருந்து
மாகூஷிமை குன்றாதபடி ராச்சியத்தை யாண்டார்
..... ...... ...... ......
ஆர்க்குமாக[க்] கருவையில் சாத்தனார் யிருந்தார்
செப்பமாகவே மதுரை யப்பனைச் சேவிக்க
சீக்கிரமாய் மாகாள பூதத்தை யழைத்தார்

---

481. அந்தமான முறை தாத்தி - அழகான நிலையில்; நித்தியம் சேவித்தல் - நாள்தோறும் நிலையான ஆட்சிசெய்தல்

482. மதுரை, - திருச்சி என்பன நாயக்கர்கள் காலத்துத் தலைநகர்கள்

483. இவள் தடாதகைப் பிராட்டியான மீனாட்சி

484. கவ்வை - துன்பம்

485. ஆட்டமுள்ள பெண் கொடி - முயற்சியுடைய சுறுசுறுப்பான

487. மாகூஷிமை - மாட்சிமை, மகிமை

488. சாத்தனார் - அய்யனார்

## அய்யனார் சொக்கரைப் பார்க்க மதுரை வரல்

வைப்புப்பணம் போலுதவும் மாகாள பூதமே
மதுரையிலே போவதற்குக்] குதிரைவேணு மென்றார்
தண்டை மேலாக வீரவெண்தடமும் பூட்டி
தாங்கும் ஓர்பக்கத்திலே தூங்கும் பட்டிகட்டி
தண்டைபொற் சதங்கை மணிகண்டை வடம்பூட்டி
உச்சிமேலோர் பொற்சரிகைக்] குச்சி நின்றிலங்க
மணிகள் பதித்திலங்கும் சேணத்தை யிறுக்கி
வல்லமைக்குத்] தக்கதான கல்லணை பதித்தான்
நாணிக்கொண்ட பெண்களைப்போல் கோணிக்கொண்ட முகற்றில்
நற்களபத்தோடு சாதிலிங்கப் பொட்டு மிட்டார்
வட்டமிட்டு தட்டிப்போட்டு பொட்டென மிதிக்கும்
வான்சூரியன் பதிக்கு நேரே பல்லைக்காட்டும்
தொட்டுப் பிடிக்கப்படாத பட்டத்துக் குதிரை
சூழச்சூழ நின்ற சக்கரவாளத்தைப்] பிடிக்கும்
எம்பிரான்முன் கொண்டுவந்த நம்பிரானைக் கண்டு
இதுமுகூர்த்தந்தான் யென்று முதுகினில் குதித்தார்
பூதப்படை பேய்ப்]படைகள் சீதக்கடல் போலே
பொட்டகத்தைப் போலே வெள்ளைவடங்கள் பிடித்தார்
காதத்திற்குக் கேட்குஞ் சங்குநாதத்தைக்] கேட்டு
காளத்தை முழக்கிக்] கடிவாளத்தைப் பிடித்தார்

---

490. வைப்புப்பணம் - சேமிப்பு நிதி

491. தூங்கும் பட்டி - தொங்கும் பட்டை

492. மணிகண்டை வடம் - பெரிய மணி தொங்கும் சங்கிலி பொற்சரிகைக்குச்சி - பொன் சரிகைப் பட்டுவினால் அமைந்த குஞ்சம்

493. கல்லணை - மெத்தை

494. முகற்றில் - முகத்தில்; நற்களபம் - நறுமணச் சாந்துக் குழம்பு; சாதிலிங்கப் பொட்டு - இலிங்கம் போன்ற குறி

495. பொட்டென - பெட்டென, விரைந்து

496. சக்கரவாளம் - சக்கரவாளகிரி, பூமியைச் சுற்றியிருப்பது

498. சீதக்கடல் - குளிர்ச்சிக் கடல்; பொட்டகம் - பெட்டகம்

499. காதம் - 10 மைல் தூரம்; காளம் - எக்காளம் போன்ற கருவிகள்

மத்தளக் கொட்டுக்குஞ் சற்றே மிச்சமாய்[க்] ,கால்வைக்கும்
வாலைத் தொட்டுநின்று பின்னங்காலைக் கிந்தி[க்]காட்டும்
சுத்தி[ச்]சுத்தி வட்டத்திலே சத்தத்தை[த்] தொனிக்கும்
தூரத்திலே கொண்டுபோய் உதாரத்திலே மீறும்

## மதுரைக் கடைவீதியை அய்யனார் பார்வையிடல்

வேட்டைப் புலிபோல் மதுரைக் கோட்டைக்குள்ளாக
விட்டிறங்கி வைகைநதிப் பட்டணம் புகுந்தார்
பேட்டைக் கடைதோறு[ம்] பறைநோட்ட மிடுவோரும்
பிணக்கறவே யம்பலக் கணக்கெழுது வோரும்
பாடுவார்க்கு[ச்] சோறுபோட தேடுவோர்கள் கோடி
பாப்புக்கு முப்பானவரைக் கூப்பிட்டுக் கொடுப்பார்
சேடுபெருங் கூட[ல்]வடக்கோடும் வைகை யாற்றில்
தீர்த்தமாடும் பேர்களெல்லாம் சாப்பிட்டுப் பாரென்பார்
இப்படியே புண்ணியங்கள் தப்பிடாத ஊரில்
இரத்தின மணிமண்டபத்தி லிறங்கினாரே அய்யன்
சப்பரமும் யானையும் பொற்சங்கிலியும் கிங்கிலியர்
சத்திரிய ரோடுராச புத்திரருஞ் சூழ
அம்பலத்துக் கேற்ற ரற்றின[க்] கம்பளிவிரித்து
ஆட்டமாக[ப்] போட்ட வட்டக்கோட்டையில் சந்தித்தார்
பாம்பு[ச்]சட்டை போட்டிடும் பட்டாணி போலிருக்கும்
பைசாக்கு போட்டொருவன் பாதையிலே வந்தான்

---

500. கிந்திக் காட்டுதல் - நொண்டியடித்துக் காட்டுதல்

501. தொனிக்கும் - ஒலிக்கும்

503. பேட்டைக் கடை - குழுவாகக் குடியிருக்கும் ஊரிலுள்ள அங்காடி; நோட்டமிடுதல் - வேடிக்கை பார்த்தல்

504. பிணக்கறவே கணக்கு எழுதுதல் - தெளிவாக எழுதுதல்; பாப்புக்கு முப்பானவர் - அந்தணர்களில் பெரியோர் இளையோர் வேறுபாடின்றி; 'பாப்புக்கு முப்பில்லை' என்பது வழக்கு

505. சேடுபெருங்கூடல் - பெருமை பெரும் மதுரை

507. சத்திரியர் - அரச வமிசத்தினர்; ராசபுத்திரர் - இராஜபுத்திர வமிசத்தைச் சேர்ந்த வீரர்கள்

508. ரற்றினக்கம்பளி - இரத்தினக் கம்பிளி

509. பாம்புச் சட்டை போட்டிடும் பட்டாணி - இசுலாமிய இனத்தவர்களில் ஒரு பிரிவினர்; பைசாக்கு - பைஜாமா போன்ற தொள தொள ஆடை

பெருகடை யடைந்திருக்கப் பொற்செட்டியாரே நமக்குப்
பல்விளக்கின உடன்தின்பதற்கு மிளகு வேணுமென்றார்
அருந்த கையெடுத்து வாயா லவனிடத்தில் கேட்க
அறிவில்லாத செட்டியவன் சிறுபயறு என்றான்
அள்ளிக் கொடுத்தறியாத கள்ளனவன் போக
அத்தம்பாத்து வாறானொரு வெற்றிலைக் காரனொருவன்
வரைக்கோலும் பையுந் தோளின்மீதிலே கிடக்க
வேசை மினுக்கான வெறும்வெற்றிலையை[க்] கண்டான்
கண்டு தகையுண்டெனக்குத் தின்றுகொள்ள வேணும்
கைவசத்தில் ரெண்டுமூன்று வெற்றிலை தாவென்றார்
ஆசைக்காரனோ அனியாயக் காரனோ வென்றோ
அவித்து[த்]தின்க[க்] கொண்டுவந்த பயத்தம்யிலை என்றான்
சொன்னமாய மறியாமல் போனான் கடந்தோமென்று
பட்றைகடை தன்னில்வந்து கட்டவிழ்த்துப் பார்த்தான்
மிளகுதன்னைப் பார்க்கயிலே சிறுபயறதாக
வெத்திலையைப் பாக்கும்போது சுத்த பயித்திலையாய்
தகைத்துக் கேட்டுக்கொண்டு வழிதன்னிலே யிருக்க
சுத்திக்காரனோ குறளிவித்தைக் காரனோஎன்றார்
மீண்டுவிழுந்தோடி வந்து ஆண்டவனே நாங்கள்
மெத்த[ப்] படித்தோமெனவே எத்திப்போட்டு[ப்] போனோம்
கூண்டுநாங்கள் சொன்னதெல்லாம் குறைந்திடாமல் கண்டோம்
கொச்சைச் சூதுவைத்ததிலே மிச்ச மொன்றில்லை

---

510. பெருகடை - பெரிய கடை

512. அத்தம் பார்த்து - கடைசி நேரம் பார்த்து

513. வேசை மினுக்கு - பகட்டு அலங்காரம்

515. பயத்தம் இலை - பயற்றஞ்செடியின் இலை

516. பட்றைகடை - பட்டறை, தொழில் கூடம்

517. சிறுபயறு - பச்சைப் பயறு; பயித்திலை - பயற்றஞ் செடி இலை

518. குறளிவித்தைக்காரன் -மாயாஜாலக்காரன்

519. மெத்தப்படித்தல் - அதிகம் படித்தல்; எத்திப் போட்டுப் போதல் - ஒதுக்கி விட்டுச் செல்லுதல்

520. கூண்டு - சேர்ந்து; கொச்சைச் சூது வைத்தல் - இழிவுபடுத்தும் நோக்கத்தில் சூழ்ச்சி செய்தல்

கூட்சந்திரக் கேட்டதைக் கொடுத்திடாத பேர்கள்
கொல்லைத் தலைவாசல்தோறும் பல்லைக் காட்டுவார்கள்
மேச்சலுள்ள காட்டில்சென்று மேய்ந்திடாமல் போனால்
வீட்டில் பெண்கள் பட்டினியாய்[ப்] போட்டுக் கொல்லுவார்கள்
சிறுபயத்தைக் கறிமிளகாய் திருத்துதற்குப் போமோ
செட்டிபிள்ளை மாரிருந்தால் குட்டிச் சொல்வார்களோ
சிறியவர்கள் செய்தபிழை பெரியவர் பொறுப்பீர்
செத்துப்போக உன்கையிலே சீட்டுத்தர வேண்டாம்
என்றுசொல்ல பண்டுபோலிருக்கு மென்றா ரையன்
இச்சைப்படி[க்] கண்டவர்கள் மெச்சிக்கொண்டு போனார்
மன்றிலுள்ள பாண்டியன் முன்சென்று மதுரைக்குள்
வந்திருந்த செய்தியொரு மந்திரி யுரைத்தான்

## பாண்டியனை அய்யனார் காணுதல்

### வேறு

டட்டாணி வடிவுகொண்டு பருங்குதிரைக் காரனவன்
தட்டறவே யானையின்மேல் சப்பரமுங் கொண்டுவந்தார்
காட்டிலுள்ள வேடுவரோ கப்பலிலே வந்தாரோ
நாட்டிலுள்ள மனிதரென்று நமக்கறிய சொல்லுமென்றார்
குதிரை ஒன்றுக் கேழுலகம் கொடுத்தாலும் காணாது
மதுரையிலே சேவிக்கவே வந்திருந்தோமென்று சொன்னார்
வடிவழகைப் பார்த்ததுண்டால் மன்மதனும் வோடிடுவான்
கடைக்கண்ணால் பார்த்தபெண்கள் கணவனையும் பேணுவாரோ
என்றுரைத்த மந்திரிக்கு ஏதுசொல்வார் பாண்டியனார்
வென்றியுள்ள சேவகனை விரைவாய்வரச் சொல்லுமென்றார்
சொல்லுமென்ற வேளையிலே தூதுவர்கள் தானோடி
வல்லமைசேர் பாண்டியனார் வரவழைத்தார் வாருமென்றார்

---

521. கூட்சம் தீர - வெட்கமின்றி

523. குட்டிச் சொல்ல - குட்டு சொல்ல, ஏமாற்ற

526. மெச்சுதல் - பாராட்டுதல்

528. தட்டறவே - குறை இன்றி

### வேறு

கட்டுக்குதிரையில் வாறேனெனச் சத்தங் காட்ட
கம்புளியிட்டுக் குதிரைமேல் சென்றார் செணத்தில்
வட்டத்தலைப்பாவும் தொப்பியும் குச்சுரு மாலும்
வல்லயக் கூட்டத்தின் கீழாக மேல்கட்டினுள்ளம்
கட்டியக் காரரை[ப்] போலே குதிரை கனைக்க
கத்திப் பிரகாசம் மின்வெட்டுப் போலவேகாட்ட
கொட்டிய தம்பட்டத்தோடே முழங்குங் குரவை
கோட்டையைச் சூழ்ந்த குடியிருப்பெல்லாங் குலுங்க
மாலை சவ்வாது கற்பூரங்கள் சூழ்மணக்க
மணிகள் முழக்கிய மண்டபச் சந்தியில்வந்தார்
சோலை மதுரையில் பாண்டியனாய் வந்தசொக்கர்
தூயதிருப் பாதம்சேவித்து நின்று துதித்தார்
பாண்டியனார் கோலத்தழகையே கண்ணுற்றுப் பார்த்தார்
பரிச்சந்திரத் தாவடத்தழகை[த்] தகப்பனும் பார்த்தார்
ஆண்டவனா ரிந்த சாத்தாவிடத்தே யகன்று
அருகேயிருத்த முதுகைத் தடவினா ரையன்
சுத்தி எதிர்நின்று மாந்திரிமார்க்கு[த்] துலங்க
தூரத்தைவிட்டு நீவந்த கருமத்தைச் சொல்வாய்
பத்திமதுரையில் பாண்டியன் சற்றே பகைதான்
பல்லுத்தெரியாமல் மெல்லவருஞ் சிருப்பாணி
கண்டகியாத்தாங் கரையிலே யானும்மைக் கண்டேன்
கைலாசக்கோட்டையும் வைகுண்ட[க்] கோட்டையும் கண்டேன்

---

539. கட்டுக்குதிரை - வாட்டசாட்டமான குதிரை; கம்புளி - கம்பிளி; செணம் - ஒரு நொடியில்

540. வட்டத் தலைப்பா, தொப்பி, குச்சு, உருமால் என்பன இக்கதைப்பாடல் புனைந்த காலத்திய சேனாதிபதிக்குரியவை போலும்; வல்லயக் கூட்டம் - வல்லையம் எனும் கருவி; மேல் கட்டி - மேலாடை

541. கட்டியக்காரன் - நாடகத்தில் நகைச்சுவைப் பாத்திரமாக நடிப்பவர்

542. தம் பட்டம் - வீணான தற்பெருமை

545. பரிச்சந்திரத் தாவடத்து அழகு - குதிரை, சந்திரன் போன்ற முகம், அணிகலன்கள் இவற்றின் அழகுகள்

மண்டலத்திலுள்ள மலைக்கெல்லாம் வேட்டைக்கு வந்தேன்
மதுரைத் தலத்திலே சேவிக்க ஆசையை வைத்தேன்
சார்ந்திடும் பிள்ளைக்கு[ப்] பாக்கியந்தன்னைத் தருவாய்
... ... ... ... ...
சுந்தரனாகிய சாத்தாவும் இப்படிச் சொல்ல
தோணாத பிள்ளை பழுதுவராமலே சொன்னான்
வீரமுஞ் சேவகத் தன்மையும் பார்த்திடவேணும்
விளம்பிடக் கேட்டு வெளியில் குதிரையை விட்டார்

## அய்யனார் குதிரையிலமர்ந்து பயிற்சிகளைச் செய்து காட்டல்

### வேறு

விட்டகுதிரை மிதிக்கின்ற தொனியது
மேகத்தொனியது போலவே நின்றிலங்க
தொட்டவிசை கடிவாளத்தை யிறுக்கவே
சூறாவளி பட்டதுரும்பு போலேற்படும்
கொத்து[க்] கொத்தாக[க்] கொருத்தம்ணிச் சதங்கை
கோட்டை வட்டமெல்லாம் கலீர்கலீர் என்றொலிக்க
மத்துக்கடைகின்ற தயிர்போலே சூழச்சூழ
வட்டமிட்டு மேகமண்டலத்தை[ப்] பார்த்திடுமாம்
புலியைப் பிடிக்கின்ற சுருக்குண்டு குதிரைக்கு
பொட்டல் கல்களும் பொடிப்பொடியாய் மிதித்திடும்
வலிய மதயானை தனைவிட்டு[க்] குதித்திடும்
மந்திர அரிவாளை உறைவிட்டு[க்] கழத்தினார்
குதிரைத் தலையிலே தேங்காயை வைத்துக்கட்டி
குதிரைமேல் காயங் கொள்ளாமல் வெட்டினார்
முதுகுபணியவே மணலள்ளி[க்] காட்டுவார்
முன்னேயிடும் அம்பைமுடிகிப் போய்[ப்]பிடிப்பாராம்
இரும்புத் தடிகளை[க்] குழிகில்லி நட்டிக்கொண்டு
இரண்டுமூன்று நாலுதுண்டாக வீசுவார்

---

558. சுருக்கு - வல்லமை

561. முதுகு பணிய - முதுகு கீழே வளைய; முடிகி - முடுகி, விரைந்து

562. கில்லி - தோண்டி

மருப்புக் கரியானை மத்தகத்திலே குதிப்பார்
மறுத்துக் குதிரையில் கல்லணையில் வந்திருப்பார்
குத்திக் கொண்டிருப்பா ரட்டணைக்கா லிட்டுக்கொள்வார்
குதிரை முதுகிலே கூத்தாடி நின்றுகொள்வார்
முத்துப் பதிக்கின்ற தலைப்பா கட்சையுமோ
முதியதோளில் மோகனமாலை புரளுமோ
குவளை பதிக்கின்ற குடக்கடுக்கன் ஆடுமோ
குஞ்சக்கயத்தின் மேல்குடவண்டி அசையுமோ
பவளக்கம்பியிட்ட பரிவட்டம் அசையுமோ
பத்தரை மாத்துத் தங்க[த்]திருமேனி குலுங்குமோ
இந்தப்படி அய்யன் நடத்துங்குதிரை தன்னை
எட்டிப்பார்த்த பெண்க ளிமைதட்டி விழிப்பாரோ
பந்திசாதத்தின்மேல்கறிவைக்காமல்போவாரோ
பச்சக் குழந்தைக்குப் பாலூட்டாமல் போவாரோ
பாக்குக் கிடைத்தாலும் வெத்திலையை நினைப்பாரோ
பாதைமேல் கிடக்கும் முள்ளு பாத்து நடப்பாரோ
யீக்கள் எறும்புகள் கடித்தாலுஞ் சுருக்குண்டோ
எதிரே ஒருவர் எதித்தாலும் விலகுமோ
குருக்கள் வந்தாலும் கும்பிடுதற் கிடமுண்டோ
கொண்ட புருஷனவன் கூப்பிட்டாலும் பயமுண்டோ
ஒருக்கா லிருக்காலினின் றெட்டிப் பாத்தாப்போல்
ஒன்றைக் காதி லுடமை போடநேரமோ
கோடிப் பெண்களெல்லாங் கூட்டமுண்டு தெருவிலே
குதிரைக்காரன் மேலே கோபம் மெத்த கோபம்மெத்த

---

564. அட்டணைக்கால் இடுதல் - கால்களைக் குறுக்காக மடித்துச் சம்மணம் போட்டுக் கொள்ளுதல்

565. கட்சை - கச்சை; இடுப்பிலுள்ள ஆடை

566. குடக்கடுக்கன் - காதணி; குஞ்சக்கயத்தின் மேல் - குஞ்சம் தொங்கும் கயிறு; குடவண்டி - குடை வண்டி.

567. பவளக்கம்பி - பவளத்தாலான கம்பி பரிவட்டம் - தலைப்பாகை

569. பந்தி சாதம் - பரிமாறப்படும் உணவு; கறிவைக்காமல் போதல் - மறந்து போதல்

571. எதித்தாலும் - நேராக வந்தாலும்

பாடிமதுரையில் பாண்டியனார் பாத்திருக்க
பரிசை[த்] தொட்டெடுத்து[க்] கத்திவீச்சு[ப்] பாருமென்றார்
மண்ணையள்ளி யிட்டா லுடம்பிலும் பட்டிடுமோ
மழைகள் பெய்திட்டாலும் உடம்பை நனைத்திடுமோ
எண்ணிரெண்டு மூன்று குறுக்கத் தாள்யிடைக்கும்
யீக்கள் பறந்தாலும் இரண்டுதுண்டாய் விழுந்திடும்
கிட்டக்கிட்டச் சென்றுதொட்டுக் கொள்ள[ப்] போகுமே
கிசுகிசென்று சத்தம் மறுத்தொன்றுங் கேட்டுதோ
சுட்டிக்கல்லுகளும் வெட்டுப்பட்டுப் பொடியாப்போம்
சுத்தி[ச்]சுத்திவாற அய்யனுக்குத்தெரியாது
பத்து நூறாயிரங் கத்திமெத்த நெருங்கத்தான்
படையோ வலதுபாக்க யிடிவெட்டுச் சரியவே
கத்தன் பாத்திருக்க காட்டுகின்ற சாத்தாவின்
கையிலெடுத்தாரே கடயமதுரான வில்லும்
வெள்ளி[க்]குப்பி கட்டிவீர[க்] கண்டாமணி யிட்டு
வீரக் குஞ்சமிட்ட வில்லுதனைப் பூட்டினார்
அள்ளி அள்ளி[க்]கொப்பில் கிடக்கின்ற பழங்களை
அறுக்கும் ஒருஅம்பு கொருத்திடும் ஒரு அம்பு
கொம்பில் தேனீயை[க்] கலைத்திடும் ஒருஅம்பு
கூட்டத்துக் கொக்க நின்றாடும் ஒருஅம்பு
அம்பின் மேலொரு அம்புகொருத்திடும்படி எய்தார்
அய்யன் பாண்டியன் சுருக்காக[க்] கொண்டுவந்தார்
பூசைக்காகவே பூக்கொய்யும் வோரம்பு
பொன்னின் கூடைகொண்டு பூப்பிடிக்கு மோரம்பு
மாசில்லாத தாசன்தனைப் பார்த்து விடுங்கணை
ஆனைக்குட்டி போலே கோணி[க்]கோணி வட்டமிடும்

---

577. தாள்யிடை - தாள் இடை, கால்களுக்கு இடையில்

579. சுட்டிக் கல்லுகள் - சிறு பரற்கற்கள்

580. வலதுபாக்க - வலப்பக்கம் பார்த்து; இடிவெட்டுச்சரிய - இடுபட்டுச்சரிதல்

581. கடயமதுரானவில் - வாட்டமான வில்

585. கொருத்திடுதல் - கோர்த்திடுதல்; சுருக்கமாக - சீக்கிரத்தில்

கடலைப்பாத்து விடுகின்ற பிறையம்பு
காத்துப் பிசகான கப்பலைத் திருப்பிடுமாம்
முடுகிமுனை நோக்கி யிடுகின்ற முனையம்பு
முயலைப் பிடிக்கின்ற புலிகளை முடுக்கிடும்
வடத்தைப் பிடித்தவன் மார்புக்கு வலியறும்
வலக்காலிடக் காலை சுவட்டிலே மிதிப்பதும்
விடுத்த கணையோடே வாய்த்தாரங் கொள்வதும்
மேகமண்டலத்தை தொடும்படி[க்] குதிப்பதும்
முடுக்கு வல்லையம்போல் மீசை யிருப்பதும்
கருத்தபொட்டின் கீழ்சிவந்த சந்தனப் பொட்டும்
காதில் மாணிக்கக் கல் பதித்த கடுக்கனும்
விரிசன் பாம்புபோல் வெள்ளிக் கொடியழகும்

**வேறு**

மண்ணுளுந்தி போலே தங்கக்கொடி மின்னுவதும்
தறியி[ல்] ஓலமிட்ட தண்டை வளையாட்டுகளும்
சவடிப் பின்னலிட்ட தாமரைப்பூ பதைக்கும்
தத்தித் திமிதி மிதத்தி தோமென
சென்றுமுகம் வைத்த திசையெல்லாம் மணக்குதாம்
... ... ... ... ...
கர்த்தனான தெய்வப் பாண்டியன் கையமர்த்தி
கணக்கனார் தம்முடைய முகம்பார்த்துச் சொல்லுவார்

## பாண்டியன் அய்யனாரைச் சேவகத்தில் அமர்த்துதல்

**வேறு**

சித்திரஞ்சேர் அரியர புத்திரரிவன்பேர்
சேத்திரத்தில் கோத்திரஞ்சேர் சாத்தானென்று சொல்வார்

---

591. வாய்த்தாரம் - சொல்திறம்

593. வெள்ளிக் கொடி - அரைஞாண்கொடி

594. மண்ணுளுந்தி - மண்ணை உணவாக உண்ணும் ஒருவகைப் பாம்பு என்பர்; தண்டை வளை ஆட்டுகள் - வளையங்களாலான ஆட்டங்கள்

595. சவடி - ஓர் அணிகலன்

597. கணக்கனார் - அரசுக் கணக்கர்

கைத்திறமும் சொல்திறமும் கலைத்திறமும் உடையான்
காசிக்கு வடக்கேபோகும் கண்டகை ஆற்றுடையான்
மானிடவர் தம்மைப்போலே மதித்திடப் படாது
வைக்கவேணும் கைக்காயிரம் மெய்க்காயிரமாக
தெண்ணுயிரண்டு பெண்களுக்கு[த்] தாளுடைய வீரன்
சித்திரஞ்சேர் பங்குனி உத்திரத்தில் பிறந்தான்
ஆட்டைக் கொருநாள் வரிசைஆயிரம் பொன்கூட
ஆர்த்தமான சேவகர்க்கு ஆயிரம் பொன்னுங்கூட
சோட்டைக்காத்துக் காரரோடு வேட்டை விளையாடி
சொக்கநாதர் கோட்டைக்கொரு பக்கத்தி லிருப்பாய்
பக்கத்தி லிருப்பதற்குப் பாண்டியனார் சொல்ல
பண்டு முத்தளக்கும் மணிமண்டபத் திருந்தார்
அக்குவடந் தானணிந்த சொக்கநாதர் கோயில்
ஆர்த்தமாள முன்னே தாதிநித்தியஞ் சேவித்தாள்
பாண்டியனாய் வந்திருக்கும் ஆண்டவனார் தம்மை
பத்தி மறவாத வண்ணஞ்சுத்தி வருவார்கள்
கூண்டவர்கள் சம்பளத்தை வாங்கி வருவார்கள்
கோட்டையிலே செங்கரும்பு நாட்டுஞ் சேவ[க]ரும்
தொண்டை மண்டலத்திலுள்ள துரைமக்களுங் கூடி
தூரத்தில் மணியம்பண்ணுங் காரியக் காரரும்
திண்டுக்கல் திருச்சிராப்பள்ளி மண்டலத்தார்
சேரக்கூடிக் காரியங்கள் பேசத்தொடுத் தாரே

---

601. தெண்ணுயிரண்டு - தெண் இரண்டு; பூரண, புட்கலை எனும் அய்யனாரின் மனைவியர் இருவர் இங்குச் சுட்டப் படுகின்றனர். அய்யனார்க்குப் பங்குனி உத்திரத்தன்று விழா எடுப்பர். அன்றைய தினம் அவர் பிறந்தநாள். இவ்வழக்கம் அருஞ்சுனை காத்த அய்யனார் கோவிலில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.

602. ஆட்டைக்கு - ஆண்டுக்கு; ஆர்த்தம் - நிறைவு

603. சோட்டைக்காத்துக்காரர் - பேராசைக் காரரான சதிகாரர்கள்

605. அக்குவடம் - எலும்புமாலை

607. கோட்டையில் செங்கரும்பு நாட்டுஞ் சேவகர் - இவர்களும் ஆட்சிக்கெதிரான கலகத்தில் ஈடுபட்டவர்கள் எனத் தெரிகிறது. இவர்களுடன், தொண்டை மண்டலத்துத் துரைமார்கள், மணியக்காரர்கள், திருச்சி, திண்டுக்கல் மண்டலத்தார் எனக் குறிக்கப்படுவதால், பாண்டி நாடு அய்யனார் சேவகம் செய்யும் காலத்தில் விரிந்து பரந்திருந்தது எனலாம்.

## அய்யனார் சேவகம், செய்தலும் சில அதிகாரிகளின் ஆதங்கமும்

### வேறு

எத்தனை சேவகர் பாண்டியன் கைக்குளிருந்தும்
இன்றைக்கு வந்தவன்போலே சமர்த்தர்க ளில்லை
பத்தெட்டுக் கோடி கருவலத்துள்ள பணத்தை
பத்துமாஸ்த்தைக் குள்ளாக[ச்] சம்பளத்துக்கென்று பறியான்
தென்பூமி பாண்டிய னில்லாமல் போனதிறத்தால்
தேசப் பரதேசிராசா வைத்துதே தெய்வம்
பொன்பணந்தேடி கருவலத்தில் நாமும் போட்டால்
போக்கு வரத்தறியா தறிந்திட் டிருப்பார்
ஒற்றைக் குதிரைக்காரன் தன்னை[ப்]பிள்ளையாய் நம்பி
ஊழியக்காரரைத் தள்ளுதற் காசையு முண்டு
செத்துப் போகாமலே சம்பளம்வாங்கித் திரிந்தால்
சீஎன்று பெண்டுகள் நம்மையும் கூடி[ச்]சிரிப்பார்
ஏழெட்டு[க்] கையுண்டோ நெற்றியில்கொம்புண்டோ இல்லை
ரெண்டு கைக்காரனை மிச்சமாய் சொல்லுவதென்ன
வாளதை[ப்] பன்னருவாளாக[ச்] சற்றே வளைத்து
வைத்துக் குழைகளறுத்து[ப்] பிழைத்திட மாட்டோம்
கீழ்மக்கள் தன்னை[க்] கெடுக்கின்ற மேல்மக்கள் தன்னை
கிடையிலே போய்குத்திப் போட்டாலது மெத்தக்கெட்டி
காளைப் பிரம்பொன்றைச் சேவகன்றன்னை கடத்த
கைக்கூலி வைத்துக்கோ சொன்னாலுங் கேட்குமோகாது
கோழிக்கறிமேலே நெய்மிக ஊத்தித்தின்ற கும்பி
கொதிக்கும் படிக்கு நின்றாடுதே சேவகக்கூத்து
வாளுக்குந் தோளுக்கும் காலுக்கும் சம்பளம்வைத்தால்
வாணால் போனாலும் மதுரையைவிட் டேகமாட்டான்
பூத்தானங் காட்டியே பால்குடிக்கின்ற பூனை
புள்ளிக்காரன் கையில் கொள்ளிக்கம்பறை பட்டால் போமோ

---

614. தள்ளுதற்கு - நீக்குதற்கு

616. மிச்சமாய் - பெரிதாய்

618. இடையில் - படுக்கையில்; மெத்தக் கெட்ட - மிகவும் நல்லது

620. சேவகக் கூத்து - செய்யும் தொழில்

622. பூத்தானம் - மிகுந்த பரிவோடு வளர்த்தல்;

சூத்திரத்தாலே யிவ்விடத்தை விட்டுத் துரத்தி
தூஷணம் பண்ணவே வூழியக்காரர் துணிந்தார்
வஞ்சனை பில்லிகள் விட்டாலுஞ் செத்திடமாட்டான்
வாயிலே நஞ்சுகுடித்தாலுஞ் செத்திட மாட்டான்
கஞ்சனை[க்] கிருஷ்ணன் மலைக்கு ளடைத்த கதைபோல
கடுவாயிடத்திலே ஒப்புக் கொடுத்தல் கருமம்
என்று துணிந்தந்த சேவகக்காரர் இடும்பாய்
இராசாவின் தேவியிடத்திலே செய்தி யியம்ப
மன்றில் மதுரைக்குப்[ப்] பாக்கியந்தான் கொண்டுவந்தாய்
வாழ்வுக்குக் கேடாய் முளைத்தது நக்ஷிமரந்தான்
மாதவொன்றுக்கு நாலாயிரம் பொன்னென்று வைத்தால்
மாதாவே தாலிவிலையிட தட்டான் வருவான்
பேதமுண்டான வயிற்றுவலி எனக்கென்று பேரிட்ட
போதிலே நாங்களும் கூடப் பிழைத்தோம்
சோத்தை யுண்டுண்டு திரியும் ராசரைத் தொட்டு
சும்மா வயிற்றுவலி யென்றுளத்தத் தொடுத்தாள்

**வயிற்றுநோய் எனப் பாண்டியன் தேவி கூற அரசன் வருந்துதல்**

சாத்திரப் பாண்டியன் கூப்பிட்டு[ப்] பண்டிதனாரை
சாக்காலம் வாராத நோக்காடு கொண்டாளே தையல்
வஞ்சனையாலே பிடித்த வயிற்று வலியை
மாற்றி வைப்பேனென்று அனுப்பிடப் போனால் மனையில்
மிஞ்சின நாடியைச் சோதிக்கக் கையை நீட்டென்றான்
... ... ... ...

---

623. சூத்திரத்தால் - சூழ்ச்சியால்; தூஷணம் -இழிவு படுத்துதல்

624. பில்லிகள் - பில்லி சூனியம் எனும் மாந்திரீகம்

625. கஞ்சனைக் கிருஷ்ணன் மலைக்குள் அடைத்த கதை - பிரமன் ஆயர் சிறுவர்களையும், கால்நடைகளையும் மறைத்தபோது கிருஷ்ணன் அவர்கள் ஒவ்வொருவருமாகி, ஓராண்டு காலம் நடந்து வந்தபின் பிரமன் கிருஷ்ணனைப் பணிந்து வணங்கினான்.

630. உளத்தத் தொடுத்தாள் - வயிற்றுவலி என நடித்தாள்; உளறுதல்

631. சாக்காலம் - மரணம்; நோக்காடு - நோய்; தையல் - பாண்டியன் தேவி

633. நாடி - கைநாடி

எந்த னுடம்பிலே நோக்காட்டுக் காரியமில்லை
இன்னுமியம்புவேன் கேளென்று மங்கையுஞ் சொல்வாள்
தந்திரம் மந்திரிமார்கள் வைக்கவே சொன்னார்
தாரணியி லுள்ள மருந்தாலே தீராச் சளந்தான்
மந்திரம் வேண்டாம் புலிப்பாலும் போய்க் கொண்டுவந்தால்
வயிற்று[வலி] தீரும் தீராதுவேறே மருந்தால்
பண்டிதரே இந்த[ச்]செய்தி யுரைக்க[ப்] பகர்ந்தால்
பல்லக்குடனே தருவேன் குருணி பணத்தை
ஒண்டொடி வார்த்தையைக்[க்] கேட்டந்த பண்டிதனோடி
உலகுக்கு முத்திடு பாண்டியன்கேள்க்க உரைத்தான்

## புலிப்பால் கொண்டு வர சேவகரிடம் கூறல்

### வேறு

பட்டத்துத்தேவி வயிற்றுவலி யென்று பார்க்க[ப்]
போயங்கே நாடியை[ச்] சோதித்தேன்
கொட்டைப் பாக்கு தரத்தில் வயற்றிலே
கும்ப வாயுவுங் கிடந்து புரளுதே
மலையில்போய் புலிப்பால் கொண்டு வந்தாக்கால்
மங்கிலி யத்திற்கு[ச்] சேதமு மில்லையே
நிலையில்லாத மறுமருந்து செய்தால்
நெடுநாளாக நின்றுகொள்ளு மென்றார்
பண்டிதன் வார்த்தைகேட் டந்த[ப்]பாண்டியன்
பண்புடன் மறுவார்த்தை பகர்கின்றான்
மன்றில் நின்ற பழவினை நோயல்ல
மதுரை நாட்டுப் பிணிவந்து தொட்டுதோ

---

637. குருணி - ஒரு மரக்கால் அளவு

638. உலகுக்கு முத்து இடு பாண்டியன் - 'பாண்டிய நாடு முத்துடைத்து' என்பது போல், முத்துக்களை உலகத்தின் பலவிடத்திலிருந்தும் வாங்கிச் செல்வர்.

640. கும்ப வாய்வு - உஷ்ணக்காற்று; 'வாயு', 'வாய்வு' என்றும் கூறப்படும்

641. மங்கிலியம் - மாங்கலியம், தாலி; சேதம் - தீங்கு

642. மறுமருந்து - மாற்றுமருந்து

குன்றில்வாழுங் குறவரைக் கூட்டியே
கூடப்போய்ப் புலிப்பால் கொண்டு வாவென்றார்
மன்றில் ஊழியக்காரர்கள் கூடியே
மதுரைக் கோட்டையின் வாசலைக் காக்கிறோம்
எழுதிப்போட்ட பணங்களைக் காக்கிறோம்
இல்லை என்றா லடிபிடி பண்ணுவோம்
பண்ணாது பண்ணியே பாளையக் காரர்மேல்
படை எடுத்து[ப்] பணங்களை வாங்குவோம்
செம்மையாய்[ப்] புலிபாலுக்குச் சென்றாக்கால்
திரும்பி வாற திராணியோ நாங்கள்தான்
அம்மையாருக்கு[க்] கேடுதான் வந்திட்டால்
அதற்கு நாங்கள் பலிக்கிடா யல்லவே
வேத்த கூழ்கஞ்சி தானுங் கிடையாத
வேலைக்காரர்க்கு[த்] தீமை விசாரிப்போம்
மாஸ்த்தைக்கு ரெண்டு காசிக்கு சேவித்தால்
வம்பிலே சீவன் மாய்ந்திட வேணுமோ
கால்பணம் அரைக்கால் பணம் சம்பளம்
கண்ணடைக்கப் படாத உபத்திரம்
மேல்படிப் புலிவர மாட்டாது
வேலை குன்றாமல் வேறேஆள் போடுங்கோ
மாத மொன்றுக்கு நாலு லச்சம்பணம்
வாங்கித் தின்றால் மலையேறப் போகாதோ
தீதில்லாத மதுரையில் சொக்கனார்
தெருவை[ச்] சுத்தி[த்] திரியவே சம்பளம்
கைக்கூலிக்கு உலக்கை பிடித்தாக்கால்
கம்புக்கூடு கிளப்பாமல் தீருமோ

---

649. திராணி - வலிமை

650. பலிக்கிடா - ஒன்றற்குப் பதிலாக வேறொன்று துன்பப்படுதல்

651. வேத்த - புளித்த; உணவுப் பொருள்கள் நேரம் ஆகிவிட்டால் கெட்டுப்போகும்

652. காசி - காசு, பணம்; சேவித்தல் - ஊழியம் செய்தல்

653. கண் அடைக்கப்படாத உபத்திரம் - ஓய்வில்லாத வேலையால் ஏற்படும் தொல்லை.

657. கம்புக் கூடு - தோளின் கீழ் உள்ள மறைவிடம்; கிளப்புதல் - இடமாறி வலி எடுத்தல்

வெய்ய ஆண்பிள்ளை பெண்கோலங் கொண்டாக்கால்
மீசைதன்னை விரும்பினால் கூடுமோ
உள்ள செய்தியை இல்லாதவன் சொன்னால்
ஒருவரும்அதை உள்கொள்ள மாட்டார்கள்
கள்ள ஊழியக் காரர்சொல் கேட்டபின்
காவல் பாண்டியன் சாத்தாவை நோக்கினார்

### அய்யனாரைப் புலிப்பால் கொண்டுவர அரசன் ஏவுதல்

அடவியில் புலி[ப்]பாலிங்கே வந்தாக்கால்
ஆண்பிள்ளை எல்லாம் பெண்பிள்ளை யாவரோ
படுமலைக்கு[ப்] பயணப் படுமுன்னே
பட்டத்து[த்] தேவியார் நோக்காடு வோடிப்போம்
என்று பாண்டியன் சொல்லவே அய்யனார்
ஏறினாரே குதிரையின் மீதிலே
அன்று மாகாளனான சிறுவனை
அழைத்து[க்] கூடவழி கொண்டு போனாராம்

### அய்யனார் பற்றி ஏளனம் செய்தல்

#### வேறு

இடைவழியி லொருகிழவி தடியூனிச் சொல்வாள்
எனக்குமுண்டு வயிற்றுவலி பாலு வேணுமென்ன
கடையறவே' பால்கறக்க[க்] கடையால் தந்திட்டோர்
சாடையல்ல ஆயிரம்பொன் கூடவைத்துத் தருவார்
அப்படியே யவள்கேள்க்க சப்பாணி யொருவன்
அய்யன் புலிப்பால் கொண[ர்]ந்தால் பையனெழுந்திருப்பேன்

---

657, 658, 659. இல் வருவன சொல்லடைகள்

661. அடவி - சோலை

662. படுமலை - சென்று மீண்டு வருதல் உறுதியில்லாத பயங்கர மலை

664. கூடவழி - வழித்துணைக்காக

666. கடையறவே - முழுதும்; கடையால் - பாத்திரம், பார்க்க: வரி 125; சாடை யல்ல - பொய்யல்ல

667. சப்பாணி - நொண்டி

வைப்புமலை புலிபிடித்து அன்பனிங்கே வந்தால்
மதுரை தன்னில் கிழவரெல்லாம் மாப்பிள்ளையாவாரே
தோற்றமுள்ள புலிப்பால் கரந்துவந்த துண்டால்
சூரியனார் தெற்கேவந்து தோன்றிடுவார் நாளை
சத்திரிய சனங்கள்சொல்ல சேவகர்கள் கேட்டு
சம்பளமு நமக்கினிமேல் உம்பளமும் பெறலாம்
தினமும் நம்மைப் பிடித்திருந்த சனியன் போச்சிதென்றே
திண்ணைகளை மெழுகச்சொல்லி யெண்ணை முழுக்கிட்டார்
மனவிபட்டத்துத் தேவியவள் வயிற்று வலிக்காரி
மலைப்புலிக்குப் பயந்து தலைவாச லடைத்திருந்தாள்

## காட்டில் அய்யனார் செயல்

தடையறவே விடுங்குதிரை கடுநடை நடந்து
தனிப்புலிக ளுறங்குமலைத் தளத்தருகே சென்றார்
மடியாமல் குதிரைதன்னை மாகாளம் பிடிக்க
வாங்கும்படி விட்டிறங்கி மந்திரவாள் கைபிடித்தார்
காடுகட்டி மந்திரத்தால் தன்னைக்கட்டிக் கொண்டு
காட்டருகே குட்டிரெண்டு போட்டருகே கிடக்க
வீடுகட்டிக் குடியிருக்கும் வேடுவரைப் போலே
மிருகமது குகையினுள் முறுக்கி யுடனிமிர்ந்து
வாலெடுத்து செவிஎடுத்து தலையெடுத்துப் பார்த்து
மந்திர வாளிடமாக வடிவழகை[க்] கண்டு
நீலப்புள்ளி விழியுருட்டி கடவாயை நக்கி
நெளிந்து மெல்லக் குட்டியோடு வெளிக்கொண்டுதே
புலிதான்
மாயனுக்கு மகேசனுக்கு மகனிவனா மெனவே
மனிதரறியா திருந்தால் மிருக மறியாதோ

---

668. வைப்புமலை - ஒருமலை

670. உம்பளம் - இலஞ்சம்; கிம்பளம் என்பர்

672. மனவி - மனைவி

675. காடுகட்டி மந்திரம் - காட்டைத் தன் மந்திர சக்தியால் செயலிழக்கச் செய்தல்;

தீயுருவா யெழுந்திருந்த சிவனிவனா மெனவே
சிரத்தையுள்ள மலைப்புலிதான் நிலத்தோடே பணிய
ஆரபார சேவகரே வாரும் வாரும்யென்று
அய்யன் வலதுகை தன்விரல் பிடித்து
சீருடைய வால்குழைந்து செவியோடே மெய்குழைந்து
தெய்வப்புலி யரச ராசனவன் கிட்டச் செல்ல
தலைதடவி முகந்தடவி முதுகுதனை[த்]தடவி
சதுரகிரிப் பாண்டியனார் மதுரைமட்டும் வருவாய்
மலையாமல் வாறேனெனப் புலிப்பாய்ச்சலிலே நிற்க
வலக்கை வெள்ளிக்கொடி பிடிக்க[ப்]புலிக்கழுத்திலிட்டார்
குறித்தபுலிதனைப் பிடித்துச் சிறுவன்கையில் கொடுத்து[க்]
குதிரையுட முதுகில்வைத்து[க்] கல்லணைமேல் குதித்தார்
வெறித்த புலிக்குட்டிரெண்டும் விளையாடி வரவே
மேடுகளும் பறும்புகளும் காடுகளும் கடந்தார்
மலைதனிலே புலிபிடித்து மதுரையில் வருமுன்
வாழுகின்ற மனிதருக்கு மருப்புலி பாய்ந்திடவே
புலிபிடித்து வரப்போன குதிரை வரக்கண்டு
புலியதின் மேல்ஆளேறி வருகின்றான் பாரென்பார்.

## புலிகளைக் கண்டு மக்கள் பயந்து ஓடுதல்

### வேறு

பற்றுங் கோபத்தை வைத்துமே பேணுங்கோ
பட்டத்துத் தேவியால் நஷ்டம் வந்துதே

---

680. தீயுருவாய் ஆன சிவன் - சிவன் சோதி வடிவம் ஆனவர்.

681. ஆரபார சேவகர் - ஆரவாரம் உள்ள படைத்தலைவர்;

682. குழைதல் - பணிவு, அன்புக்காக, குனிந்து, மடித்து, ஆட்டுதல்

683. சதுரகிரிப் பாண்டியனார் - மலையாள நாட்டில் திருவனந்தபுர மாவட்டத்திலுள்ள ஒரு மலை. இது பாண்டியனுக்குரியதாகக் காட்டப்படுகிறது.

685. சிறுவன் - மாகாளன்

686. பறும்பு - பறம்பு, சிறிய மலைமேடு

687. மருப்புலி - மருள்புலி, பயப்புலி.

குறளி வித்தையில் கொண்டுவந் திட்டிட்டான்
குழியைக் கில்லுங்கோ வெளியில் செல்லாதிங்கோ
பூனையைக் கண்டாலும் புலியென் பாரும்
புனலில்லாமலே பூசைகள் பண்ணுவார்
ஆனைக் காரரும் குதிரைக் காரரும்
அண்டையூர் தனில் கொண்டு தப்பினார்கள்
மாடு கன்றுகள் வீட்டுக்குள் கட்டினார்
மனைவி மக்களை[ப்] பரணிலே ஏத்தினார்
கேடுவந்த தென்றோடுவார் சிலர்
கிழவிமார்களை[க்] குழியிலே மூடினார்
பெண்டு பிள்ளையை[க்] கொண்டுமே தப்பினார்
பேட்டைக்காரர்கள் கோட்டையில் ஏறினார்
மண்டியே புலிவந்திடா தென்றார்
வைத்து வைத்துத்தான் தெய்வமாடுவார்
தீர்த்த மாடார் நீற்றைப் பூசுவார்
தீயைப் பேணென்பார் நாயைப் பேணென்பார்
மூர்த்தி மாடனே கார்த்திடா யென்பார்
மூப்புள்ளோர்களை முகட்டி லேத்தினார்
பூவெடாமலே பூசை பண்ணுவார்
பூத்த பெண்களும் வீட்டுக் கேகினார்
கொவ்வைக் காகவே குதிரைமேலேறி
குட்டியோட புலியும் வருகுதே

## புலியின் செய்கைகளும் மக்களின் பயமும்

கொண்டு வந்திட்டான் பண்டைக் கூத்தனும்
குட்டிரெண்டு வந்தெட்டிப் பார்க்குதே
மற்றுஞ் சேவகர் கேட்டுமே ஏகினார்
மதுரை யூரெல்லாங் குதிரையாச்சுதே

---

690. குழி கில்லுதல் - பதுங்குவதற்காக
693. பரண் - மாடி போன்ற தட்டு
698. மூர்த்திமாடன் - ஒரு குல தெய்வம்; முகடு - உயரம்
699. பூத்த பெண்கள் - சமைந்த பெண்கள்; மாத விலக்கானோர் வீட்டுக்கு வெளியில் தங்கியிருப்பார்

பட்டத்து[த்] தேவிக்குத் தந்த சீதனம்
பாலுதூக்கியோகனுக்கிறதென்பாரும்
கூனின் மேலே மண்ணைவாரிப் போடுதே
கொழுத்த கிழவியைப்[ப்] பிளந்துப் போடுதே
ஆனை மாவுத்தர் சேனை ராகுத்தர்
அடுக்களைக் குள்ளே மடக்கிக் கொண்டாராம்
தந்திரஞ் சொன்ன மந்திரிகள்போய்
தரிக்குளிகளை விலைக்கு வாங்கினார்
பந்தி பந்தியாய் வந்த சேவகர்
பாய்சுருட்டியே போய்ப்பதுங் கினார்
குட்டி ரெண்டும்போய் வட்டம் போடுதே
கொல்லை தோறும் போய்[ப்]பல்லைக் காட்டுதே
பட்டி மண்டபத் தேத்திக் கொண்டுபோய்[ப்]
பல்லைக் காட்டுதே குட்டி ரெண்டுதான்
உடுத்த சேலையை நனைத்த பேர்களும்
உறுமிக் காட்டவே கரணம் போடுவார்
அடுத்துக் கண்களை விடுத்துப்[ப்] பார்க்கவே
அப்படா வென்று மண்கப்பினார் சிலர்
கடித்திடாமலே பிடித்துக் கொள்ளுது
கைக்குள் காணுதோ மக்கள் வீரந்தான்
வடித்த கஞ்சிக்கும் பிடித்த சோறுக்கும்
மக்கள் கும்பியில் தகிக்கக்[க்] கொள்ளுமோ
அய்யன் மாகாளன் கையில் புலிதன்னை
அச்சங் காட்டவே வைத்துக் காட்டினார்

---

703. கனுக்கிறது - கனக்கிறது, பாரமாக உள்ளது.

705. மாவுத்தர் - யானைப் பாகர்கள்; ராகுத்தர் - இராவுத்தர்கள் - குதிரைப் பாகர்கள்

706. தரிக் குளிகள் - மறைந்து கொள்வதற்கு உட்கொள்ளும் மாத்திரை மருந்துகள்

707. பந்திபந்தி - வரிசை வரிசையாக

708. கொல்லை - வீட்டுத் தோட்டம்

711. மண்கப்புதல் - குப்புற விழுதல்

713. கும்பியில் தகிக்க - வயிற்றில் செமிக்க

714. அச்சங் காட்ட - பயங்காடட

தெய்வச் சாத்தாவும் பையச்செல்லவே
தெருக்கள் தோறுமே முழக்கம் போட்டுதாம்
மாடு கன்றுகள் தன்னை வெருட்டாமல்
மனிதர் தங்களை[ப்] பார்த்து வெருட்டுதாம்
சாக்ஷியாகவே யித்தனைக்குஞ் சொல்லி
சாதித்தோர்களை யித்தனைக் கோள்சொல்லி
மச்சிவீட்டில் கிடந்தோர் பயப்பட்டு
வாய்வெருவின பேய்போல சந்தியில்
அச்சமில்லாத சன்யாசி மார்கள்போய்
ஆட்டைப் பத்தியே கூட்டை நீக்கிக்கொண்டார்
பெட்டியால் மூடும் பட்டறை செட்டியார்
பெண்ணே பெண்ணே தண்ணீ ரென்குறார்
குட்டி ரெண்டையும் வெட்டுறே னென்றவன்
குப்பை மண்வாயில் கப்பப் பார்க்கிறான்
பலகைமேலே இருக்கின்ற மாப்பிள்ளை
பந்தல் காலிலும் ஒதுக்கிலும் பம்மினார்
பிலமுடன் கண்ணைப் பொத்திய பெண்தனை[ப்]
பிடித்த கையை வலித்துக் கொண்டோடினார்
மாப்பிள்ளை சென்று மாமிமேல் முட்டவே
மாமனார் குறுங்கட்டிலின் கீழாக
கோப்புப் பொன்னோடே அம்பட்ட னோடி[ப்]போய்
கொட்டுக் காரனைப் போட்டே மிதித்தனர்
குரவையிட்ட பணம் வாங்க வந்தவர்
கொட்டுச் செண்டைக்குள் தலைபோட்டனர்

---

719. கூடு - ஆடுகள் அடைக்கும் கிடை

720. என்குறார் - என்கிறார்

721. வெட்டுறேன் - வெட்டுகிறேன்

722. ஒதுக்கு - மறைவிடம்; பம்முதல் - மறைத்திருத்தல்

723. பிலம் - பலம்; வலித்து - இழுத்து

725. கோப்புப் பொன் - திருமணத்துக்கு ஒதுக்கப்பட்ட பொன்; அம்பட்டன் - நாவிதன், கொட்டுக்காரன் - மேளக்காரன்

726. குரவையிட்டபணம் - குரவையிட்டதற்குரிய கூலி; கொட்டு, செண்டை - முழவுக் கருவிகள்

திரளிலே வந்து பாய்ந்த புலிக்குட்டி
சிந்திப் போட்டுதே பந்தியில் சாதத்தை
வாயில் சோறு மடியிலே சிந்தவே
மலையில் குட்டிப்புலி புலிஎன்பாராம்
தீயில் காந்தியோ வேங்கை புலிக்குட்டி
செட்டியார் பட்டறைக் குள்ளே சென்றுதாம்
பீத்தல் பாய்களை மேலேபோட்டுக் கொண்டு
பெரிய பைக்குள்ளே செட்டியார் போய்[ப்]புகுந்தார்
சூத்தப் பாக்குக்கு வந்த பண்டாரத்தின்
சோளிகைதனை[த்] தும்பாக்கி[ப்] போட்டுதாம்
ஆத்திலே தீர்த்தம் ஆடிக் குடங்கொண்டு
அம்மைமார் சேர அப்பனைத் தேடினார்
கூத்துவ னென்று வந்திடும் ராகுத்தர்
குதிரையோடே விழுந்து கிடக்கிறார்
போத்தி மூடிப் பொதிகின்ற கொண்டைகள்
பூச்சியங் கெட்டு சீஎன்று போச்சுதே
வல்லயக்காரர் கண்டு பயப்பட
மலைசலங்கள் மத்துத் தன்னை மீறுதாம்
பல்லைக் கண்டு பயப்பட்ட பண்டிதன்
பாயும் பூனைக்கு மெத்தப் பயப்பட்டான்
சித்திரத்தில் எழுதும் புலிகண்டு
தென்மதுரை புலிக்காடாய் போச்சுதே
முத்தளக்கின்ற மண்டபச் சந்தியில்
மூப்புக்கிருக்கின்ற பாண்டியன் முன்பிலே
கப்பங்கள் கட்ட வருகின்ற ராசாக்கள்
கசசந்திக்குள் குடியிருந் தார்களே

---

727. திரளில் - கூட்டத்தில்

729. காந்தி - வெந்து

730. பீத்தல்பாய் - கிழிந்த பாய்கள்

731. சூத்தப்பாக்கு - கெட்டுப் போன பாக்கு; சோளிகை - தோளிலிருந்து தொங்கும் பை

734. போத்தி - போர்த்தி; பூச்சியம் - அலங்காரம்

739. கசசந்திக்குள் - குகை போன்ற சிறிய பாதைக்குள்

பற்றக் குப்பப்படையை வெருட்டுதாம்
பாண்டியன் முன்னே போய்குதித்தாடுதாம்
உடையவனுக் கடங்காத பெண்கள்தான்
உடுத்தசேலை உடைகுலைந் தோடுதாம்
கோடி வேசைகள் வீட்டுக்குள்ளே சென்று
கும்பலேறி கழுதைபோல் கூப்பிட்டார்
பண்டிதத்துக் கடங்காத நோய்க்காடு
பட்டத்துத் தேவிகுதவிலே பாயுதாம்
சண்டைக்காரப் பயல்கள் கெடுத்தாரே
சளைவாரித் தலையில் கட்டினார்
கையினால் தன்வயிற்றிலே குத்தினாள்
கள்ளமாய்வரும் நோக்காட்டை கொண்டேனே
பொய்யைச்சொல்லி[ப்] புலியை யழைப்பித்தார்
போச்சு போச்சுதே நோக்காடும் போச்சென்றாள்
இன்னும் நோக்காடு இருக்கு தென்றேபுலி
எட்டி[ப்] பார்த்து[ச்] சற்றே வட்டம் போட்டுதாம்
தென்னவன் கிட்ட சேவித்த சாத்தாவே
தீந்து போச்சுதே புலியைத் திருப்பென்றார்
வஞ்சனை பண்ணும் ஊழியக் காரர்கள்
வாசலில் செல்லவே கண்ணைக் காட்டினார்
உறிந்த சேலை உறக்கத்திலே சென்று
ரோசங் கெட்டிட தெருவிலே ஓடினார்
முகட்டிலேறிக் கிடக்குங் கிழவிகள்
முன்னே பாய்ந்து எலும்பிலே முட்டுதாம்
பகட்டி கிட்டவரும் புலிமுன்னாக
பச்சைப் பிள்ளையை[த்] தூக்கி எறிவாராம்
சின்னப் பிள்ளையைத் தீண்டாமல் தாயத்தானும்
சீலைபோகத் தெருவிலே உருட்டுதாம்

---

740. குப்பப் படை - குப்பைப் படை, ஒரு வகைப் படைப்பிரிவு

742. கும்பலேறி - கூட்டமாய்த் திரண்டு

749. கண்ணைக் காட்டுதல் - கண்ணால் ஜாடை செய்தல்

750. ரோசங்கெட்டிட - மானம் கெட்டிட

751. பகட்டி - பொய்யாக நடித்து

கன்னிப் பெண்ணுங் கணவனுஞ் சயனித்த
கட்டில் கீழ்வைத்த வட்டிலும் தாங்கி[த்]தாம்
குதிரை எல்லாம் பந்தியாய்ப் போம்போது
கூடலூரும் புலியாகப் போச்சுதாம்
மதுரை[ப்] பாண்டியனாருட திருமுன்பில்
மலைப்புலியைப் பிடித்துக் கொண்டு வந்தார்

## அய்யனார் புலியைத் திரும்ப அனுப்புதல்

### வேறு

மகராசனே தெய்வ[ப்] பாண்டியனே ஒருவார்த்தை
வயிற்று வலிக்காய் மலையில்புலி கொண்டுவந்தேன்
புகலான பாண்டியன் தேவியிடத்தில் புகந்து
புலிமுகங் கண்டபொழுதிலே நோக்காடு போச்சி நம்
கிளைக்குள் யாராகிலும் நோக்காடுள்ள பேரைக் கேளாய்
கீர்த்தி[ப்] புலிப்பால் கொடுத்தந்த நோயைக்கெடுக்க
அழைத்து வரச்சொல்லி சீக்கிரம் பண்டிதனாரை
அல்லவென்றா லந்த ராணுவத்தாரை யழைப்பாய்
ஊழியக் காரரில் பாலுக்கவசரம் உண்டோ
உம்பளம் சம்பளம் தானெனக் குள்ளதேயல்லாம்
பிழையில்லா சொக்கரில்லாமல் மற்றுமுள்ள பேர்கள்
பெண்டுகளானார் களென்று புலியை[ப்] பிடித்தார்
ஊரிலே வாவென்று காட்டிலே கூப்பிட்டேனுன்னை
உண்மைகுன்றாமல் புலியும் நடந்தது என்னோடே

---

754. சயனித்த - உறங்கிய; வட்டில் - பாத்திர வகைகளுள் ஒன்று; தாங்கித்தாம் - தாங்கிப் பிடித்ததாம்

755. கூடலூர் - மதுரை

758. புகல் - தஞ்சம்; புகந்து - புகன்று, கூறி

759. கிளைக்குள் - சுற்றத்தில்

760. ராணுவத்தார் - படையினர்

761. அவசரம் - உடனடித்தேவை

762. பெண்டுகளானார் - வலிமையற்றுப் போயினர்

பாரப்புலியின் செவிக்குள்ளே ராகத்தைப் பாடி
பாலைக்கறந்தான் கடைகாலில் பாண்டியன் பார்க்க
வீரப்புலிதன்னைக் காட்டிலே போக விடுத்து
வேண்டிய தெல்லாங் கொடுத்தானே பாண்டியன்மிக்க

## அய்யன் ஆரியங்காவுக்குத் திரும்புதல்

ஆருக்கும் நல்லவராகி மதுரையில் அய்யன்
அட்டால சொக்கர் பாண்டியனோடே யனுப்பி
தென்மதுரை விட்டு ஆரியங்காவிலே சென்று
திருக்கோயிலுள்ளே யிருந்தாரே சிங்கா சனத்தில்
புதுமைத் தமிழினான் வீரர்கொள் புதல்வன்
புண்ணியத்தாலந்த அய்யனைப் பாடிப் புகழ்ந்தேன்
ஈஸ்பரன் வாழி பார்பதி யீஸ்பரன் வாழி
எட்டுத் திசையுள்ள ராசாக்கள் எப்போதும்வாழி
மாசில்லா சிந்தாமணிப் புலவோர் தானும் வாழ்க
மக்கள் மானுடர்கள் எப்போதும் நீடுழிவாழ்க

**அய்யன் கதை முற்றுப் பெற்றது.**

---

766. அட்டாலம் - அட்டு ஆலம் - கொடிய நஞ்சு

770. சிந்தாமணிப் புலவர் - இக் கதைப் பாடலாசிரியரின் ஆசானாக இப்புலவர் இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

# அய்யனார் கதைப்பாடல்

## சொல்லகராதி

மா

இணைப்பு 1

# உவமைகள்

| எண் | வரிஎண் | தொடர் |
|---|---|---|
| 1. | 17 | மழை முழக்கம் போலிருக்கும் வாச்சியத்தின் ஓசை |
| 2. | 26 | இந்திரலோகம் வூடுருவும் சந்திரஉதயம் போலே |
| 3. | 122 | தோற்றுப் போனவர் கோலம் போலே |
| 4. | 144 | முயலைத் துடர்ந்திடும் நாய் போலே |
| 5. | 150 | உலகை யளக்கின்ற உன்னைப் போலே |
| 6. | 168 | பந்து போலிலகு கொங்கை |
| 7. | 169 | சீனி போலும் மொழியோ |
| 8. | 171 | பத்திப் பாச்சலுள்ள கத்திவீச்சிப் போலே பக்கம் பாய்ந்த கண்களோ |
| 9. | 172 | வெள்ளைப் பால்மணக்கும் எள்ளுப் பூவைப்போலே வேள்கை மூக்கின் அழகோ |
| 10. | 174 | காட்டனுக்கு[ச்]சீட்டு விட்டாப் போல கமகம என்ற மணமும் |
| 11. | 180 | ஈட்டி போலும் விழியோ |
| 12. | 181 | காசைக் கொள்ளையிட்ட வேசைப் பெண்களைப்போல் கள்ளனுள்ளே கிடக்க |
| 13. | 187 | உண்பதொரு சோறுகறி கொண்டு வந்தபேர்களைப் போல் ஓடி ஓடிக் கிட்டே வருவான் |
| 14. | 194 | பக்கம்பழுத்த கொவ்வைப் பழம்போல் சிவந்தவாயால் |
| 15. | 212 | சீதை என்ற லெச்சிமியைக் காதல் வைத்தால் னானுமொரு ஸ்ரீராமன் போலிருப்பேனே |

| எண் | வரிஎண் | தொடர் |
|---|---|---|
| 16. | 213 | வீதியிலே சிவனோடே வெருட்டுதற்கு என்னைப்போலே வேறேயொரு சேவகனுண்டோ |
| 17. | 227 | போக்கிடுவேன் சீவனென்று புலிபோல முழங்கினனே |
| 18. | 239 | கார்வண்ணன் இடைச்சிகளைக் களவாண்ட தன்மையைப் போல் |
| 19. | 243 | துரும்பதுதான் இவனெனவே தூண்போலே வந்து நின்றாய் |
| 20. | 244 | பரும்பூதம் போலேவந்து படப்போறாய் என உரைத்தாள் |
| 21. | 261 | லெக்ஷிமியாள் சிறையிருந்த இலங்கையைப்போல் முடியாதோ |
| 22. | 288 | மண்மேலேஆசைவைத்தால் மனிதரைப் போல் பிழைத் திடுவார் |
| 23. | 305 | மண்ணுலகில் பெண்களைப் போல் வந்திடுமோ தந்திரந்தான் |
| 24. | 308 | அரக்கன் தலையத்து மலை போலவே விழுந்தான் |
| 25. | 329 | நன்றான நெற்றியிலே பட்ட நாதத்தைப்போல் திருநாமங்களும் |
| 26. | 341 | பழுத்த பழம்போலே வார்த்தை |
| 27. | 348 | கிட்டிக் கம்புபோலே காதிலிட்ட குழையாடவே |
| 28. | 350 | பாலுக்குள்ளே போட்ட வாழைப்பழம் போலே வார்த்தையும் |
| 29. | 358 | உதிக்கின்ற பாம்பு ஒரு துதிக்கை மாலையாகவே |
| 30. | 425 | வேகமாகிய பூதப் பிசாசுகள் மேகம் போலே திசைஎட்டுஞ் சூழவே |
| 31. | 455 | ஓசைத் தேவர்கள் ஓடினாற் போல் ஓடிக் காட்டுதே மயிலினங்கள் |
| 32. | 456 | தூண்டித் தலையத்த ராச்சதன்போல் துள்ளிக் குதிக்குதே மான்கன்றுகள் |

| எண் | வரிஎண் | தொடர் |
|---|---|---|
| 33. | 457 | கூரை வரையேந்து அரக்கனைப்போல்<br>குரங்கு வருக்கையின் கனிசுமக்க |
| 34. | 458 | மனதினிடங் கண்ட முனிவனைப் போல்<br>மயிலின் விளையாட்டைப் புலிபார்க்க |
| 35. | 460 | இடுப்பில் தடிவைத்த யாதவர்போல்<br>யேந்து வாலோடே மந்திபாய |
| 36. | 461 | உடுக்கத் துணியற்ற சன்னியாசிபோல்<br>ஓடித் திரியுதே மிருகமெல்லாம் |
| 37. | 462 | புதிய கலியாணப் பெண்களைப் போல்<br>பூத்து மணக்குதே மரங்களெல்லாம் |
| 38. | 463 | பதியி லிருக்கின்ற பரதேசிபோல்<br>படிந்து பூவினில் வண்டிசைக்க |
| 39. | 464 | பலர்க்கும் எளிதான பரத்தையைப்போல்<br>பழுத்த மரங்களிற் பறவைமோத |
| 40. | 475 | தாங்கும் பல்லாக்கைத் தானிருத்தித்<br>தவழ்ந்து வடிவுள்ள சிறுபிள்ளைபோல் |
| 41. | 490 | வைப்புப் பணம் போலுதவும் மாகாளப் பூதமே |
| 42. | 492 | தண்டைபோல் சதங்கை மணிகண்டை வடம் பூட்டி |
| 43. | 494 | நாணிக்கொண்ட பெண்களைப் போல் கோணிக்கொண்ட<br>முகற்றில் |
| 44. | 498 | பூதப்படை பேய்ப் படைகள் சீதக் கடல் போலே |
| 45. | 499 | பொட்டகத்தைப் போலே வெள்ளைவடங்கள் பிடித்தார் |
| 46. | 502 | வேட்டைப் புலிபோல் மதுரைக் கோட்டைக்குள்ளாக |
| 47. | 509 | பாம்புச் சட்டை போட்டிடும் பட்டாணி போலிருக்கும்<br>பைசாக்கு போட்டொருவன் பாதையிலே வந்தான் |
| 48. | 535 | கட்டியக்காரரைப் போலே குதிரைகனைக்க |
| 49. | 541 | கத்திப் பிரகாசம் மின்வெட்டுப் போலவே காட்ட |

| எண் | வரிஎண் | தொடர் |
|---|---|---|
| 50. | 554 | விட்ட குதிரை மிதிக்கின்ற தொனியது<br>மேகத் தொனியது போலவே நின்றிலங்க |
| 51. | 555 | தொட்ட விசை கடிவாளத்தை யிறுக்கவே<br>சூறாவளிபட்ட துரும்பு போலேற்படும் |
| 52. | 557 | மத்துக்கடைகின்ற தயிர் போலே சூழச்சூழ<br>வட்டமிட்டு மேகமண்டலத்தைப் பார்த்திடுமாம் |
| 53. | 573 | ஒருக்கா லிருக்காலினின் றெட்டிப் பாத்தாப்போல் |
| 54. | 587 | மாசில்லாத தாசன்தனைப் பார்த்து விடுங்கணை<br>ஆனைக்குட்டி போலே கோணிக்கோணி வட்டமிடும் |
| 55. | 595 | முருக்கு வல்லையம் போல் மீசை |
| 56. | 593 | விரிசன் பாம்புபோல் வெள்ளிக் கொடியழகும் |
| 57. | 594 | மண்ணுளுந்தி போலே தங்கக்கொடி மின்னுவதும் |
| 58. | 600 | மானிடவர் தம்மைப் போலே மதித்திடப் படாது |
| 59. | 676 | வீடுகட்டிக் குடியிருக்கும் வேடுவரைப் போலே<br>மிருகமது குகையினுள் முருக்கி யுடனிமிர்ந்து |
| 60. | 718 | வாய் வெருவின பேய்போல சந்தியில் |
| 61. | 742 | கோடி வேசைகள் வீட்டுக்குள்ளே சென்று<br>கும்பலேறிக் கழுதைபோல் கூப்பிட்டார் |

இணைப்பு 2

# சொல்லடைகள்

| எண் | வரிஎண் | தொடர் |
|---|---|---|
| 1 | 234 | வழக்கெடுத்துப் பேசினாக்கால் வந்தமிச்ச மொன்றுமில்லை |
| 2. | 237 | இடையில் வந்து கூடினவர் இடுக்கத்துக்கு உதவுவாரோ |
| 3. | 242 | அனியாயஞ் செய்தவரை ஆகாசம் விட்டிடுமோ |
| 4. | 245 | ஆளடுமை செய்த குற்றம் அரண்மனையார் பொறுப்பார்களோ |
| 5. | 270 | திருட்டியிலே பிடித்ததுண்டால் தீராது நோக்காடு |
| 6. | 277 | தர்க்கமில்லாக் காச்சல் வந்தால் சர்க்கரையும் கசந்திடுமே. |
| 7. | 278 | கலகம் வரும் காலமதில் கழுவேறக் கூடாது. |
| 8. | 287 | பத்தியத்தை முறித்தவர்க்குப் பண்டிதமும் பலியாது |
| 9. | 523 | சிறுபயத்தைக் கறிமிளகாய் திருத்துவதற்குப் போமோ |
| 10. | 622 | புள்ளிக்காரன் கையில் கொள்ளிக் கம்பறை பட்டால் போமோ. |
| 11. | 657 | கைக்கூலிக்கு உலக்கை பிடித்தாக்கால் கம்புக்கூடு கிளப்பாமல் தீருமோ |
| 12. | 658 | வெய்ய ஆண்பிள்ளை பெண்கோலங் கொண்டாக்கால் மீசைதன்னை விரும்பினால் கூடுமோ |
| 13. | 559 | உள்ள செய்தியை இல்லாதவன் சொன்னால் ஒருவரும் அதை உள்கொள்ள மாட்டார்கள். |
| 14. | 663 | அடவியில் புலிப்பாலிங்கே வந்தாக்கால் ஆண்பிள்ளை எல்லாம் பெண்பிள்ளை யாவரோ |
| 15. | 668 | வைப்புமலை புலிபிடித்து அன்பனிங்கே வந்தால் மதுரை தன்னில் கிழவரெல்லாம் மாப்பிள்ளையாவரோ |

இணைப்பு - 3

# பெயரகராதி

**ஊர்ப்பெயர்கள்**

1. அயோத்தி
2. ஆயர்பாடி
3. ஆரியங்காவு
4. ஆவினன் குடி
5. இலங்கை
6. காசி
7. காஞ்சிபுரம்
8. கூடலூர்
9. சிற்றம்பலம்(சிதம்பரம்)
10. சீர்காழி
11. திருச்சிராப்பள்ளி
12. திண்டுக்கல்
13. திருப்புலியூர்
14. திருவாரூர்
15. தென்மதுரை
16. பாளையம்
17. பழனி
18. மதுரை
19. வடகாசி
20. வத்திராயிருப்பு

**தெய்வப்பெயர்கள்**

I.

1. அம்பலசுவாமி
2. அய்யன்
3. ஆனைமுகன் (தந்திமுகவன்)
4. எமன்
5. கன்னிமார்கள்
6. சாஸ்த்தா
7. திருமால்
8. பத்திரகாளி
9. பரமசிவன்
10. பார்வதி
11. பூதகணங்கள்
12. முருகன்
13. முனி

II.

1. அக்கினிபாலன்
2. இந்திரர்
3. சூரியர், சந்திரர்
4. தேவர்கள்
5. பிரமர்
6. மோகினி
7. வருணன்
8. வாய்வுபகவான்

**உறுப்புப் பெயர்கள்**

1. இடுப்பு
2. எலும்பு
3. கண்
4. கழுத்து
5. காது (செவி)
6. கால்
7. கும்பி (வயிறு)
8. கை
9. கொங்கை
10. கொண்டை
11. சடை
12. சிரசு
13. தொண்டை
14. தோல்
15. தோள்
16. நாக்கு
17. நெற்றி
18. பல்
19. பாதம்
20. மண்டை
21. மார்பு
22. மீசை
23. முகம்
24. முடி
25. முதுகு
26. மூக்கு
27. ரத்தம்
28. வாய்
29. விந்து
30. விரல்

**மரப்பெயர்கள்**

1. பாக்கு
2. மூங்கில்
3. வருக்கை
4. வாழை

**பறவையின் பெயர்கள்**

1. அன்னம்
2. ஈக்கள்
3. கிளி
4. குயில்
5. குருவி
6. கோழி
7. மயில்
8. வண்டு

**கோட்டையின் பெயர்கள்**

1. கையிலாசக் கோட்டை
2. மதுரைக் கோட்டை
3. வைகுண்டக் கோட்டை

**இசைக்கருவியின் பெயர்கள்**

1. கொட்டு
2. சிங்கி
3. சிங்குழல்
4. துந்துமி
5. பம்பை
6. மத்தளம்
7. மல்லாரி
8. முரசு
9. வீணை

**மலையின், பெயர்கள்**

1. இமைகிரி
2. கயிலாச மலை
3. கருமலை
4. காளத்திமலை
5. குடகமலை
6. சதுரகிரி
7. துரோண மலை
8. பழனி மலை
9. புலிகள் உறங்கும் மலை
10. பொதிகை மலை
11. வயிர மலை
12. வெள்ளி மலை
13. வெள்ளிமாமலை
14. வேங்கிடா மலை
15. வைப்புமலை

**விலங்கின் பெயர்கள்**

1. ஆடு
2. கடாய்
3. கடுவாய்
4. கரி
5. கலை

6. கழுதை
7. கன்று
8. காளை
9. குட்டி
10. குதிரை
11. குரங்கு
12. சிங்கம்
13. நாகம்
14. நந்தி
15. நாய்
16. பசு
17. பரி
18. பூனை
19. புலி
20. மந்தி
21. மாடு
22. மான்
23. முயல்
24. யானை
25. விடை
26. வேங்கை

ஆள் பெயர்கள்

1. அகத்தியர்
2. இலட்சுமி
3. கஞ்சன்
4. கிங்கிலியர்
5. குருகேந்திரன்
6. சப்பாணி
7. சாத்தனார்
8. சீதை
9. சிந்தாமணி(புலவர்)
10. சுமதி
11. தாசன்
12. பாண்டியன்
13. பொம்மியர்
14. மன்மதன்
15. மாகாளன்(சிறுவன்)
16. ராவணன்
17. வல்லரக்கன்
18. வாலி
19. வீரவாகு
20. ஸ்ரீராமன்

**தொழிற்பெயர்கள்**

1. அடியார்கள்
2. ஆண்டி
3. ஆலித்தடிக்காரர்
4. இடைச்சி
5. இடையன்
6. ஊழியக்காரர்
7. கட்டியக்காரர்
8. கணக்கனார்
9. கம்மாளர்
10. கருமம் செய்வோர்
11. காரியக்காரர்
12. காவலர்
13. கூத்தனார்
14. கோட்டைக்காத்துக்காரர்
15. சன்னியாசி
16. சேவகன்
17. தட்டான்
18. திருடுவோர்
19. தூதுவர்கள்
20. பண்டிதனார்
21. பாளையக்காரர்
22. புரோகிதர்
23. மந்திரி
24. மருத்துவர்கள்
25. மாவுத்தர்
26. ராகுத்தர்
27. ராணுவத்தார்
28. வல்லயக்காரர்
29. வாதையிடுவோர்
30. வேடுவர்

**செடிகொடிப் பெயர்கள்**

1. எள்ளு
2. கமலம்
3. சுண்டச் செடி
4. தாமரை
5. பயறு
6. மஞ்சள்
7. மல்லிகை
8. மிளகு
9. வெற்றிலை

**மந்திரப் பெயர்கள்**

1. குறளி வித்தை
2. மோடி

3. வாகன வித்தை

4. பில்லி சூனியம்

**ஆறு, நதியின் பெயர்கள்**

1. அம்மை ஆறு
2. கண்டகி நதி
3. கண்டகை ஆறு
4. காவேரி நதி
5. சோனை நதி
6. பொன்னையாறு
7. வைகை நதி

**சாதிப்பெயர்கள்**

1. அம்பட்டன்
2. குறவர்
3. செட்டியார்
4. தேவன்
5. பண்டாரம்
6. பண்டிதன்
7. யாதவர்

**உணவுப் பெயர்கள்**

1. கறி
2. கூழ்
3. சக்கரை
4. சோறு
5. தயிர்
6. தேன்
7. நெய்
8. பழங்கஞ்சி
9. பழம்
10. பால்

**வசைப்பெயர்கள்**

1. அனியாயக்காரன்
2. கள்வன்
3. கள்ளன்
4. காவாலி
5. சண்டாளன்
6. சனியன்
7. சீ
8. நீசன்
9. நீலி
10. பரதேசி
11. பரத்தை
12. பாதகன்
13. பாவி
14. வேசை

**உறவுப் பெயர்கள்**

1. அப்பன்
2. அம்மா
3. ஆண்பிள்ளை
4. ஆத்தாள்
5. இளையோர்
6. உடையவன்
7. கணவன்
8. கன்னிப்பெண்
9. கிழவன்
10. கிழவி
11. தங்கைச்சி
12. தம்பி
13. தமையன்
14. தாய்மாமன்
15. புத்திரன்
16. புருஷன்
17. பெண் பிள்ளை
18. மனைவி
19. மாப்பிள்ளை
20. மாமனார்
21. மாமி
22. மைத்துனர்

**நோயின் பெயர்கள்**

1. காச்சல்
2. வயிற்றுவலி
3. வைப்பு நோய்

**கனியின் பெயர்கள்**

1. கொவ்வைப் பழம்
2. வாழைப்பழம்

**தீர்த்துப் பெயர்கள்**

1. கராதித்தீர்த்தம்
2. காசித் தீர்த்தம்
3. கேதாரத் தீர்த்தம்
4. தவத் தீர்த்தம்
5. வத்திராப்புத்தீர்த்தம்

**நவரத்தினப் பெயர்கள்**

1. சங்கு
2. சந்திரகாவி
3. தங்கம்
4. பவளம்
5. பொன்
6. மாணிக்கம்
7. முத்து
8. வயிரம்
9. வெள்ளி

**நறுமணப் பெயர்கள்**

1. கதம்பம்
2. கற்பூரம்
3. சந்தனம்
4. செந்தூரம்
5. சவ்வாது
6. சாதிலிங்கம்
7. சாம்பிராணி

**வடமொழிப் பெயர்கள்**

1. கஸ்த்தூரி - கத்தூரி
2. சாஸ்த்திரம் - சாத்திரம்
3. துஷ்டன் - துட்டன்
4. நஷ்டம் - நட்டம்
5. புருஷன் - புருசன்
6. ஸ்தோத்திரம் - தோத்திரம்

**ஆயுதங்களின்பெயர்கள்**

1. அரிவாள்
2. அம்பு
3. ஈட்டி
4. உலக்கை
5. கடாசத்து
6. கத்தி
7. கேடயம்
8. சங்கிலி
9. பன்னருவாள்
10. வில்
11. வாள்

**ஊர்வன**

1. எறும்பு
2. பாம்பு
3. புழு

**மொழியின் பெயர்**

1. கன்னடம்
2. தமிழ்
3. தெலுங்கு

**நிறப்பெயர்கள்**

1. பச்சை
2. நீலம்

**ஆடையின் பெயர்கள்**

1. உருமால் கட்டு
2. கச்சை
3. கம்பளி
4. கம்பிச்சேலை
5. கக்ஷரிய சேலை
6. சமுதாடு
7. சோமன்

8. தலைப்பா
9. தொப்பி
10. பஞ்சாச்சரம்
11. பட்டு
12. பட்டுச் சேலை
13. பொற்சரிகை
14. முந்தி

**அணிகலன்களின்பெயர்கள்**

1. கடுக்கன்
2. கண்டாமணி
3. குஞ்சம்
4. குண்டலம்
5. குழை
6. குவடு
7. சதங்கை
8. சவடி
9. சிருப்பாணி
10. தங்கக் கொடி
11. தண்டை
12. தாவடம்
13. பதக்கம்
14. பரிவட்டம்
15. மணிவடம்
16. மோதிரம்
17. வல்லயம்
18. வளையல்
19. வெள்ளிக்குப்பி

**எண்ணுப் பெயர்கள்**

1. அஞ்சு
2. அறுபத்திநாலு
3. ஆயிரம்
4. ஆறு
5. இரண்டு
6. இருப்பத்தி எட்டு
7. ஈரேழ்
8. எட்டு
9. ஏழு
10. ஏழுகோடி
11. ஏழெட்டு
12. கோடி
13. கோடி கோடி
14. தெண்ணுயிரண்டு
15. தொண்ணூறு
16. நான்கு

17. நாலாயிரம்

18. நாலு லட்சம்

19. பதினாறு

20. பதினெண் கோடி

21. பத்து

22. பத்து நூறாயிரம்

23. பத்துலட்சம்

24. பன்னிரெண்டு

25. மூவாறு

26. மூன்று

இணைப்பு 4

# கலைச்சொல்லகராதி

## இணைப்பு 5

### அய்யனார் கயிலை முதல் பொதிகை வரை கடந்து வந்த இடங்கள்

1. கயிலாச மலை
2. கராதித்தீர்த்தம்
3. சிவலிங்கக் கோடி
4. பாவையப் பெண்கள் விளையாடும் பூமி
5. பச்சைநீலப் பூமி
6. காளை மாமுகில் ஓயாத பூமி
7. கனிகளுண்டு களிக்கின்ற பூமி
8. எழுதிடாமல் படிக்கின்ற பூமி
9. ராச்சதப்பூமி
10. மரமுள்ள பூமி
11. புலிமுகமுள்ள மானிடர் பூமி
12. தேவர் தவஞ்செய்யும் பூமி
13. தெலுங்கு, கன்னடம் பேசிய பூமி
14. காவில் கல்மழை பெய்திடும் பூமி
15. பாதாள பூமி
16. காற்றினால் பெண்கள் கற்பங்கொள் பூமி
17. அருச்சுனப் பூமி
18. தவ தீர்த்தம்

19. கேதார தீர்த்தம்

20. குருகேந்திரன் பூமி

21. ஐயன் குரு பூமி

22. ஐயோத்தி

23. வடகாசி தீர்த்தம்

24. சோனை நதிக்கரை

25. துரோண மலை

26. காளத்தி மலை

27. வேங்கிடா மலை

28. அண்ணாமலை

29. அம்மை ஆறு

30. காஞ்சிபுரம்

31. பொன்னை யாறு

32. திருப்புலியூர்

33. சீர்காழி

34. சிற்றம்பலம்(சிதம்பரம்)

35. பழனிமலை

36. ஆவினன்குடி

37. குடக மாமலை

38. கருமலை (சபரிமலை)

39. ஆரியங்காவு

40. பொதிகையிலுள்ள சொரிமுத்தையன் கோவில்

41. மதுரை

## பயன்பட்ட நூல்கள்


ஆறுமுகப் பெருமாள் நாடார், கு. (பதிப்பாசிரியர்)
**வலங்கை நூல் எனும் வெங்கலராசன் கதை**, நாகர் கோவில், 1968.

கோமதி நாயகம், **தமிழில் வில்லுப் பாட்டுகள்**, சென்னை.

சண்முகம் பிள்ளை, மு. (பதிப்பாசிரியர்) **அடிமதிக்குடி. அய்யனார் பிள்ளைத் தமிழ், தமிழாய்வு**
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

சிங்கார வேலு முதலியார், ஆ. **அபிதான சிந்தாமணி**
(மறுபதிப்பு), புதுடெல்லி

தசரதன், ஆ. **அருஞ்சுனை காத்த அய்யனார் கோவில்** - கையேடு (அச்சில்)

தசரதன், ஆ. (பதிப்பாசிரியர்). **வலங்கை** மாலை (பதிப்பில்)

Stuart Blackburn, (Translation Vallarakkan *Katai, In Performance as Paradigm*

ஒட்டக்கார சுவாமிக் கதைப்பாடல் (காகிதப் பிரதி)

சுடலை மாடசுவாமிக் கதைபாடல் (காகிதப் பிரதி)

கருக்கு வேலய்யனார் கதைப்பாடல் (காகிதப் பிரதி)

வல்லரக்கன் கதைப்பாடல் (காகிதப் பிரதி)

# தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்: வெளியீடுகள்

1. மார்க்கண்டேயன் கதைப்பாடல், பக்.520, விலை ரூ.50, பதிப்பு ஆண்டு 1992 (மகா சிவராத்திரியன்று இரவு முழுவதும் உறங்காதிருப்பதற்காகப் படிக்கப்பெறுவது).
2. திருக்குற்றாலப் புராணம், பக்.504, விலை ரூ.50, பதிப்பாண்டு 1993 (கி.பி. 1595 இல் பாடி அரங்கேற்றம் செய்யப்பெற்ற குற்றாலத்திற்குரிய முதல் தலபுராணம்).
3. முப்புராதி அம்மன் கதைப்பாடல், பக்.400, விலை ரூ.49, பதிப்பாண்டு 1994 (முப்புராதி அம்மன் கோயில்களில் பாடப்பெறும் வில்லுப்பாட்டு நூல்).
4. அய்யனார் கதைப்பாடல், பக்.160, விலை ரூ.40, பதிப்பாண்டு 1994 (அய்யனார் – ஐயப்பன் வழிபாட்டை வலியுறுத்தும் வில்லுப்பாட்டுக் கதை).
5. ஒட்டக்காரசுவாமிக் கதைப்பாடல், பக்.120, விலை ரூ.30, பதிப்பாண்டு 1994 (மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குக் கொடிமரம் வெட்டச் சென்றவர்க்குத் தூது போனவர் கதை).
6. கம்சன் கதைப்பாடல், பக்.140, விலை ரூ.35, பதிப்பாண்டு 1994 (கம்சன் வதைபற்றிய வில்லுப்பாட்டுக் கதை).
7. தமிழில் வசைப்பாடல்கள், பக்.140, விலை ரூ.35 (வசை கவி ஆண்டான் கவிராயன் பற்றிய ஆய்வு நூல்)
8. மாரியம்மன் கதைப்பாடல், பக்.180, விலை ரூ.45, பதிப்பாண்டு 1994 (தமிழகத்தில் மாரியம்மன் வழிபாட்டை உணர்த்தும் வில்லுப்பாட்டுக் கதை)
9. அருஞ்சுனை காத்த அய்யனார் கையேடு, பக்.150, விலை ரூ.45 பதிப்பாண்டு 1994 (திருச்செந்தூர் தேரிக்கருகிலுள்ள அய்யனார் கோயில் வழிகாட்டி நூல்).
10. ஸ்ரீபத்மநாப சுவாமி கதைப்பாடல், பக்.200, விலை ரூ.49, பதிப்பாண்டு 1994 (திருவரங்கத்துப் பெருமாள் திருவனந்தபுரத்தில் பள்ளி கொண்ட வரலாற்று வில்லுப்பாட்டுக் கதை)